ஆ.—தன்னை, அதிஸௌலப்யமேபற்றாசாக முகம்பாராமலநாதரிக்கிறஹீந ஸம்ஸாரிகளை, அவ்வநாதரங்கண்டு விடமாட்டாத ஸ்நேஹமுடைய தான், அநாதரகந்தமற ஆதரிக்கிறவிடமர்ச்சாவதாரம்; அதுவே ப்ரபத்திக்கு விஷயமென்கிறார்

௩௯. பரத்வாதிகள் ப்ரபத்திக்கு விஷயமாகாது, அர்ச்சாவதாரமே விஷயமென்னுமிடத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார்; (பூகத ஜலம்)இத்யாதியால். ஸந்நிஹிதமாயும்ப்ரயத்நஸாத்யமாய்க்கொண்டு துர்லபமான பூகதஜலம்போலே, அந்தராத்மதயாஸந்நிஹிதமாயும் அஷ்டாங்கயோகஸாத்யமாய்க்கண்ணுக்கெட்டாத வந்தர்யாமித்வமும்; அதிவிப்ரக்ருஷ்டமாயெட்டுப்படாத ஆவரணஜலம்போலே அவ்வருகுபட்டு ஸம்ஸாரவர்த்திகளுக்கெட்டுப்படாத பரத்வமும், அதுபோலதிவிப்ரக்ருஷ்டமன்றியேயிருந்தும் மநுஷ்யாதிகளுக்குசெல்லப்போகாத பாற்கடல்போலே அண்டத்துக்குட்பட்டும் மூலமுடங்களான மநுஷ்யாதிகளுக்கு அலப்யமான வ்யூஹமும், முன்புசொன்னவைபோலன்றியே ஸந்நிஹிதமாயும் தத்காலவர்த்திகளுக்கே உபஜீவ்யமாய் பிற்பட்டார்க்குபஜீவ்யமல்லாத பெருக்காறுபோலே பூமியிலே அவதரித்தும் தாதாத்விகர்க்கே ஆச்ரயணீயமாய் பிற்பட்ட பாவிகளுக்கெட்டாதேபோன விபவமும், ப்ரபத்திக்கு நித்யவிஷயமாகமாட்டாது; முன்புசொன்னவைபோலன்றியே அயத்நஸித்தமாய் அதிஸந்நி

---

தன்னையநாதரிக்கிறவர்களைத் தானுதரித்து நிற்கிறவிடம்.
௩௯. பூகதஜலம்போலே அந்தர்யாமித்வம்; ஆவரணஜலம்போலே பரத்வம்; பாற்கடல்போலே வ்யூஹம்;

---

ஜீ.—పూర్వస్మాదపి పూర్వస్మాజ్జ్యాయాంశ్చైవోత్తరోత్తరః॥ సౌలభ్యతో జగత్స్వామీ సులభోహ్యుత్తరోత్తరః" "ஏவம் பஞ்சப்ரகாரோஹமாத்மநாம் பததாமத:। பூர்வஸ்மாதபிபூர்வஸ்மாஜ்ஜ்யாயாம்ச்சைவோத்தரோத்தர:॥ ஸௌலப்யதோ ஜகத்ஸ்வாமீ ஸுலபோஹ்யுத்தரோத்தர:" என்று பரத்வாதிகளெந்திலும் ஸௌலப்யமுண்டாயிருக்கச்செய்தே, பூர்வபூர்வத்தைக்காட்டில் உத்தரோத்தரத்துக்கு ஸௌலப்யமதிசயித்திருக்குமென்று தானே யருளிச்செய்கையாலே ஸௌலப்யத்துக்கெல்லைநிலம் அர்ச்சாவதாரமிறே.

௩௯. பரத்வாதிகளுடைய தௌர்லப்யத்தையும் அர்ச்சாவதார ஸௌலப்யத்தையும் த்ருஷ்டாந்தமுகேந தர்சிப்பிக்கிறார் மேல், (பூகத ஜலம்)என்றுதுடங்கி. த்ருஷ்ணார்தனுக்கு தேசாந்தரத்தில் போகவேண்டாதபடி நிற்கிறவிடந்தன்னிலே யுண்டாயிருக்கச்செய்தேயும், கொட்டுங்குந்தாலியுங்கொண்டு கல்லினாலல்லது குடிக்கக்கிடையாத பூகதஜலம்போலேயாய்த்து, கண்டுபற்றவேணுமென்றாசைப்பட்டவனுக்கு ஹ்ருதயத்திலேயிருக்கச்செய்தேயும், "கட்கிலீ" என்கிறபடியே கண்ணுக்குவிஷயமன்றிக்கே, அஷ்டாங்கயோகரூபயத்நத்தாலே காணவேண்டும்படியான வந்தர்யாமித்வம். அவனுக்கு, அண்டத்துக்குப்புறம்பே பெருகிக் கிடக்கிறஆவரணஜலம்போலேயாய்த்து, இவனுக்கும் "அப்பால்முதலாய்நின்றவளப்பெரியவாரமுது" என்கிறபடியே லீலாவிபூதிக்கப்பால்பட்டிருக்கிற பரத்வம். அப்படி அதிவிப்ரக்ருஷ்டமன்றியே அண்டாந்தர்ப்பூதமாயிருக்கச்செய்தேயும், அவனுக்கு துஷ்ப்ராபகமான பாற்கடல்போலேயாய்த்து, இவனுக்கும் "பாலாழி நீ கிடக்கும் பண்பை யாங்கேட்டேயும்" என்கிறபடியே கேட்டிருக்குமத்தனையல்லது சென்று காணவரிதாம்படியிருக்கிற வ்யூஹம் ப்ரத்யாஸந்நமாயும் தாத்காலிகர்க்குபஜீவ்யமாய் பாச்சாத்யனானவனுக்கு

ஆ.—ஹிதமாய் எப்போதும் நிலைநிற்கிற பெருக்காற்றில் தேங்கினமடுக்கள் போலே, அஷ்டாங்கயத்நதூரகமநநிரபேக்ஷமாய் கோயில்முதலான திவ்யஸ்த்தலங்களிலும் க்ருஹங்களிலும் ஸந்நிஹிதமாய் ஸ்த்தாவரப்ரதிஷ்டையாகநிலைத்து, தத்ததவதாரங்களின் நித்யவிக்ரஹவிசிஷ்டமாய் கண்ணுக்கிலக்கமாய்க்கொண்டு ஸர்வஸமாச்ரயணீயமான வர்ச்சாவதாரமே, துர்லபவிஷயபராங்முகையான ப்ரபத்திக்கு ப்ரியதமவிஷயம். பெருவிடாயன் குளிர்ந்து தெளிந்து நிறைந்த தடாகமருகிருக்க, அத்தைவிட்டு, கிணறுகல்லியும், அண்டத்தப்புறத்தெழப்பாய்ந்தும், பாற்கடலிற் பாரிபுகுந்தும், வற்றினவாற்றிலோடிச் சென்று தண்ணீர்குடித்து விடாய் கெடத் தேடுமாப்போலே யாய்த்து, ஸுலபவிஷயமான வர்ச்சாவதாரத்தை விட்டு துர்லபங்களான வந்தர்யாமித்வாதிகளைக்கிட்டி ப்ரபத்தி பண்ணத் தேடுகை.

சுO. இப்படி ப்ரபத்திக்கு ஸுலபவிஷயமாமளவேயல்ல, ருசிஜநகத்வாதிகளுமிவ்வர்ச்சாவதாரத்துக்குண்டென்கிறார், (இதுதான்) இத்யாதியால். இப்படிப்ரபத்திக்குநேரேவிஷயமானவிவ்வர்ச்சாவதாரந்தான் "ఇచ్ఛయా విషయాసక్తో నరో௨నర్థపరమ్పరామ్। యాత్యత్రాముత్ర చాత్యర్థం విచారే తత్ర కా రతిః॥ మూత్రద్వారమిదం గుహ్యం యత్రముక్తం జగత్త్రయమ్।అపానవాయునా జుష్టం సర్వథైవాతికుత్సితమ్" "இச்சயா விஷயாஸக்தோ நரோ௨நர்த்தபரம்பராம்।யாத்யத்ராமுத்ரசாத்யர்த்

பெருக்காறுபோலே விபவங்கள்; அதிலே தேங்கின மடுக்கள்போலே அர்ச்சாவதாரம்.

சுO. இதுதான் சாஸ்த்ரங்களால் திருத்தவொண்ணாதே,

ஜீ.—துர்லபமானபெருக்காறுபோலேயாய்த்து, ''மண்மீதுழல்வாய்'' என்கிறபடியே பூமியிலேயவதரித்து ஸஞ்சரித்தும், தத்காலவர்த்திகளுக்காச்ரயணீயமாய்பிற்காலத்திலுள்ளனைவிவனுக்குக்கிட்டாதபடியானவிபவம். முன்பு சொன்னவைபோலன்றிக்கே, அவனுக்குவிடாய் கெடப்பருகலாம்படி பெருக்காற்றிலே தேங்கின மடுக்கள்போலேயாய்த்து-இவனுக்கும் தேசகாலகரணவிப்ரக்ருஷ்டமன்றிக்கே கோயில்களிலும் க்ருஹங்களிலும் என்றுமொக்கவெல்லார்க்கும் கண்ணுக்கிலக்காம்படிநிற்கிற ''பின்னானார்வணங்கும் சோதி''யான வர்ச்சாவதாரம், ''ధామనికేతనేష్వపి కుటీకుఞ్జేషు'' ''பௌமநிகேதநேஷ்வபி குடீகுஞ்சேஷு'' என்கிறபடியே பலவிடங்களிலும் ஸந்நிதிபண்ணிநிற்கும்படியைநினைத்திறே, (மடுக்கள்போலே) என்று பஹுவசநத்தாலே யருளிச்செய்தது. அவதாரகுணங்களெல்லாம் அர்ச்சாஸ்த்தலங்களிலே பரிபூர்ணமாயிருக்கையாலும், அவதாரவிக்ரஹங்களை அர்ச்சாரூபேண பலவிடங்களிலும் பரிக்ரஹித்துக்கொண்டிருக்கையாலும், (அதிலே தேங்கின மடுக்கள்போலே) என்கிறது.

சுO. இப்படி ஆச்ரயணருசிபிறந்தார்க்கு ஆச்ரயணீயத்வே ஸுலபமாயிருக்குமளவேயன்று, ருசிஜநகத்வாதிகளுமிவ்வர்ச்சாவதாரத்துக்குண்டென்று இதின் வைபவத்தை யருளிச்செய்கிறார் மேல், (இதுதான்) என்று துடங்கி. ப்ரக்ருதமானஸௌலப்யாதிகுணயோகத்தையுட்கொண்டு (இதுதான்) என்று பராமர்சிக்கிறார்; (சாஸ்த்ரங்களால் திருத்தவொண்ணா) மையாவது-ஹிதாநுசாஸநம்பண்ணுகிற ச்ருதிஸ்ம்ருத்யாதி சாஸ்த்ரங்களானவை, அருசிபிறக்கும்படி இதரவிஷயங்களினுடைய தோஷாதிக்யத்தையும். ருசிபிறக்கும்படி பகவத்விஷயத்தினுடைய குணாதிக்யத்தையுமுபதேசித்தாலும், அவற்றாலிதரவிஷயங்களைவிட்டு இவ்விஷயத்தைப்பற்றும்படி பண்ணப்போகாமை; துர்வாஸநாபலம் உபதேசத்தை நிரர்த்தக

ஆ.— தம்விசாரேதத்ரகா ரதி:॥மூத்ரத்வாரமிதம் குஹ்யம்யத்ரமுக்த்தம் ஜகத்த்ரயம்। அபாநவாயுநா ஜுஷ்டம் ஸர்வதைவா திகுத்ஸிதம்" என்றே வமாதிகளால் விஷய நிந்தைபண்ணும் ஹிதாநுசாஸநசாஸ்த்ரங்களாலே சாஸித்து திருத்தவொண்ணாதபடி, அப்ராப்தங்களுமாய் அபோக்யங்களுமாய் ஜுகுப்ஸிதங்களுமான ஹேயவிஷயங்களிலே, மீட்கவொண்ணாதபடி பெருமிடர்செய்துமண்டி, பகவத்விஷயமென்றால் கற்றங்கண்ட யானைபோலே முகம்மாறிக்கொண்டு, அநாதிகாலமேபிடித்து விமுகராயகர்த்தப்பட்டு அஸத்கல்பராய்ப் போரும் சேதநர்க்கு; பகவத்விஷயமென்றால் வேப்பங்குடிநீராய் "யாதானும்பற்றி நீங்கிப்" போருகிற வைமுக்க்யத்தை மறுவலிடாதபடி ருசிவாஸனைகளுடன் மாற்றி, "தன்பாலாதரம் பெருகவைத்த" என்று தன்னைக்கோகாட்டலாட்டும் விஷயங்களை காரித்துமியும்படி, மெய்யான ஸ்வருசியை பலபர்யந்தமாக விளைப்பிக்கக் கடவதாய், பற்றற்று விடாதபடியான தன்பக்கலுண்டான ருசி ஸ்வஸௌஶீல்யாவிஷ்காரத்தாலே ஒருபடி பிறந்தால் "திவத்தைத்தரும் மெய்" என்று இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹாரம் பண்ணுமயத்நஸித்தோபாயமாய் "உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே" என்றுபாயாத்த்யவஸாயிகளானால் "எனக்குத்தேனே பாலே" இத்யாதிப்படியே நிரதிசயபோக்யமான உபேயமாயிருக்கு

விஷயாந்தரங்களிலே மண்டி விமுகராய்ப்போரும் சேதநர்க்கு வைமுக்க்யத்தை மாற்றி ருசியை விளைக்கக் கடவதாய், ருசிபிறந்தாலுபாயமாய், உபாயபரி

ஜீ.—மாக்கிவிடுமிறே; "జన్మాన్తరసహస్రేషు యాబుద్ధిర్భావితానృణామ్। తామేవ భజతే జన్తురుపదేశో నిరర్థకః" "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு யா புத்திர்ப்பாவிதா ந்ருணாம்। தாமேவ பஜதே ஜந்துருபதேசோ நிரர்த்தக:" என்னக்கடவதிறே; (விஷயாந்தரங்களிலே மண்டி விமுகராய்ப் போரு)கையாவது "சிலம்படியுருவிற்கருநெடுங்கண்ணார் திறத்தனாயறத்தையே மறந்து புலம்படிந்துண்ணும் போகமே பெருக்கி" என்றும், "சுரிகுழல் மடந்தையர் திறத்துக்காதலே மிகுத்துக் கண்டவாதிருந்த" என்றும், "மாதரார்கயற்கணென்னும் வலையுட்பட்டழுந்துவேனை" என்றும் சொல்லுகிறபடியே இதரவிஷயங்களிலே அத்யபிநிவிஷ்டராய் "யாதானும்பற்றி நீங்கும் விரதத்தை" யேறிட்டுக்கொண்டு, பகவத்விஷயத்தில் முகம் வைக்க இசையாதே வர்த்திக்கை; இப்படிபோரும் சேதநர்க்கு (வைமுக்க்யத்தைமாற்றி ருசியை விளைக்கை) யாவது - "போதரேயென்றுசொல்லிப் புந்தியிற்புகுந்து தன்பாலாதரம் பெருகவைத்தவழகன்" என்கிறபடியே ஸ்வஸௌந்தர்யாதிகளாலே சித்தாபஹாரம்பண்ணி, தன்னைக்காணவேண்டோமென்றிருக்குமிருப்பைக் குலைத்து, கண்டகண்மாற வைக்கமாட்டாதபடி பண்ணுகை. (ருசிபிறந்தாலுபாயமாகை)யாவது இப்படி தன் வைலக்ஷண்யதர்சநத்தாலே தன்னை நித்யாநுபவம் பண்ணப் பெறவேணுமென்னும் ருசி பிறந்த வநந்தரம், "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய்" என்கிறபடியே ஸம்ஸாரநிவ்ருத்தி பூர்விகையான ஸ்வப்ராப்திக்கு தானே ஸாதநமாகை. (உபாயபரிக்ரஹம் பண்ணினால் போக்யமுமாயிருக்கை)யாவது தன்னை யுபாயமாக பரிக்ரஹித்தால் உபேயஸித்திக்கொருதேசவிசேஷத்திலே போமளவும் பார்த்திருக்கவேண்டாதே, "அணியரங்கனென்னமுதனைக்கண்டகண்கள் மற்றொன்றினைக்காணாவே" என்றும் "எனக்குத்தேனே பாலே கன்னலே யமுதே திருமாலிருஞ்சோலைக்கோனே" என்றும் சொல்லுகிறபடியே நிரதிசயபோக்யமாயிருக்கையாலே, தானே யுபேய

ஆ. —மென்கிறார். ஆக உபாயோபேயமாய் தது பயருசிஜநகமாய் இதரவிஷயருசிமோசகமாய் தேசாத்யுபாதியற ஸர்வஸுலபமாய் அநாதரிப்பாரை யாதரிக்குமதாய் ப்ரபத்த்யநுகுணமாய் ஸர்வகுணஸம்பூர்ணமாய் ப்ரபந்ந ஜநகூடஸ்த்தர்க்குச் சரணவரணவிஷயமுமான அர்ச்சாவதாரமே ப்ரபத்திக்கு நியதவிஷயம் ; இந்நியதியே ப்ரபத்திக்குள்ளதென்று கீழோடே ஸம்பந்தம்.

௪௧. மேல் (இதில் ப்ரபத்திபண்ணும்) என்று துடங்கி ("ఇదంశరణమ్" "இதம் சரண") மளவாக இவ்வர்ச்சாவதாரத்தில் ப்ரபத்திபண்ணுமதிகாரி த்ரைவித்த்யத்தையும், அதில் முக்க்யாதிகாரிவிசேஷத்தையு மருளிச்செய்கிறார், (இதில்) இத்யாதியால். ப்ரபத்திக்கு நியதவிஷயமான விந்தவர்ச்சாவதாரத்தில், பரஸமர்பணரூபப்ரபத்திபண்ணும் நிவ்ருத்த்யதிகாரிகள், ப்ரபதநஹேதுபேதத்தாலே மூவர்.

௪௨. அவர்களாரென்ன (அஜ்ஞரும் ஜ்ஞாநாதிகரும் பக்திவிவசரும்) என்கிறார்.

---

க்ரஹம் பண்ணினால் போக்யமுமாயிருக்கும்.

௪௧. இதில் ப்ரபத்திபண்ணுமதிகாரிகள் மூவர்.

௪௨. அஜ்ஞரும், ஜ்ஞாநாதிகரும், பக்திவிவசரும்.

---

ஜீ. —முமாயிருக்கை. ஆகப்ரபத்திக்கு குணபூர்த்தியுள்ளவிடமே விஷயமாக வேணுமென்றும், அதுதானுள்ளது அர்ச்சாவதாரத்திலேயென்றும், அத்தைப்பற்ற ஆழ்வார்களெல்லாரும் ப்ரபத்திபண்ணிற்று இவ்விஷயத்திலேயென்றும், இவ்விஷயத்திலே யெல்லாகுணங்களும் புஷ்கலங்கள் என்றும், விசேஷித்துப்ரபத்திக்கபேக்ஷிதகுணங்கள் விசதமாகப்ரகாசிப்பதிங்கேயென்றும், இதுதான் தன்னுடைய நைரபேக்ஷ்யாதிகளை யழியமாறி, தன்னை அநாதரிப்பாரை யாதரித்துக்கொண்டுநிற்கிற ஸ்த்தலமென்றும், பரத்வாதிகளோரொருப்ரகாரத்தாலே துர்லபம் இது ஸர்வப்ரகாரஸுலபமென்றும், இவ்வளவேயன்று இவ்விஷயம் ருசிஜநகமுமாயுபாயோபேயமுமாயிருக்குமென்றும், சொல்லப்பட்டது ; இத்தாலுபாயோபேயங்களிரண்டும் தானேயாய், ஸ்வேதரவிஷயவிரக்திபூர்வகமாக ஸ்வவிஷயருசியை ஜநிப்பிக்குமதாய், ஸர்வஸுலபமாய், தன்படிகளை யழியமாறிக்கொண்டு தன்னையநாதரிப்பாரையுமாதரிக்குமதாய், ப்ரபத்த்யபேக்ஷிதகுணோஜ்ஜ்வலமாய், ஸமஸ்தகுணஸம்பூர்ணமாய், ப்ரபந்நஜநகூடஸ்த்தர்க்கு உபாயவரணவிஷயமாயிருந்துள்ள அர்ச்சாவதாரமே ப்ரபத்திக்கு நியதவிஷயமென்றதாய்த்து.

௪௧. (ப்ரபத்திக்கு தேசநியமமும்) என்று துடங்கி, இவ்வளவுமுபாயவரணாத்மிகையான ப்ரபத்தியினுடைய தேசகாலாதிநியமாபாவமும் விஷயநியமமும் தர்சிப்பிக்கப்பட்டது ; இப்படி விஷயவிசேஷத்தை தர்சிப்பித்தவநந்தரம் பகவச்ச்சாஸ்த்ராதி ஸித்தமான வதிகாரிவிசேஷங்களையும் ப்ரகாசிப்பிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, அதிகாரிவிசேஷத்தை யருளிச்செய்கிறார், (இதில் ப்ரபத்திபண்ணுமதிகாரிகள் மூவர்) என்று. அதாவது ஸௌலப்ப்யாதிகுணபூர்த்தியாலே ப்ரபத்திக்கு நியதவிஷயமான இவ்வர்ச்சாவதாரத்தில் ப்ரபத்திபண்ணுமதிகாரிகள், ப்ரபதநஹேதுபேதத்தாலே மூன்றுவகைப்பட்டிருப்பர்களென்கை.

௪௨. அவர்களாரென்னுமாகாங்க்ஷையிலே யருளிச்செய்கிறார், (அஜ்ஞரும்) என்றுதுடங்கி. (அஜ்ஞ)ராகிறார் - பகவல்லாபத்துக்குறுப்பாக ஸாதநாநுஷ்ட்டாநம் பண்ணுகைக்கீடான ஜ்ஞாநமில்லாதவர்கள்; அஜ்

ஆ.—சுரு. இதரஸாதநங்களறியவுமநுஷ்ட்டிக்கவு மரிதென்றும்(அஜ்ஞாநத்தாலே) ஸாதநாந்தரங்களை விட்டு, அவை யிரண்டுக்குமெளிதான ப்ரபத்திபண்ணும்(ப்ரபந்நர்) ஸ்த்தூலதர்சிகளான (அஸ்மதாதிகள்) என்று துச்ச்சீகரிக்கிறார்; இதரஸாதநம் ஸ்வரூபத்துக்கப்ராப்தம், ப்ரபதநம் ஸ்வரூபப்ராப்தமென்றறியாமையாகிற அஜ்ஞாநத்தாலே ப்ரபந்நரென்றும் யோஜிப்பர்கள்; துஷ்கரத்வாதிப்ரபத்தியால் விடுகை இரண்டுக்குமொக்கும்; அஜ்ஞாநமசக்திக்குபலக்ஷணம். ஸாதநாந்தரம் பரதந்த்ர ஸ்வரூபநாசகம், ப்ரபதநம் ஸ்வரூபாநுரூபமென்கிற (ஜ்ஞாநாதிக்யத்தாலே ப்ரபந்நர்) நாதமுநிகள் துடக்கமான (பூர்வாசார்யர்கள்). பகவத்ப்ரஸாதலப்த்தையான பக்தியின் பாரதந்த்ர்யஜ்ஞாந காலுஷ்யத்தாலே (ப்ரபந்நர்) ''மயர்வறமதிநலமரு''ளிப்பெற்ற (ஆழ்வார்கள்).

---

சுரு. அஜ்ஞாநத்தாலே ப்ரபந்நர் அஸ்மதாதிகள்;
ஜ்ஞாநாதிக்யத்தாலே ப்ரபந்நர் பூர்வாசார்யர்கள்;
பக்திபாரவச்யத்தாலே ப்ரபந்நர் ஆழ்வார்கள்.

---

ஜீ.—ஞாநமசக்திக்குமுபலக்ஷணம்;(ப்ராபகாந்தரபரித்யாகத்துக்குமஜ்ஞாநாசக்திகளன்று) என்று மேலே யிவர்தாமே யருளிச்செய்கிறாரிறே. (ஜ்ஞாநாதிக)ராகிறார்-ஜ்ஞாநசக்த்யாதிகளுண்டாயிருக்கச்செய்தேயும், பகவதத்யந்தபரதந்த்ரமான ஸ்வரூபயாதாத்ம்ய தர்சநத்தாலே, உபாயாந்தரங்கள் ஸ்வரூபவிருத்தமென்று பரித்யஜிக்கும்படிக்கீடான ஜ்ஞாநபூர்த்தியுடையவர்கள். (பக்திவிவச)ராகிறார்-ஒன்றையுமடைவுபட வநுஷ்ட்டிக்கக்ஷமரல்லாதபடி பகவத்ப்ரேமாதிசயத்தாலே சிதிலகரணராயிருக்குமவர்கள்.

சுரு. இப்படி யிவ்வஜ்ஞாநாதிகளடியாக ப்ரபத்தி பண்ணினவர்கள் இன்னாரென்னுமிடங் காணலாமிடமுண்டோ வென்னுமாகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார், (அஜ்ஞாநத்தாலே) என்று துடங்கி. (அஜ்ஞாநத்தாலே ப்ரபந்நர்) என்றது-இதரோபாயாநுஷ்ட்டாநத்திலிழிகைக்கு ஈடான ஜ்ஞாநாதிகள் முதலிலே யில்லாமையாலே, அநந்யகதிகளாய்க்கொண்டு பகவத்விஷயத்திலே பரந்யாஸம் பண்ணினவர்களென்றபடி; (அஸ்மதாதிகள்) என்று ஸ்வநைச்யாநுஸந்த்தாநத்தாலே மந்தாதிகாரிகளோடே தம்மையுங்கூட்டி யருளிச்செய்கிறார். (ஜ்ஞாநாதிக்யத்தாலே ப்ரபந்நர்) என்றது - உபாயாந்தரங்கள்ஸ்வரூபநாசகமென்று நடுங்கும்படியானஸ்வரூபயாதாத்ம்யதர்சநத்தால் வந்த ஜ்ஞாநபூர்த்தியாலே அநந்யகதிகளாய்க்கொண்டு, ஸ்வரூபாநுரூபமாக பகவதி ந்யஸ்தபரரானவர்களென்றபடி;(பூர்வாசார்யர்களா)கிறார் - நாதயாமுநயதிவராதிகள்.(பக்திபாரவச்யத்தாலே ப்ரபந்நர்) என்றது - பகவத்ப்ரேமபௌஷ்கல்யத்தாலே, ''காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்'' என்றும் ''இட்டகாலிட்டகை'' என்றும் சொல்லுகிறபடியே சிதிலகரணராயிருக்கையாலே, ஸாதநாநுஷ்ட்டாநத்துக்கு ஆளன்றிக்கே அநந்யகதிகளாய்க் கொண்டு, அவன்பக்கலிலே பரஸமர்பணம் பண்ணினவர்களென்றபடி; பக்திபரவசர்க்கு ஸாதநாநுஷ்ட்டாநம் பண்ணப்போகாதென்னுமிடம், ''உன்னைக்காணுமவாவில் வீழ்ந்து நானெங்குத்தேனுமல்லேன்''என்றும்''என்கொள்வன்'' என்கிறபாட்டிலும் ஆழ்வார் ஸுஸ்பஷ்டமாக வருளிச்செய்தாரிறே.

ஆ.—சச. அஜ்ஞாநாதிஹேதுகமான வதிகாரிபேதோக்திக்கு ஹ்ரு தயமருளிச்செய்கிறார்மேல், (இப்படி) இத்யாதியால். அஜ்ஞாநாதிஹேதுபே தத்தாலே ப்ரபத்த்யதிகாரத்தை இப்படி பிரித்துச் சொல்லுகிறதும், இவ் வதிகாரிகளுக்கு தந்தாமதிகரித்த அஜ்ஞாநாதிஹேதுகப்ரபத்திவிசே ஷங்களிலுண்டான ப்ரதிபத்தி நியதி விசேஷத்தைப் பற்ற. ப்ராப்தாப்ரா ப்த ஸ்வரூப ஜ்ஞாநமில்லாத முற்பட்டவர்களுக்கு அஜ்ஞாநஹேதுக ப்ர பத்தியிலும் துஷ்கரத்வப்ரதிபத்தி நடக்கிலும், ப்ராப்தாப்ராப்த ஜ்ஞாந முள்ள நடுவிலவர்களுக்கு ஜ்ஞாநாதிக்யஹேதுக ப்ரபத்தியிலும் ஸ்வரூப ஜ்ஞாநம் நடையாடிலும், பக்திபரவசரான பிற்பட்டவர்களுக்கு பக்திபார வச்யஹேதுக ப்ரபத்தியிலும் நிஷ்டையாயிருக்குமென்றபடி.

சச. இப்படி சொல்லுகிறதும் ஊற்றத்தைப்பற்ற.

ஜீ.—சச. இப்படி அஜ்ஞாநாதிகளிலோரொன்றே இவர்களுக்கு ப்ர பதநஹேதுவாகச் சொல்லுகைக்கு மூலமின்னதென்கிறார், (இப்படி) என்று துடங்கி. அதாவது அஜ்ஞாநாசக்திகளும் ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞாநமும் பகவத்பக்தியுமாகிற இவை மூன்றிலும்; மூவர்க்குமந்வயமுண்டாயிருக்கச் செய்தே ஓரொன்றே இவர்களுக்கு ப்ரபதநஹேதுவாகச் சொல்லுகிறதும் இவற்றிலோரொன்றே இவ்வதிகாரிகள்பக்கல் உறைத்திருக்கையாலே யென்கை. இத்தால் முற்பட்டவர்கள்பக்கல் ஜ்ஞானபக்திகளிரண்டும் குறைந்து அஜ்ஞாநமே மிஞ்சியிருக்கும்; நடுவிலவர்கள்பக்கல் அஜ்ஞாந மற்பமாய் பக்தியுமளவுபட்டு ஜ்ஞாநமே மிஞ்சியிருக்கும்; பிற்பட்டவர்கள் பக்கல் அஜ்ஞாநமத்யற்பமாய் ஸ்வரூப ஜ்ஞாநமும் குறைவற்றிருக்கச் செய்தே ப்ரேமமே கரைபுரண்டிருக்கும்; ஆகையாலெல்லாம் எல்லார்பக் கலிலுமுண்டேயாகிலும், அற்பங்களானவை கிடக்கச்செய்தே அதிக மானதுவே யவ்வவர்க்குப் ப்ரபதந ஹேதுவாமென்றதாய்த்து.—இந்த யோஜநைக்கொருகுறையுண்டு - "மயர்வறமதிநலம் பெற்ற வாழ்வார்களுக் கும், அஜ்ஞாநம் சிறிது கிடக்கிறதுண்டென்று கொள்ளவேண்டிவருகை யாலே: ஆனால் செய்வதென் என்னில், (ஊற்றத்தைப் பற்ற) என்கிற வித்தையநுஸந்த்தாநபரமாக்கி யோஜிக்குமளவிலிவ்விரோதமில்லை; அப் போது (இப்படி) இத்யாதிக்கு அஜ்ஞாநாசக்திகளும் ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞாநமும் பகவத்பக்தியுமாகிற விம்மூன்றினுடையவு மநுஸந்த்தா நம் மூவர்க்குமேதேனுமொருபடி யுண்டாயிருக்கச்செய்தே, ஓரொன் றே யிவர்களுக்கு ப்ரபதநஹேதுவாகச் சொல்லுகிறதும், இவற்றிலோ ரொன்றிலே யிவ்வதிகாரிகளுக்கூற்றமாகையாலே என்று பொருளாகக் கடவது; அதாவது அநந்யகதிகளாய் ப்ரபந்நராகைக்குடலான அஜ்ஞா நாதித்ரயாநுஸந்த்தாநமும்மூவர்க்குமுண்டானாலும், மூன்றிலும்வைத்துக் கொண்டு ப்ரசுரமானதே தந்தாமுக்கு அநந்யகதிகளாய் ப்ரபத்தியிலிழி கைக்குஹேதுவாகவநுஸந்த்தித்திருக்கையாலே யென்றபடி. இதில் ப்ரத மாதிகாரிகளுக்கு அஜ்ஞாநாநுஸந்த்தாநம் ஸ்வரஸம்; நடுவுசொன்னவர் களுக்கும் ப்ராமாணிகராகையாலே அஜ்ஞாநத்தினுடைய ஸவாஸநநி வ்ருத்தி கூடாமையால் அஜ்ஞாநாநுஸந்த்தாநங்கூடும்; பிற்பட்டவர்கள் "மயர்வறமதிநலம்பெற்றவர்களாகையாலேஅஜ்ஞாநாநுஸந்த்தாநம்நைச்ய நிபந்த்தநமாமித்தனை.

ஆ.—சடு. இந்த ஹேதுத்ரயத்தின் காரணத்ரயத்தை யருளிச்செய்கிறார்மேல். இந்தஅஜ்ஞாநாதிகளில்அஜ்ஞாநாசக்திகள்அசித்தத்த்வத்தைப்பற்றிவரும், துர்ஜ்ஞேயத்வதுஷ்கரத்வங்கள் ப்ராக்ருதகரணஸங்கோசநிபந்தநமாய் வருகையால்; ஜ்ஞாநாதிக்யம் ஆத்மஸ்வரூபத்தைப்பற்றிவரும், ப்ராப்த்யப்ராப்திகள் ஸ்வரூபாநுஸந்த்தாநநிபந்த்தநமாய் வருகையால்; பக்திபாரவச்யம் ஈச்வரதத்த்வத்தைப்பற்றிவரும், பாரவச்யம் பகவத்வைலக்ஷண்யஜ்ஞாநநிபந்த்தநமாய் வருகையால்.

சசு. இந்தபேதங்கண்டவிடமுண்டோவென்ன உண்டென்கிறார், ("என்னான்") இத்யாதியால். "என்னான் செய்கேன்" என்கிற வாழ்வாருடைய ப்ரபதநோக்தியிலே, அஜ்ஞனான நானென்செய்கேன், அப்ராப்தனான நானென்செய்கேன், பக்திபரவசனான நானென்செய்கேன், என்றிம்மூன்றுபேதமுமுண்டு.

---

சடு. இம்மூன்றும் மூன்றுதத்த்வத்தையும் பற்றிவரும்.

சசு. "என்னான்செய்கேன்" என்கிறவிடத்தில்இம்மூன்றுமுண்டு.

---

ஜீ.—சடு. இவ்வஜ்ஞாநாதித்ரயத்துக்கும் காரண மின்னதென்கிறார், (இம்மூன்றும்)என்றுதுடங்கி.(மூன்று தத்த்வத்தையும்பற்றிவரும்)என்றது ஸாதநாநுஷ்ட்டாநத்தில்அஜ்ஞாநாசக்திகளுக்குமூலம், கர்மநிபந்த்தநமானவசித்ஸம்பந்த்தமாகையாலேஅஜ்ஞாநம்அசித்தத்த்வத்தைப்பற்றிவரும்; இதரஸாதநங்கள்ஸ்வரூபவிருத்த்தமென்றுபரித்யஜிக்கைக்குடலானஜ்ஞாநபூர்த்திக்கடி, மத்த்யமபதத்தில் சொல்லுகிறஆத்மஸ்வரூபயாதாத்ம்யதர்சநமாகையாலே, ஜ்ஞாநாதிக்யமாத்மதத்த்வத்தைப்பற்றிவரும்; ஒன்றையுமடைவுபடவநுஷ்ட்டிக்கமாட்டாதபடி கரணசைதில்யத்தைபண்ணும்பக்திவிவ்ருத்த்திக்குக்காரணம் "காதல்கடல்புரைய விளைவித்தகாரமர்மேனி" என்னும் பகவத்விக்ரஹவைலக்ஷண்யமாகையாலே, பக்திபாரவச்யம் பகவத்தத்த்வத்தைப்பற்றிவருமென்றபடி.

சசு. அதிகாரித்ரயத்துக்கும் அஜ்ஞாநாதித்ரயத்திலுமந்வயமுண்டாயிருக்க ஓரொன்றே ப்ரபதநஹேதுவாகச் சொல்லுகிறது (ஊற்றத்தைப் பற்ற)என்றிறே சொல்லிற்று; இப்படிஏகாதிகாரிபக்கலிலேஇம்மூன்றுமுண்டென்னுமிடங்காணலாமிடமுண்டோ என்னஅருளிச்செய்கிறார், ("என்னான்") என்றுதுடங்கி. அதாவது எம்பெருமான்தம்முடைய ஆர்த்திகண்டிரங்கக் காணாமையாலே, தன்னைப்பெறுமிடத்தில் சில ஸாதநாநுஷ்ட்டாநம்பண்ணவேணுமென்றிருந்தானாகக் கொண்டு, உபாயாந்தராநுஷ்ட்டாநத்துக்கு யோக்யதை யில்லாதபடி அஜ்ஞனான நான் என்செய்கேன்; ஜ்ஞாநம்தந்தோமே யென்னில், நீதந்த ஜ்ஞாநத்தாலே ஸ்வரூபபாரதந்த்ர்யத்தையுணர்ந்து ஸாதநாநுஷ்ட்டாநமப்ராப்தமென்றிருக்கிற நான் என்செய்கேன்; ஸ்வரூபத்துக்குச் சேராதாகிலும் உன்னைப்பெறலாமாகில் அதுதன்னை யநுஷ்ட்டிக்கலாய்த்திறே; ஜ்ஞாநமாத்ரத்தைத் தந்தாயாகில், பக்திரூபாபந்நஜ்ஞாநத்தைத் தருகையாலே ஒன்றையுமடைவுபட வநுஷ்ட்டிக்க க்ஷமனல்லாதபடி பக்திபரவசனானநான்என்செய்கேனென்று மூன்றும் ஆழ்வார்க்கு விவக்ஷிதமாகையாலே, இவ்விடத்திலே யிம்மூன்றுமுண்டென்கை; ஆகையாலிவ்விடத்திலே காணலாமென்றுகருத்து.

ஆ.—௪௭. அந்த ஸூக்தியில் பக்திபாரவச்யமொன்றையுமேபற்றி ப்ரபத்திவருமென்றே கொள்ளவேணும், அஜ்ஞாநப்ராப்திகள் பாரவச்யத்தாலே ஜ்ஞாநவிஷயமாகமாட்டாமையால்.

௪௮. அசித்தையும் ஆத்மாவையும்பற்றி வருமதில், பகவத்வைலக்ஷண்யத்தைப்பற்றி ப்ரபந்நராம் அதுவேமுக்க்யம்; மற்றையவையிரண்டும் கௌணமென்கிறார்.

௪௯. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணோபாதாநம் பண்ணுகிறார் மேல், "అవిద్యాతో దేవే పరిబృఢతయా వా విదితయా స్వభక్తేర్భూమ్నా వా జగతి గతిమన్యామవిదుషామ్। గతిర్గమ్యశ్చాసౌ హరిరితి జితన్తాహ్వయమనోరహస్యం వ్యాజహ్రే స ఖలు భగవాన్ శౌనకమునిః" "அவித்யாதோ தேவே பரிப்ருடதயா வா விதிதயா ஸ்வபக்தேர்ப்பூம்நா வா ஜகதி கதிமந்யாமவிதுஷாம்। கதிர்கம்யச்சாஸௌ ஹரிரிதி ஜிதந்தாஹ்வயமநோரஹஸ்யம் வ்யாஜஹ்ரே ஸ கலு பகவாந் சௌநகமுநி:" என்கிற ச்லோகத்தில் "அவித்யாத:" என்று ஜ்ஞாந

---

௪௭. அங்கொன்றைப் பற்றி யிருக்கும்

௪௮. முக்க்யமதுவே.

௪௯. "అవిద్యాతః" "அவித்யாத:" என்கிற ச்லோகத்திலே

---

ஜீ.—௪௭. ஆனால் இம்மூன்றுமவ்விடத்தில் ப்ரபத்திகாரணமாகிறதோவென்ன (அங்கொன்றைப்பற்றியிருக்கும்) என்கிறார்; அதாவது அவ்விடத்தில் ப்ரபத்தியானது மூன்றிலும் வைத்துக்கொண்டேன்றியிருக்கிற பக்திபாரவச்யத்தையே தனக்கு ஹேதுவாகப்பற்றி யிருக்குமென்றபடி.

௪௮. இந்தஹேதுத்ரயமடியாக வரும் ப்ரபத்திகளில் முக்க்யமேதென்ன (முக்க்யமதுவே) என்கிறார்; அதாவது - பக்திபாரவச்யமடியாக ப்ரபத்திபண்ணுமிடத்தில் ப்ராப்யருசி கண்ணழிவற வுண்டாகையாலே யதுவே முக்க்யமென்றபடி.

௪௯. இவ்வதிகாரித்ரயத்துக்கும் ப்ரமாணமுண்டோவென்ன ப்ரதமம் பட்டரருளிச்செய்ததொரு ச்லோகத்தை உதாஹரிக்கிறார், ("అవిద్యాతః" "அவித்யாத:") என்று துடங்கி, "అవిద్యాతో దేవే పరిబృఢతయా వా విదితయా స్వభక్తేర్భూమ్నా వా జగతి గతిమన్యామవిదుషామ్। గతిర్గమ్యశ్చాసౌ హరిరితి జితన్తాహ్వయమనోరహస్యం వ్యాజహ్రే స ఖలు భగవాన్ శౌనకమునిః" "அவித்யாதோ தேவே பரிப்ருடதயா வா விதிதயா ஸ்வபக்தேர்ப்பூம்நா வா ஜகதி கதிமந்யாமவிதுஷாம்। கதிர்கம்யச்சாஸௌ ஹரிரிதி ஜிதந்தாஹ்வயமநோரஹஸ்யம் வ்யாஜஹ்ரே ஸ கலு பகவாந் சௌநகமுநி:" இச்ச்லோகார்த்தம்ஜிதந்தாவ்யாக்யாநோபோத்காதத்திலே "'ப்ரபத்திக்கதிகாரிகள் அஜ்ஞரும் ஸர்வஜ்ஞரும் பக்திபரவசருமென்று த்ரிவிதமாக பட்டரருளிச்செய்தாரிறே' என்று துடங்கி, 'அஜ்ஞனாகிறான் பகவல்லாபத்துக்கு தன்பக்கலில் ஜ்ஞாநசக்திகளில்லாதவன்; ஸர்வஜ்ஞனாகிறான் தேசகாலவஸ்துக்களால் பரிச்சேதிக்கவொண்ணாத வைபவத்தையுடையவன் ஈச்வரனென்றிருக்கையாலே அநந்யஸாத்யனென்றிருக்குமவன்; பக்திபரவசனாகிறான் ஜ்ஞாநசக்திகளுண்டாயிருக்கச்செய்தே அடைவுபடவநுஷ்டிக்கமாட்டாதவன்; இவர்கள் மூவரும் பகவத்விஷயமொழிய வேறுபாயமுண்டென்றறியாதவர்கள்; இவர்களுக்கு ப்ராபகனுமாய் ப்ராப்யனுமாயிருக்கும் ஸர்வேச்வரன்' என்று ஜிதந்தை என்றுபேரையுடைத்தான மந்த்ரரஹஸ்யத்தை, ஸர்வஜ்ஞனான ஸ்ரீசௌநக

ஆ.—ஹேதுகப்ரபத்தியையும் "దేవీ పరిబృఢతయా వా విదితయా" "தேவே பரிப்ருடதயா வா விதிதயா" என்று ஜ்ஞாநாதிக்யஹேதுகப்ரபத்தியையும், "స్వభక్తైర్భూమ్నా వా" "ஸ்வபக்தேர்ப்பூம்நா வா" என்று பக்திபாரவச்ய ஹேதுகப்ரபத்தியையும் சொல்லிற்று.

ருഠ. "ఇదం శరణమజ్ఞానామిదమేవ విజానతామ్। ఇదం తితీర్షతాం పారమిదమానన్త్యమిచ్ఛతామ్" "இதம் சரணமஜ்ஞாநாமிதமேவ விஜாநதாம்। இதம் திதீர்ஷதாம் பாரமிதமாநந்த்யமிச்சதாம்" என்கிற ச்லோகத்திலும் அஜ்ஞாந விஜ்ஞாநதிதீர்ஷைகளாலே இம்மூன்றதிகாரமுமுக்தமென்றிவ்வளவாக

இம்மூன்றும் சொல்லிற்று.
ரு௦. "இதம் சரணமஜ்ஞாநாம்."

ஜீ.—பகவான் வ்யாக்க்யாநம்பண்ணப்பெறுவதேயென்கிறார்" என்றுச்சான் பிள்ளையருளிச்செய்தார். (ஜ்ஞாநாதிக்யத்தாலே ப்ரபந்நர்) என்கிறவிடத்தில் ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞாநம் ப்ரபதநஹேதுவாகச்சொல்லிற்று, இந்த ச்லோகத்தில் பகவதநந்யஸாத்த்யத்வஜ்ஞாநம் ப்ரபதநஹேதுவாகச் சொல்லிற்று, ஆகையாலிரண்டும் ஜ்ஞாநாதிகர்க்கு அநந்யகதித்வபூர்வகமான ப்ரபதநத்துக்கு ஹேதுவாமென்று கொள்ளவேணும்; கீழுமிதுதானே யர்த்தமானுலோவென்னிலொண்ணுது, (இம்மூன்றும் மூன்று தத்வத்தையும்பற்றி வரும்) என்றத்தோடு சேராமையால்.

ருഠ. அநந்தரமிவ்வர்த்தவிஷயமாக அகிலஜகந்மாதாவாய் ஆப்ததமையான பிராட்டி, லக்ஷ்மீதந்த்ரத்திலருளிச்செய்த வசநத்தை உபாதாநம்பண்ணுகிறார், ("ఇదం శరణమజ్ఞానామ్") ("இதம் சரணமஜ்ஞாநாம்") என்று. "ఇదం శరణమజ్ఞానామిదమేవ విజానతామ్। ఇదం తితీర్షతాం పారమిదమానన్త్యమిచ్ఛతామ్" "இதம் சரணமஜ்ஞாநாமிதமேவ விஜாநதாம்। இதம் திதீர்ஷதாம் பாரமிதமாநந்த்யமிச்சதாம்" இந்த ச்லோகத்தில் "இதம்" என்று பராமர்சிக்கிறது கீழ்சொன்ன சரணுகதியை; "అపాయోపాయనిర్ముక్తా మధ్యమాం స్థితిమాస్థితా। శరణాగతిరగ్ర్యైషా సంసారార్ణవతారిణీ" "அபாயோபாயநிர்முக்தா மத்யமாம் ஸ்த்திதிமாஸ்த்திதா। சரணுகதிரக்ர்யைஷா ஸம்ஸாரார்ணவதாரிணீ" என்றிறே கீழ்ச்சொல்லிநின்றது; லிங்கவ்யத்யயம் சரணசப்தவிவக்ஷையாலே; இதில் அஜ்ஞஸர்வஜ்ஞர்களை ஸ்ப்புடமாகச்சொல்லுகையாலே மேல் பக்திபரவசரைச் சொல்லுகிறதென்று கொள்ளவேணும்; "ఇదం తితీర్షతాం పారమ్" "இதம் திதீர்ஷதாம் பாரம்" என்றது சடக்கெனவநிஷ்டநிவ்ருத்தி பிறக்கவேணுமென்னும் த்வரையுடையார்க்கென்றபடி; "ఆనన్త్యమిచ్ఛతామ్" "ஆநந்த்யமிச்சதாம்" என்றது ஸ்வரூபப்ராப்த பரிபூர்ணபகவதநுபவத்தைப் பெற்றுலல்லது தரிக்கமாட்டாதார்க்கென்றபடி; இவையிரண்டும் பக்தியினுடைய பூமாவாலே வருமவையிறே; பக்திபாரவச்யமுபாயாந்தராநுஷ்ட்டாநத்தில் அசக்திக்குமுறுப்பாய், அநிஷ்டநிவ்ருத்தியிலுமிஷ்டப்ராப்தியிலுமுண்டான விளம்பாக்ஷமதைக்குமுடலாயிறே யிருப்பது; அதில் விளம்பாக்ஷமதைக்குடலானவாகாரத்தை இந்த ச்லோகத்தில் சொல்லுகிறது; ஆனுல், கீழ் அசக்திக்குடலாகவன்றோசொல்லிப்போந்தது, அதுக்கிது ப்ரமாணமாமோவென்னில், அதிகாரித்ரைவித்த்யம் தர்சிப்பிக்கிறவளவே இவ்விடத்திலபேக்ஷிதமாகையாலே இது ப்ரமாணமாகச் சொல்லத்தட்டில்லை; "అవిద్యాతః" "அவித்யாதः" என்கிற ச்லோகத்தில் ஜ்ஞாநாதிக்யத்துக்குடலாகச் சொன்னதும் கீழ்ச்சொல்லி

ஆ.—அர்சாவதாரத்தில் ப்ரபத்திபண்ணுமதிகாரிவிசேஷங்களை யருளிச் செய்து,

ருக. அதில் பக்திபரவசர்க்கு பாரவச்யபாகவிசேஷத்தாலே இப் ப்ரபத்திதான் குலையுமென்கிறார் மேல், (பக்திதன்னிலே) இத்யாதியால். ப்ரபத்தியிலே மூட்டுமதான ஸத்தாஹிபந்த்தகபக்திதன்னிலே, க்ருதப்ரப த்த்யத்த்யவஸாயபஞ்ஜகமான புநஃப்ரபதநாதிப்ரேரகத்வராதிசயரூபாவஸ் த்த்தாபேதமும் பக்த்யுத்பாதகேச்ச்சாநுகுணமாகப் பிறந்தவாறே, ஸக்ரு த்கரணீயமாய் உபாயாந்தரஸ்பர்சகந்த்தம்பொறாத பூர்வக்ருதமான விப்ர பதநந்தான், சணற்கயிறுகண்ட ப்ரஹ்மாஸ்த்ரம்போலே நிலைகுலையக்கடவ தாயிருக்கும்.

ருஉ. இப்படி ப்ரபத்தியிலே மூட்டுவது குலைப்பதாய்க்கொண்டு, ஒரு படிப்பட்டிராமை பக்திக்குள்ளதொன்றென்கிறார், (தன்னைப்பேணவும்) இத்யாதியால். "காறை பூணும்... தன் கோவைச்செவ்வாய் திருத்தும்" என்று தன்னைப்பேணவும்பண்ணும்; "அயர்க்கும்" என்று ஸ்வாலங்கார மநர்த்தஹேதுவாய்த்தோ வென்று மோஹம் விளைய "தேறி" என்றந்த

---

ருக. பக்திதன்னிலே யவஸ்த்தாபேதம் பிறந்தவாறே இதுதான் குலையக்கடவதா யிருக்கும்.

ருஉ. தன்னைப்பேணவும்பண்ணும் தரிக்கவும்பண்ணும்.

---

ஜீ.—வந்ததும் பிந்நமாயிருக்கச்செய்தே, அதிகாரித்ரைவித்த்யத்துக்கு ப்ரமாணமாகவத்தைச் சொன்னப்போலே.

ருக. ஆக ப்ரபத்த்யதிகாரித்ரைவித்த்யத்துக்கு ப்ரமாணங்காட்டின ராய்நின்றார்க்கீழ். இந்த த்ரிவிதப்ரபத்தியிலும் பக்திபாரவச்யப்ரபத்தியே முக்க்யமென்றிறே கீழ்ச்சொல்லிற்று; ஏவம்பூதப்ரபத்திநிஷ்ட்டரானவர் கள் தந்நிஷ்ட்டை குலைந்து பகவல்லாபார்த்தமாக ஸ்வயத்நத்திலே மீளுவது, அவன்வரக்கொள்ள அவனையுபேக்ஷிப்பதாகிற விவற்றுக்குநிதா நமேதென்ன வருளிச்செய்கிறார், (பக்திதன்னிலே) என்றுதுடங்கி. (பக்தி தன்னிலேயவஸ்த்தாபேதம் பிற)க்கையாவது கரணசைதில்யத்தாலே ஸ்வயத்நக்ஷமரன்றிக்கே, அவனேயுபாயமாகவத்த்யவஸித்து, அவன் வரவு பார்த்திருக்குமவஸ்த்தையளவன்றிக்கே, கண்ணுஞ்சுழலையிட்டு ஏதேனுமொருபடியாலேயாகிலும்அவனையிப்போதே பெறவேணுமென்னு மதிமாத்ரத்வராவஸ்த்தைவிளைகை. (இது) என்று ப்ரபத்தியைச்சொல் லுகிறது. தாத்ருசாவஸ்த்தைபிறந்தால் ப்ரபத்தி(குலை)கையாவது "என் னான்செய்கேன்" என்று ஸ்வப்ரவ்ருத்தியிலந்வயமற்று பகவதிந்யஸ்தபரரா யிருக்குமிருப்புக்குலைகை.

ருஉ. இப்படி ப்ரபத்திநிஷ்ட்டைகுலையும்படி பிறந்த பக்தியும் அவஸ் த்தாபேதம்விளைக்குமத்தையருளிச்செய்கிறார், (தன்னை) என்றுதுடங்கி. (தன்னைப் பேணப்பண்ணு)கையாவது- "காறைபூணும்" இத்யாதியிற் படியே அவன்வரவுக்குடலாகத் தன்னையலங்கரிக்கும்படி பண்ணுகை; அதாவது பகவல்லாபார்த்தமாக ஸ்வயத்நத்திலே மூட்டுமென்றபடி; இது மடலெடுக்கைமுதலானவற்றிலே மூட்டுமதுக்குமுபலக்ஷணம்; (தரிக்கப் பண்ணு)கையாவது-அரைக்ஷணமவனையொழிய தரிக்கமாட்டாமையாலே, அவன்வரவுக்குடலாக ஸ்வயத்நத்திலே மூளும்படிபண்ணினவதுதானே, அவன்வரக்கொள்ள விளம்பரோஷத்தாலே "போகுநம்பி" "கழகமேறேல் நம்பி" என்று அவனையுபேக்ஷித்து தள்ளி தரித்திருக்கும்படி பண்ணுகை. ஆக இவையிரண்டாலும் "என்னான்செய்கேன்" என்றும் "தரியேனினி"

ஆ.—க்ஷணத்திலே அந்திமதசையில்போல் மேல்மேலன தெளிவுபிறந்து, இந்த தசையில் வாராதொழியாயென்று தரிக்கவும்பண்ணும்; இப்படி நாநாஸ்வபாவத்தை விளைக்கை பக்திக்குள்ளதொன்று.

ருரு. இந்த ஸ்வபாவம் பக்திவிஷயத்தைப்பற்றி வருமவையெல்லாத்திலுங் காணலாமென்கிறார் மேல், (இந்த ஸ்வபாவம்) இத்யாதியால். பல ஸ்வபாவத்தை விளைக்கையாகிற வித்த ஸ்வபாவவிசேஷங்கள், "வல்வினையேனையீர்கின்ற குணங்களையுடையாய்" "கோவிந்தன்குணம்பாடியாவிகாத்திருப்பேனே" என்று பாதகமாயும் தாரகமாயும் போருகிற கல்யாண குணங்களிலும், "கண்ணன் நாமமே குழறிக்கொன்றீர்" "மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாளே" என்று ஸாத்மியாதும் ஸாத்மித்தும் போருகிற

---

ருரு· இந்த ஸ்வபாவவிசேஷங்கள் கல்யாணகுணங்களிலும்

---

ஜீ.—என்றுமிருக்குமிருப்புக்கு ப்ரதிகோடியை விளைக்குமென்றபடி. ஆகையால் ப்ரபத்திநிஷ்டனைகுலைந்து ஸ்வப்ரவ்ருத்யாதிகளில் இழிகைக்கடி பக்தியினுடையவவஸ்த்தாபேதமென்று கருத்து.

ருரு. (தன்னைப்பேணவும்பண்ணும் தரிக்கவும்பண்ணும்) என்று எம்பெருமான் வருகைக்குடலாக க்ருஷிபண்ணுகையும், அவன் வரக்கொள்ள அவனையுபேக்ஷிக்கையுமாகிற பரஸ்பரவிருத்தஸ்வபாவங்களை விளைக்கும்படியையிறே சொல்லிற்று; இப்படி பக்தியானது ஸ்வாவஸ்த்தாவிசேஷங்களாலே சேதநர்க்கு விளைக்கும் பரஸ்பரவிருத்தஸ்வபாவங்கள் தத்விஷயமாத்ரத்திலன்றிக்கே, தத்ஸம்பந்திவஸ்துக்கள்விஷயமாகவுங் காணலாமென்கிறார் மேல், (இந்த) என்று துடங்கி. (இந்த ஸ்வபாவவிசேஷங்கள் என்று கீழ்ச்சொன்னவை தன்னையே சொல்லுகிறதன்று, இப்படிப்பட்ட ஸ்வபாவவிசேஷங்களென்றபடி; அவையாவன-அநுபாவ்யவிஷயமொருபடிப்பட்டிராநிற்கச்செய்தே அத்தையநுபவிக்கிறவிவர்களுக்கு தாரகமாய்த்தோற்றுகையும் பாதகமாய்த்தோற்றுகையும்.(கல்யாணகுணங்கள்) இத்யாதி. "கோவிந்தன்குணம்பாடியாவிகாத்திருப்பேனே" என்று தாரகமாகவும், "வல்வினையேனையீர்கின்றகுணங்களையுடையாய்" என்று பாதகமாகவும் சொல்லுகையாலே கல்யாணகுணவிஷயமாகவும், "சரங்களாண்டதண்டாமரைக்கண்ணனுக்கன்றியென்மனந்தாழ்ந்துநில்லாதே" என்று தாரகமாகவும், "சரங்களே கொடிதாயடுகின்ற" என்று பாதகமாகவும் சொல்லுகையாலே திருச்சரவிஷயமாகவும், "திருமாலைப்பாடக் கேட்டு மடக்கிளியைக்கைகூப்பிவணங்கினாளே" என்று தாரகமாகவும், "கண்ணன்நாமமே குழறிக்கொன்றீர்"என்று பாதகமாகவும் சொல்லுகையாலே திருநாமவிஷயமாகவும், "எங்களுக்கேயொருநாள்வந்தூதவுன் குழலின்னிசை போதராயே" என்று தாரகமாகவும், "அவனுடைத்தீங்குழலீருமாலோ" என்று பாதகமாகவும் சொல்லுகையாலே திருக்குழலோசைவிஷயமாகவும் காணலாமென்றபடி. என்றுமொக்க போக்யங்களாயிருந்துள்ள கல்யாணகுணாதிகள் தாரகமாய்த்தோற்றுவது பாதகமாய்த்தோற்றுவதாகிறது, அநுபோக்தாக்களானவிவர்களுடைய ப்ரேமஸ்வபாவவிசேஷங்களாலேயிறே; அல்லது குணாதிகளின் ஸ்வரூபபேதத்தாலன்றே; ஆகையால் பக்த்யவஸ்த்தாபேதஜநிதங்களான ஸ்வபாவவிசேஷங்கள், இவ்வோவஸ்துக்கள்விஷயமாகவுங்காணலாமென்கிறது. குணாதிகள் தாரகங்களாகவும் பாதகங்களாகவும் பேசுகிறவிடத்தில், இரண்டுமொருவர் பேச்சன்றிக்கேயிருந்ததேயாகிலும், ஆழ்வார்களெல்லாருமேகப்ரக்ருதி

ஆ.—திருநாமங்களிலும், "𑌛𑌿𑌨𑍍𑌨𑌂 𑌭𑌿𑌨𑍍𑌨𑌂 𑌶𑌰𑍈𑌰𑍍𑌦𑌗𑍍𑌧𑌂" "சிந்நம் பிந்நம் ஶரைர்தக்தம்" "எரிசிதறும் சரத்தால்" "சரங்களாண்ட" என்று சேதநபேதநாதிமுகத்தாலுமழகாலும் ப்ரதிகூலரை முடித்துமநுகூலரை வாழ்வித்தும் போருகிற திருச்சரங்களிலும், "அவனுடைத் தீங்குழலீருமாலோ" "எங்களுக்கே வொருநாள் வந்தூதாய்" என்று அஸஹ்யமாயும் ஸஹ்யமாயும் போருகிற திருக்குழலோசையிலும் விசேஷஜ்ஞர்க்குக் காணலாம்; பக்திவிஷயபகவத்ஸம்பந்தமுடையவைபோல் பக்திபாரவச்யமும் ப்ரபத்தியிலே மூட்டுவது குலைப்பதாய்க்கொண்டு பலஸ்வபாவத்தை விளக்கை தத்ஸம்பந்தி வஸ்துஸ்வபாவமென்றபடி; ஆச்ரயதோஷத்தால் குலையிலிறே யதிகாரப்ரச்யுதிவருவது.

---

திருச்சரங்களிலும் திருநாமங்களிலும் ' திருக்குழலோசையிலுங் காணலாம்.

---

ஜீ.—ளாகையாலும், எல்லாருடையபக்தியும் பகவத்ப்ரஸாதலப்த்தையான பரபக்தியாகையாலும், அந்தபக்திஸ்வபாவவிசேஷங்கள் காட்டுகிற மாத்ரமேயிவ்விடத்திலபேக்ஷிதமாகையாலே விரோதமில்லை. "சரங்களே கொடிதாயடுகின்ற" என்கிறவிது பராஜிதராக்ஷஸர்பாசுரமன்றோ, அத்தை "சரங்களாண்ட" என்கைக்கு ப்ரதிகோடியாகச்சொல்லலாமோவென்னில், ராமவிஜயம் தமக்கிஷ்டமாகையாலே, அந்தவிஜயத்துக்கிலக்காய்த்தோற்ற ராக்ஷஸர்தசைபிறந்து, பிராட்டிமார்தசைபிறந்து பேசுமாப்போலே, தாமானதன்மைதோற்றாதே தோற்ற ராக்ஷஸர்பாசுரத்தாலே விஜயத்தைப்பேசி அநுபவிக்கிறாரென்றிறே இத்திருமொழிக்கு வ்யாக்யாநம் பண்ணியருளுகிறவாசார்யர்களருளிச்செய்வது; ஆகையால் தம்முடைய ப்ரேமஸ்வபாவத்தாலே ததவஸ்த்தாபந்நரான பின்பு, திருச்சரங்கள் பாதகமாய்த்ததும் தமக்கேயாய்த்தோற்றிப்பேசுகையாலே, அப்படிசொல்லக்குறையில்லை.—அதவா (தன்னைப்பேணவும் பண்ணும் தரிக்கவும்பண்ணும்) என்றவிவையிரண்டாலும் அவன் தானே வருமளவும் தரியாமல் வரவுக்குடலாக யத்நிக்கப்பண்ணுவது, வரக்கொள்ள ப்ரணயரோஷத்தாலே தள்ளி தரித்திருக்கப் பண்ணுவதாம்படியையிறே சொல்லிற்று; இப்படி விருத்தஸ்வபாவங்களையொன்றுதானே விளைக்குமென்னுமிது வேறுசிலவிஷயங்களிலும்காணலாமோவென்ன வருளிச்செய்கிறார், (இந்த) என்று துடங்கி. அதாவதிப்படிப்பட்ட ஸ்வபாவவிசேஷங்கள் " கோவிந்தன்குணம்பாடி" என்றுதுடங்கி கீழ்ச்சொன்னபடியே ஒருதசையிலே தாரகமாகப்பேசுவது ஒருதசையிலே பாதகமாகப் பேசுவதாம்படி, இவர்களுக்கு தரிப்பும் பாதையுமாகிற விருத்தஸ்வபாவங்களை விளைக்கிற கல்யாணகுணாதிகளிலேயும் காணலாமென்கை. ஆக (ப்ரபத்திக்கு) என்றுதுடங்கி இவ்வளவாக ப்ரபத்திவைபவத்தையும், தத்விஷயவைபவத்தையும், தததிகாரித்ரைவித்யத்தையும், த்ரிவிதப்ரபத்தியிலும்பக்திபாரவச்யஹேதுகப்ரபத்தியினுடைய முக்க்யதையையும், அதுதனக்கு ஸ்வஹேதுபூதபக்த்யவஸ்த்தாபேதத்தால்வரும் குலைத்தலையும், அந்தபக்த்யவஸ்த்தாபேதம் செய்விக்குமம்சங்களையுமருளிச்செய்தார்.

ஆ.—௫௪. இந்தஸ்வகதப்ரபத்தி உபயஸ்வரூபஸம்பந்ததூஷகமாய்த் தலைக்கட்டுமென்கிறார், (இதுதன்னை) இத்யாதியால். ரக்ஷகன்பண்ணும் ரக்ஷணஹேதுவாக ரக்ஷ்யமானவிவன்பண்ணும் ப்ரபத்திதன்னை உள்ளபடி நிரூபித்துப்பார்த்தால், ஹிதைஷியாய் அறியாததசையிலும் ரக்ஷிக்கையாகிற பெற்றபிதாவுக்கு, பிதாபுத்ரஸம்பந்தமறிந்த ரக்ஷணீயபுத்ரன் உபநயநாதியைப்பண்ணி என்னை ரக்ஷிக்கவேணுமென்று மார்விலேபொறித்தெழுத்துவாங்கினால், நல்லபிதாவும் நல்லபுத்ரனுமாய்த்தென்று, நாட்டார் பழிமொழியும் விளைந்து, உபயஸம்பந்தக்கொத்தையும் விளையுமாப்போலே, விசேஷஜ்ஞர் சிரிக்கைக்குமுபயஸம்பந்தக்கொத்தையும் விளைக்கைக்குமடியாயிருப்பதொன்று.

---

௫௪. இதுதன்னைப்பார்த்தால் பிதாவுக்கு புத்ரனெழுத்துவாங்குமாப்போலே யிருப்பதொன்று.

---

ஜீ.—௫௪. இப்ப்ரபத்திதனக்கு(தர்மபுத்ராதிகளும்)என்றுதுடங்கிகீழுக்தரானவதிகாரிகள்பக்கலிலே ஸாதநதயாநுஷ்டானம் காண்கையாலும், கர்மஜ்ஞாநபக்திப்ரபத்திகள் என்றுபாயங்களோடே ஸஹபடிதமாய்ப் போருகையாலும், "యద్యేన కామకామేన న సాధ్యం సాధనాన్తరైః। ముముక్షుణా యత్సాఙ్ఖ్యేన యోగేన న చ భక్తితః। ప్రాప్యతే పరమం ధామ యతో నావర్తతే పునః। తేన తేనాప్యతే తత్త్వన్న్యాసేనైవ మహామునే। పరమాత్మా చ తేనైవ సాధ్యతే పురుషోత్తమః" "யத்யேந காமகாமேந ந ஸாத்யம் ஸாதநாந்தரை꞉ । முமுக்ஷுணா யத் ஸாங்க்யேந யோகேந ந சபக்தித꞉। ப்ராப்யதே பரமம் தாம யதோ நாவர்ததே புந꞉। தேந தேநாப்யதே தத்தந்ந்யாஸேநைவ மஹாமுநே । பரமாத்மா ச தேநைவ ஸாத்யதே புருஷோத்தம꞉" என்றும் "ఇదం శరణమజ్ఞానామ్" "இதம் சரணமஜ்ஞாநாம்" என்றும் இப்படியே சாஸ்த்ரங்களித்தை ஸாதநமாகச் சொல்லுகையாலும், உபாயத்வப்ரதிபத்தியோக்யதையுண்டாகையாலே, அத்தை வ்யாவர்த்திக்கைக்காக அதுக்குடலான பலவற்றையுமருளிச்செய்கிறார் மேல்; அதில் ப்ரதமத்திலே இப் ப்ரபத்தியை யுபாயமாகக் கொண்டால் வருமவத்யத்தை தர்சிப்பிக்கிறார், (இதுதன்னை) என்றுதுடங்கி. (இதுதன்னைப்பார்த்தால்) என்றது—இச்சேதநனீச்வரவிஷயத்தில் பண்ணுமிப்ப்ரபத்திதன்னை யுபாயமாகப்பார்த்தாலென்றபடி.—ஈச்வரன் தன்னை ரக்ஷிக்கைக்கு ஹேதுவாக இச்சேதநன்பண்ணும் ப்ரபத்தி தன்னை நிரூபித்தால் என்றிங்ஙனே அநத்யாஹாரேண யோஜிக்கவுமாம்; அப்போதுமர்த்தமொக்குமிறே. (பிதாவுக்குபுத்ரனெழுத்துவாங்குமாப்போலே யிருப்பதொன்று) என்றது—உத்பாதகனாகையாலே ஹிதைஷியாய், தானறியாததசையிலும் தன்னை ரக்ஷித்துக்கொண்டு போரும் தமப்பனுக்கு, புத்ரனானவன், தானறிந்ததசையிலே என்னை நீ ரக்ஷிக்கவேணுமென்று எழுத்துவாங்கினால் இரண்டுதலைக்குமுண்டான வுறவுக்குக் கொத்தையாமாப்போலே, ஸத்தாகாரணபூதனாய் ஸர்வதசையிலும் ரக்ஷகனாய்க்கொண்டுபோருகிற அகாரவாச்யனான ஸர்வேச்வரனுக்கும் மகாரவாச்யனானவிவனுக்குமுண்டான ஸம்பந்தத்துக்கவத்யகரமென்றபடி; (எழுத்துவாங்கு)கையாவது - ரக்ஷகன்பேரைத் தன் மார்பிலே யெழுதிக் கொள்ளுகை.

ஆ.—௫௫. ஆகில் இப்ப்ரபத்திக்கு ஸ்வரூபமாய்த்ததேதென்ன ஸாதநத்வாகாரமற்ற நிலைநின்றவாகாரத்தை யருளிச்செய்கிறார்மேல், (இதுதனக்கு) இத்யாதியால். சரணவரணரூபையானவிப்ப்ரபத்திக்கு ஸ்வாஸாதாரண ரூபம், அதிகாரிவிசேஷணமாகையே நிலைநின்றவேஷமானதன்னை, பல ஸாதநமானவுபாயமென்ன, ஸ்வவ்யாவர்த்யாதிகாரம் குலையும்படி பொறு தொழிகை. பரப்ரேரிதமாய் பரதந்த்ரவஸ்துவிசேஷணமானதன்னை ஆபாதஸ்வப்ரதீதிமாத்ரமாய்க்கொண்டு உபாயமென்னப்பொறுதிறே ; இது வரணபூர்வபாவியுமாய் வரணாநந்தரபாவியுமான ஸ்வரூபமென்னவும் உபேயமென்னவும் பொறுது ; (தன்னைப்பொறுது) என்கிற ஸாமாந்யோக்தி, உசிதார்த்தத்தை யிப்படிகாட்டித்தேயாகிலும், உபாயமென்னப்பொறுது என்னுமிதுவே ப்ரகரணோசிதம். பரகதமானதன்னை ஸ்வகதமாக்கப் பொறுதென்றுமருளிச்செய்வர் ; ஸ்வகதமானபோது ஆச்ரயவிஷயதூஷகமாய்க்கொண்டு தானுமழியும்; பரகதமானபோது ஆச்ரயவிஷயோத்தேஜகமாய்க்கொண்டு தான் வீறடிக்கும்.

௫௬. "யஸ்ய யத் ஸாங்கம் தத்தத் ஸாதநம்" "யத்யத் ஸாங்கம் தத்தத் ஸாதநம்" என்கையால் உபாயத்வலக்ஷணமான விதரோபாயத்யாகமாகிற வங்கமிதுக்குண்டேயென்ன, இந்தவங்கத்தினுடைய காரவிசேஷத்தை யருளிச்செய்து, உபாயத்வத்தை துடைக்கிறார்மேல், (அங்கம்) இத்யாதியால். ஸித்தோபாயஸ்வீகாரத்தைப்பற்ற ச்லோகத்தில் விதேயமானவிதரோபாயத்யாகமாகிறவங்கம், த்யாகரூபமானதன்னையொழிந்த ப்ரதியோகிஸ்வீகாரரூபமானவற்றை, அதிகாரபங்கம் வாராதபடி பொறுதொழிகை ; ஸ்வரூபோத்பாதகத்வம், உத்பந்நஸ்வரூபவர்த்தகத்வம், வர்த்திதஸ்வரூப பலப்ரதத்வமாகிற அங்கலக்ஷணமின்றியே, இதரஸ்பர்சாஸஹத்வமாத்ரமேயிறே இந்தவங்கத்துக்குள்ளது; ஸ்வீகாரபூர்வபாவித்வமாத்ரங்கொண்டு இத்தையங்கமென்கிறதித்தனையிறே; இதுக்கங்கியாய்த்தோற்றுகிறதுபாயமாகிலிறே இதங்கமாவது ; இனி ஸித்தோபாயத்துக்கு அங்கஸாத்யத்வ

---

௫௫. இதுதனக்கு ஸ்வரூபம் தன்னைப்பொறுதொழிகை.

---

ஜீ.—௫௫. ஆனாலிதுதனக்கு ஸ்வரூபமேதென்ன வருளிச்செய்கிறார், (இதுதனக்கு)என்றுதுடங்கி. (இதுதனக்கு ஸ்வரூபம்) என்றது - இப்ப்ரபத்திதனக்கஸாதாரணாகாரமென்றபடி ; (தன்னைப்பொறுதொழிகை)யாவது - உபாயவரணாத்மகமான தன்னை உபாயமென்ன ஸஹியாதபடியாயிருக்கை; அதாவது ஆபாதப்ரதீதியிலொழிய உள்ளபடி நிரூபித்தால் ஸ்வஸ்மிந்நுபாயத்வப்ரதிபத்திக்கு யோக்யமாகமாட்டாதபடி யிருக்கை யென்றபடி. அன்றிக்கே (தன்னைப்பொறுதொழிகை) என்கிறவிடத்தில் உபாயத்வேந ப்ரதீதமானதன்னைப்பொறுதொழிகை என்று அநத்யாஹாரேண யோஜிக்கவுமாம்; இப்படிசொன்னாலும் ஸ்வஸ்மிந்நுபாயத்வப்ரதிபத்த்யஸஹத்வமே பொருளாமிறே.

௫௬. சரமச்லோகத்தில் இத்தை ஸாங்கமாக விதிக்கையாலே "யஸ்ய யத் ஸாங்கம், தத்தத் ஸாதநம்" "யத்யத்ஸாங்கம், தத்தத் ஸாதநம்" என்கிற ந்யாயமிதுக்கும் வாராதோவென்ன, அங்கஸ்வரூபத்தை தர்சிப்பிக்கவே அந்த ந்யாயமிங்குவாராதென்று பார்த்து அதுதன்னை யருளிச்செய்கிறார், (அங்கம்) என்றுதுடங்கி. (தன்னையொழிந்தவற்றைப் பொறுதொழிகை)யாவது - ஸ்வீகாரரூபமான தன்னையொழிந்த சேதநப்ரவ்ருத்திகளில் ஒன்றையும் ஸஹியாதபடியிருக்கை ; ஸாதநரூபஸகலப்ரவ்ருத்திகளினுடை

ஆ.—மில்லையிறே. அன்றியே ப்ரபத்யங்கமானவிது, அங்கியானஸ்வீகாரந்தன்னையொழிந்தவற்றைப் பொருதொழிகையென்றும், த்யாகரூபமான தன்னையும் ஸ்வீகாரரூபமானவொழிந்தவற்றையும் ப்ரவ்ருத்யஸஹத்வேந பொருதொழிகையென்றுமருளிச்செய்வர். ஆக; அங்கத்வந்துடை யுண்கையால் உபாயமென்னப்பொருது என்ற ப்ரதிஜ்ஞையுபபாதிக்கப்பட்டது.

௫எ. ஆகில், பொறுப்பதேதென்னவருளிச்செய்கிறார்மேல், ஸித்த்தோபாயமானவீச்வரன், உபேயமான தன்னை சேதநன் சயலருதியைப் பற்ற உபாயமென்னப்பொறுக்கும், ஸித்த்தோபாயமென்றிவ்வளவை ஸஹிக்குமித்தனையல்லது, அங்கியென்னவும் ஸஹியாது, அங்கமென்னவும் ஸஹியாது.

௫அ. இப்பொருமை எல்லாவுபாயத்துக்குமொக்குமோவென்ன, ஸாத்த்யமான கர்மாத்யுபாயங்கள், அங்கம் அங்கி என்கிற விரண்டையும் பொறுக்குமென்கிறார். கர்மம் ஆத்மயாதாத்ம்யஜ்ஞாநபூர்வகமாகையாலே

---

௫௬. அங்கம் தன்னையொழிந்தவற்றைப்பொருதொழிகை.
௫எ. உபாயம் தன்னைப்பொறுக்கும்.

---

ஜீ.—யவும் ஸவாஸநத்யாகமிறே யிதுக்கங்கம்; "యద్యత్సాఙ్గమ్" "யத்யத் ஸாங்கம்" என்கிறவிடத்தில், ப்ரவ்ருத்திரூபாங்கஸஹிதமானவற்றையிறே ஸாதநமாகச் சொல்லுகிறது; அப்படியன்றிக்கே இதினுடைய வங்கம் நிவ்ருத்திரூபமாகையாலே, இதுதானே இதினுடைய வநுபாயத்வஸூசகமென்று கருத்து.

௫எ. இதினுடைய வநுபாயத்வத்தை த்ருடீகரிக்கைக்காக ஸித்த்த ஸாத்த்யோபாயங்களின் படிகளைச்சொல்லி, அவையிரண்டையும்பற்ற இதுக்குண்டான வ்யாவ்ருத்தியையருளிச்செய்கிறார், (உபாயம்) என்றுதுடங்கி (பொருது) என்னுமளவாக. (உபாயம் தன்னைப் பொறுக்கும்) என்றது - ஸித்த்தோபாயமான ஸர்வேச்வரன் இஷ்டாநிஷ்டப்ராப்திபரிஹாரங்களிரண்டுக்கும் ஸ்வயமேவ நிர்வாஹகனாகையாலே, தன்னை உபாயமென்றால் அதுக்குத்தகுதியாயிருக்குமென்றபடி. "ఉపాయోపేయత్వే తదిహ తవ తత్త్వం న తు గుణౌ" "உபாயோபேயத்வே ததிஹ தவ தத்த்வம் ந து குணௌ" என்றுபேயத்வத்தோபாதிவஸ்துவுக்கு ஸ்வரூபமாயிறே உபாயத்வமிருப்பது; "యే చ వేదవిదో విప్రా యే చాధ్యాత్మవిదో జనాః। తే వదన్తి మహాత్మానం కృష్ణం ధర్మం సనాతనమ్॥ శరణ్యం శరణం చ త్వామాహుర్దివ్యా మహర్షయః। అమృతం సాధనం సాధ్యం సమ్పశ్యన్తి మనీషిణః" "யே ச வேதவிதோ விப்ரா யே சாத்த்யாத்மவிதோ ஜநாঃ। தே வதந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்। சரண்யம் சரணம் ச த்வாமாஹுர்திவ்யா மஹர்ஷயঃ। அம்ருதம் ஸாதநம் ஸாத்த்யம் ஸம்பச்யந்தி மநீஷிணঃ" என்னக்கடவதிறே. (தன்னைப்பொறுக்கும்) என்கிறவிவ்வளவே சொல்லிவிடுகையாலே, தன்னையொழிந்தவற்றைப்பொருமைஅர்த்தாத்ஸித்த்தம்; இந்த ஸித்த்தோபாயம் ஸஹாயாந்தரஸம்ஸர்காஸஹமாயிறேயிருப்பது, இவ்வுபாயவிசேஷம் ஸ்வவ்யதிரிக்தமாயிருப்பதொன்றை ஸஹியாமையாலேயிறே "ஆநுகூல்யஸங்கல்பாதிகளுக்குபாயாங்கத்வமன்றிக்கே, அவகாதஸ்வேதம்போலே ஸம்பாவிதஸ்வபாவத்வமுண்டாகிறது" என்று இவ்வர்த்தத்தை பரந்தபடியிலே இவர்தாமே யருளிச்செய்தாரிறே.

௫அ. (உபாயாந்தரமிரண்டையும் பொறுக்கும்) என்றது-ஸித்த்தோபாயேதரமான ஸாத்த்யோபாயம், ஸ்வபாரதந்த்ர்யஜ்ஞாநரஹிதராய் ஸ்வயத்நபரராயிருப்பார்க்கு மோக்ஷஸாதநதயா சாஸ்த்ரவிஹிதமாகை

ஆ.—ஜ்ஞாநத்தையங்கமாகவுடைத்தாய், ஜ்ஞாநம்விரோதிபாபநிவர்தக கர்மபூர்வகமாகையாலே கர்மத்தையங்கமாகவுடைத்தாய், பக்திகர்மஜ்ஞாநஸாத்யமாகையாலே ததுபயத்தையுமங்கமாகவுடைத்தாய், அந்தஜ்ஞாநகர்மங்கள்தான் ப்ரீதிபூர்வகமாய் வருகையால் பக்தியை யங்கமாகவுடைத்தாய், இப்படியுபாயாந்தரங்களுக்கு அந்யோந்யமங்காங்கிபாவமுண்டாகையால் இரண்டையும் பொறுக்குமிறே.

ருகூ. ஆகில், ஸித்தோபாயேதரமாய்க்கொண்டு உபாயாந்தரமென்னலானவிவன்பண்ணும் ப்ரபத்தியும் இரண்டையும்பொறுக்குமே, பொறாதென்னீரென்ன, ப்ரவ்ருத்யஸஹமான நிவ்ருத்திரூபமாகையால் அங்கமென்னவும்பொறாது, நிரபேக்ஷஸித்தரூபமாயிருப்பதொன்றாகையாலே அங்கியென்னவும் பொறாதென்கிறார்; "ஆநுகூல்யாதிகளுமங்கமல்ல இப் ப்ரபத்தியுண்டாகவே அவகாதஸ்வேதம்போலே தன்னடையே வருமவையாகையால், உபாயமாகாதவித்தை உபாயமாகவிதித்ததும், ஜ்ஞாநபாகாநுகுணமாக உபாயாந்தரங்களைவிட்டு ஸித்தோபாயநிஷ்ட்டை வருகைக்கு வழியாகவித்தனை. ஆக, அதிகாரிவிசேஷணமானவிதுக்குபாயத்வாகாரம் நேராகத் துடையுண்கையால், அங்காங்கித்வங்களை ஸஹியாதென்றதாய்த்து.

---

ருஅ உபாயாந்தரமிரண்டையும் பொறுக்கும்.

ருகூ. இதிரண்டையும் பொறாது.

---

ஜீ.—யாலே, ஸ்வஸ்மிந்நுபாயத்வப்ரதிபத்திஸஹமுமாய், ஸ்வோத்பத்யாதிகளில் ப்ரவ்ருத்திரூபாங்கஸாபேக்ஷமாகையாலே ஸ்வவ்யதிரிக்தங்களையும்ஸஹிக்குமதாய் இருக்குமென்றபடி. "భక్త్యా లభ్యస్త్వనన్యయా" "ఉభయపరికర్మితస్వాన్తస్యైకాన్తికాత్యన్తికభక్తియోగైకలభ్యః" "జన్మాన్తరసహస్రేషు తపోజ్ఞానసమాధిభిః । నరాణాం క్షీణపాపానాం కృష్ణే భక్తిః ప్రజాయతే" "பக்த்யா லப்ப்யஸ்த்வநந்யயா" "உபயபரிகர்மிதஸ்வாந்தஸ்யைகாந்திகாத்யந்திகபக்தியோகைகலப்ப்ய꞉" "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு தபோத்யாநஸமாதிபி꞉ । நராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே பக்தி꞉ ப்ரஜாயதே" என்னக்கடவதிறே.

ருகூ. (இதிரண்டையும்பொறாது) என்றது - ஸித்தோபாயவரணரூபமாய் நிவ்ருத்திஸாத்யரூபமாய் அதிகாரிவிசேஷணமாய் ஸ்வரூபாநதிரேகியாயிருக்கிற விந்தப்ப்ரபத்தி, உபயாஸஹமாயிருக்குமென்றபடி; ஆகையால் ஸித்தஸாத்யோபாயவ்யாவ்ருத்தவேஷையாயிருக்கிறவிந்தப்ப்ரபத்திக்கு உபாயத்வமஸம்பாவிதமென்றதாய்த்து.

அன்றிக்கே (இது தனக்குஸ்வரூபம் [ருரு.]) இத்யாதிக்கு,—ஆனால் ஸாங்கமாக சாஸ்த்ரவிஹிதமானவிந்தப்ப்ரபத்திக்கு ஸ்வரூபமேது, இதுந்தச் சொல்லுகிறவங்கந்தானேதென்ன, அவை இரண்டையுமடைவே யருளிச்செய்கிறார், (இதுதனக்கு) இத்யாதிவாக்யத்வயத்தாலே.

ஆனால் தன்னைப்பொறுப்பதேதென்ன வருளிச்செய்கிறார், (உபாயம் [ருள.]) இத்யாதி. தன்னையும் தன்னையொழிந்தவற்றையும் பொறுக்குமதேதென்னவருளிச்செய்கிறார், (உபாயாந்தரம் [ருஅ.]) இத்யாதி. இந்த ஸித்தஸாத்யோபாயங்களிரண்டிலுமிப்ப்ரபத்திக்குண்டான வ்யாவ்ருத்தியை தர்சிப்பியாநின்றுகொண்டு உத்தரார்த்தத்தை நிகமிக்கிறார், (இதிரண்டையும்) இத்யாதி என்றிங்ஙனே ஸங்கதியாகவுமாம்.

ஆ.—சூ0. இப்படி யிப் ப்ரபத்தி யுபாயமல்லவாய்விட்டால் பேற்றுக்கடியாக சில இத்தலையில் வேண்டாவோவென்ன, அதுக்கு வேண்டுவது இவ்வளவேயென்கிறார்மேல், (பலத்துக்கு) இத்யாதியால். ஸ்வதந்த்ரஸ்வாமி கொடுக்கிறபலலாபத்துக்கு, திருமந்த்ரோக்தமான சேஷசேஷிஸம்பந்த ஜ்ஞாநமும், நானுன்னை ரக்ஷிப்பனென்றால் ப்ரதிஷேதியாமையுமே, சாஸ்த்ரம் சிலுகிடாமைக்கு வேண்டுவது. ஜ்ஞாநமடியாக பலமுண்டாகையாலும், அதுதான் ஸ்வரூபமாகையாலும், ஸர்வமுக்திப்ரஸங்கஸஹேதுகத்வங்கள் வாராதென்றபடி.

சூக. இத்தலையில் சிலஸாபேக்ஷனாய், பலப்ரதனானால் வருங்குறையேதென்ன, உபயர்க்குங் கொத்தையாமென்கிறார், (அல்லாதபோது) இத்யாதியால். ஆத்மஜ்ஞாநாதியொழிய அவன்ஸாபேக்ஷனாக இவன் சிறிது செய்யும்போது, நிருபாதிகரக்ஷ்யரக்ஷகஸம்பந்தத்துக்கும் ஸாபேக்ஷத்வசங்காகந்தமற்ற பூர்த்திக்கும், ஸோபாதிகத்வாபூர்த்தித்வங்களாகிற கொத்தையாம். ஸார்வபௌமன் ஸாபேக்ஷனாய் தன்மஹிஷீரக்ஷணம்பண்

சூ0. பலத்துக்கு ஆத்மஜ்ஞாநமும் அப்ரதிஷேதமுமே வேண்டுவது.

சூக. அல்லாதபோது பந்தத்துக்கும் பூர்த்திக்கும் கொத்தையாம்.

ஜீ.—அதவா இதினநுபாயத்வத்தை ஸாதிக்கைக்காக இதினுடைய ஸ்வரூபாங்கங்களிரண்டையும் தாமே யருளிச்செய்கிறார், (இதுதனக்கு[ருரு]) இத்யாதிவாக்யத்வயத்தாலே; இதினநுபாயத்வத்தை ஸ்ப்புடமாக்குகைக்காக ஸித்தஸாத்யோபாயங்களின்படிகளை தர்சிப்பிப்போமென்று திருவுள்ளம் பற்றி, ப்ரதமம் ஸித்தோபாயத்தின்படியை யருளிச்செய்கிறார், (உபாயம்[ருள]) இத்யாதியால்; அநந்தரம் ஸாத்யோபாயத்தின்படியை யருளிச்செய்கிறார், (உபாயாந்தரம்[ருஅ]) இத்யாதியால்; இவை யிரண்டிலும் ப்ரபத்திக்குண்டான வ்யாவ்ருத்தியை தர்சிப்பிக்கிறார், (இதிரண்டையும்) இத்யாதியால் என்றிங்ஙனே ஸங்கதியாகவுமாம்; இவ்வுபயஸங்கதிக்கும் வாக்யங்களுக்கர்த்தம் பூர்வவத்.

சூ0. இப்படி யிப்ப்ரபத்தி யுபாயமல்லவாய்விட்டால், பலஸித்திக்கு இவன்பக்கலிலும் சிலவேண்டாவோவென்ன வருளிச்செய்கிறார், (பலத்துக்கு) என்றுதுடங்கி. (பலத்துக்கு) என்றது-பலஸித்திக்கென்றபடி; (ஆத்மஜ்ஞாந)மாவது ஸ்வஸ்வரூபஜ்ஞாநம். அதாவது-ததேகசேஷத்வ ததேகரக்ஷ்யத்வங்களையறிகை; (அப்ரதிஷேத)மாவது - நிருபாதிகசேஷியாய் நிருபாதிகரக்ஷகனானவவன் பண்ணும் ரக்ஷணத்தை விலக்காமை. அதாவது - ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயநிவ்ருத்தி. அவதாரணத்தால்-இவை யிரண்டுமொழிய பின்னையொன்றும் வேண்டாவென்றபடி. சரமபதத்திற் சொல்லுகிற பலத்துக்கு, ப்ரதமபதத்திற்சொல்லுகிற ஆத்மஜ்ஞாநமும், மத்யமபதத்திற்சொல்லுகிற அப்ரதிஷேதமுமிறே வேண்டுவது.

சூக. இப்படியன்றிக்கே, பலஸாதநமாக இவனும் சில செய்யவேணுமென்றால், வருந்தீங்கென் என்ன வருளிச்செய்கிறார், (அல்லாத) என்று துடங்கி. (அல்லாதபோது) என்றது - இவ்வளவன்றிக்கே பலஹேதுகமாக இவன் சில செய்யவேண்டும்போதென்றபடி; (பந்தத்துக்கும் பூர்த்திக்கும் கொத்தையா)கையாவது- இவனுடையரக்ஷணம் தன் பேறும்படியான

ஆ.—ணுகையும், அவள் ஸ்வரக்ஷணார்த்தமாக யத்நம்பண்ணுகையும்; ஸம்பந்தபூர்த்திகளுக்குக் கொத்தையாகாதிராதிறே.

ஈஉ. ஆகில் அநிஷ்டநிவ்ருத்த்யர்த்தமாகவாகிலும் சிறிது யத்நிக்கவேண்டாவோவென்ன, அப்படிசெய்யில் அவ்வநிஷ்டமபிவ்ருத்தமாய்விடுமென்கிறார், (ஆபத்தை) இத்யாதியால். ஆமஜ்வரத்தை யாற்றக்கோலி ஆற்றிலே முழுகத்தேடுவாரைப்போலே, ஸம்ஸாரமாகிற மஹாபத்தை ஸ்வயத்நத்தாலே மறுவலிடாதபடி போக்கிக்கொள்ளுகிறோமென்று விபரீதஜ்ஞாநத்தாலே ப்ரமித்து, ஸ்வயத்நநிவர்த்யமல்லாத வந்தவாபத்தை, ஸ்வயத்நமாகிற வபத்த்யஸேவையாலே சதசாகமாகவிளைத்துக்கொள்ளாதே, அந்த ப்ரமத்தை விட்டு, ஸ்வயத்நநிவ்ருத்தனாயிருக்கையே தன்னிவ்ருத்திக்கு வேண்டுவது. அநிஷ்டநிவ்ருத்தியில் இவன் கைமுடங்கவே, தந்நிவர்தகன் கை நிமிருமிறே.

ஈங. ஆகில் ரக்ஷணத்துக்கு வேண்டுவதேதென்ன, அவன் திருவுள்ளத்தைப் பின்செல்லுகையே வேண்டுவதென்கிறார், (ரக்ஷணத்துக்கு) இத்யாதியால். நிருபாதிகரக்ஷகன் பண்ணும் ரக்ஷணத்துக்கு பக்ஷபாதி

---

ஈஉ. ஆபத்தைப் போக்கிக்கொள்ளுகிறோமென்று ப்ரமித்து அத்தை விளைத்துக்கொள்ளாதொழிகையே வேண்டுவது.

ஈங. ரக்ஷணத்துக்கபேக்ஷிதம் ரக்ஷ்யத்வாநுமதியே.

---

ஜீ.—அவனுடைய நிருபாதிகசேஷித்வத்துக்கும், இவனுடைய ப்ரவ்ருத்தியிலொன்றையுமபேக்ஷியாத நிரபேக்ஷோபாயத்வத்துக்கும் அவத்யமாய்த் தலைக்கட்டுகை.

ஈஉ. ஆனாலும் அநந்தக்லேசபாஜநமான ஸம்ஸாரஸாகரத்தில் அழுந்திக் கிடந்தலைகிற தன்னுபத்தையுணர்ந்தால், ஆபத்ஸகனானவீச்வரனை ஸ்வப்ரபத்தியாலே வசீகரித்து, தத்ப்ரஸாதத்தாலே இத்தைக் கழித்துக்கொள்ள வேண்டாவோ வென்ன வருளிச்செய்கிறார், (ஆபத்தை) என்றுதுடங்கி. அதாவது - ஸர்வேச்வரன் திருவடிகளிலே ப்ரபத்தி பண்ணி, ஸம்ஸாரமாகிற (ஆபத்தைப் போக்கிக்கொள்ளுகிறோமென்று) தான் பண்ணுகிற ப்ரபத்தியாலே, தன் (ஆபத்தைப்போக்கிக்கொள்ளுகி) றானாக (ப்ரமித்து), ததேகபாரதந்த்ர்யரூபஸ்வரூபஹாநியாகிற ஆபத்தை (விளைத்துக்கொள்ளாதொழிகையே) தந்நிவ்ருத்திக்கு இவன் செய்ய வேண்டுவதென்றபடி. ஓராபத்தைப் பரிஹரிக்கப்புக்கு ஓராபத்தை விளைத்துக்கொள்ளாதே, இவன் ஸ்வயத்நத்தில் நிவ்ருத்தனாயிருக்கவே எம்பெருமான் தானே ரக்ஷிக்குமென்று கருத்து. (அத்தை) என்றது-ஆபத்ஸாமாந்யத்தைப்பற்ற; அல்லது ப்ரக்ருதாபத்துதன்னையே பராமர்சித்தபடியன்று.

ஈங. ஆனாலும் "రక్ష్యాపేక్షాం ప్రతీక్షతే" "ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே" என்று ரக்ஷகனான ஸர்வேச்வரன், ரக்ஷ்யபூதனான இச்சேதநனுடையவபேக்ஷையைப் பார்த்திருக்குமென்கையாலே, அவன்பண்ணும்ரக்ஷணத்துக்கு இவனுடைய வபேக்ஷையும் வேண்டியன்றோ யிருக்கிறதென்ன வருளிச்செய்கிறார், (ரக்ஷணத்துக்கு) என்றுதுடங்கி. அதாவது - நிருபாதிகரக்ஷகனானவன் பண்ணும் ரக்ஷணத்துக்கு இச்சேதநன்பக்கல் வேண்டுவது, நீ யெனக்கு ரக்ஷ்யமென்றால் அல்லேனென்னாதே, தன்னு

ஆ.—யாகாமைக்கபேக்ஷிதம், நீ யெனக்கு ரக்ஷ்யமென்றால் ஓக்குமென்று அநுமதிபண்ணுமென்றிவ்வளவே வேண்டுவது. அதில்லமையிறே அநாதி காலமிழந்ததும்.

கூச. இவ்வநுமதிதான் ஸாதநமாகாதோவென்னவொண்ணுதென்கிறார் மேல் (இதுதான்) இத்யாதியால். இந்த ரக்ஷ்யத்வாநுமதிதான் ஸாத்யஸித்தரூபமான எல்லாவுபாயங்களுக்கும் வித்யநுஷ்டாந த்வாரேண பொதுவாகையாலும், ஸ்வரூபதர்மமான சைதந்யத்தின் ஆகாராந்தரமான பரேச்ச்சாநுவிதாநரூபகார்யமாகையாலும், வரணதசையளவன்றிக்கே ப்ராப்யப்ராப்திதசையிலும் ''அது நமது விதிவகையே'' என்றநுமதிமுன்னாக ப்ராபிக்கவேண்டி யநுவர்திக்கையாலும், சேஷமாய் பரதந்த்ரமான ஸ்வரூபத்துக்கு சேஷ்யதிசயகரியாய் தச்சித்தாநுவிதாநம் பண்ணிக்கொண்டு ஸ்வரூபத்தை யதிரேகித்திருப்பதொன்றல்லாமையாலும், சைதந்யாதாரமல்லாத அசித்வ்யாவர்தகையான சைதந்ய

---

கூச. எல்லாவுபாயத்துக்கும் பொதுவாகையாலும், சைதந்யகார்யமாகையாலும், ப்ராப்திதசையிலு மநுவர்திக்கையாலும், ஸ்வரூபாதிரேகியல்லாமையாலும், அசித்வ்யாவ்ருத்தவேஷத்தை ஸாதநமாக்கவொண்ணுது.

---

ஜீ.—டைய ரக்ஷ்யத்வத்தை இசையுமிவ்வளவேயென்கை. ''రక్ష్యాపేక్షాం'' ''ரக்ஷ்யாபேக்ஷாம்'' என்கிறவிடத்தில் சொல்லுகிறவபேக்ஷை, ரக்ஷ்யத்வாநுமதித்யோதகமித்தனை என்று கருத்து. ''యాచ్ఞా ప్రపత్తిః ప్రార్థనామతిః'' ''யாச்ஞா ப்ரபத்திః ப்ரார்த்தநாமதிঃ''என்கிற ஸ்வீகாரத்தை அப்ரதிஷேதத்யோதகமென்றிறே இவர்தாமருளிச்செய்தது.

கூச. இப்படி அநுமதிஸாபேக்ஷனாய் ரக்ஷிக்குமாகில் இவ்வநுமதிதான் ஸாதநமாகாதோவென்ன வருளிச்செய்கிறார், (எல்லாம்) என்றுதுடங்கி. (எல்லாவுபாயத்துக்கும் பொதுவாகை)யாவது - போகமோக்ஷோபாயங்களில் ஏதேனுமொன்றிலே யதிகரிக்கு மவனுக்கும், நீ யிவ்வுபாயத்தை யநுஷ்டிடியென்றால் அப்படியே செய்கிறேன் என்னுமநுமதிபூர்வகமாக அதிலிழியவேண்டுகையாலே, ஸகலோபாயஸாதாரணமாயிருக்கை. இத்தாலோரிடத்திலும் இவ்வநுமதிக்கு அதிகாரிவிசேஷணத்வமொழிய, பலஸாதநத்வமில்லாமை காட்டப்பட்டது. (சைதந்யகார்யமாகை)யாவது ரக்ஷ்யத்வம் சேதநாசேதநஸாதாரணமாயிருக்கச்செய்தே, ஜ்ஞாநசூந்யமாகையாலே அவ்வாகாரத்தை அறிகைக்கு யோக்யமல்லாதவசேதநம்போலன்றிக்கே, ஜ்ஞாநாச்ரயபூதனாகையாலே அத்தை யறிகைக்கு யோக்யனாயிருக்கிற இச்சேதநன்பக்கலுண்டானவநுமதி, இவனுடைய ஜ்ஞாநகார்யமாய்க்கொண்டு வந்ததாயிருக்கை; இத்தாலிவ்வநுமதி சேதநனுனவாசியைப்பற்ற வந்ததாகையாலே, ஸாதநகோடியிலக்வயியாதென்றபடி. (ப்ராப்திதசையிலுமநுவர்திக்கை)யாவது உபாயதசையளவிலன்றிக்கே உபேயதசையிலும், அவன் வ்யாமோஹாநுகுணமாகக் கொள்ளும் விநியோகவிசேஷங்களில், திருவுள்ளமானபடிகொண்டருளவேணுமென்னுமநுமதி இவனுக்கு நடந்துசெல்லுகை. இத்தால் ஸாதனமாகில் பலஸித்தியளவிலே மீளவேணுமென்றுகருத்து. (ஸ்வரூபாதிரேகியல்லாமை)யாவது, சேஷிசெய்யுமதுக்குடன்பட்டிருக்கை சேஷத்வபாரதந்த்ர்யகார்யமாகையாலே, இவ்வநுமதி ஸ்வரூபத்துக்குப்புறம்பன்றிக்கே

ஆ'—வேஷாநுமதியை, பொதுவன்றியே ஸ்வதந்த்ரமாய் சேதநதர்மமல்லாததாய் ஸ்வதசையளவிலே நிற்பதாய் ஸ்வரூபாதிரேகியான ஸாதந கோடியிலே ஓதுக்கவொண்ணாது. (இதுதான்) என்றது ப்ரபத்தியென்று கொள்ளும்போது, ஸக்ருத்க்ருதையான வித்தை, தசாந்தரத்திலநுவர்திக்குமென்னக்கூடாது.

சுடு. இவன் தன்னுடைய அசித்வ்யாவ்ருத்திக்கு ப்ரயோஜநமின்னதென்கிறார் மேல், பகவச்சேஷமான ஜ்ஞாநாகந்தைகரூபையான (அசித்வ்யாவ்ருத்திக்கு) அநுரூபமான (ப்ரயோஜநம்), பரமசேதநமான ஸித்தோபாயத்தின்பக்கல் ''என்னைத் தீமனங்கெடுத்தாய்'' ''மருவித்தொழும் மனமேதந்தாய்'' என்கிற (உபகாரஸ்ம்ருதியும்), நித்யசேஷிவிஷயநித்ய கைங்கர்யமாகிற (உபேயத்தில்) ''உகந்து பணிசெய்து'' என்கிற(உகப்பும்) ஸ்ம்ருதிப்ரீதியோக்யதையற்ற அசித்திற்காட்டில் ததுபயயோக்யதையிறே இவன் சேதநனானவற்றால் பெற்றபலம்.

சுசு. ஈத்ருசனான இவனுக்கு ப்ராப்த்யுபாயமாயறுவது இன்னதுஎன்கிறார்மேல், (''உன் மனத்தால்'') இத்யாதியால். ''குவளையங்கண்ணி''என்கிறஜ்ஞாநமும், ''கொள்ளியம்பாவை'' என்கிற பாரதந்த்ர்யமும், ''நின்

சுடு. அசித்வ்யாவ்ருத்திக்கு ப்ரயோஜநம், உபாயத்திலுபகாரஸ்ம்ருதியும் உபேயத்திலுகப்பும்.

சுசு. "உன்மனத்தாலென்னினைந்திருந்தாய்" என்கிறபடியே ப்ராப்திக்குபாயம் அவனினைவு.

ஜீ.—ஸ்வரூபமாயிருக்கை; இத்தால் ஸாதநமாகில் ஸ்வரூபாதிரேகியாயிருக்கவேணுமென்றுகருத்து. (அசித்வ்யாவ்ருத்தவேஷ)மாவது ஜ்ஞாத்ருத்வத்தாலே ஜ்ஞாநசூந்யமானவசித்தில் வேறுபட்டிருக்கிற ஆத்மாவினுடைய ஆகாரம்; இவ்விடத்தில் அவ்வாகாரமாவது - ஜ்ஞாநகார்யமான அநுமதி; இத்தை (ஸாதநமாக்கவொண்ணாது) என்றது - இப்படி இதினுடைய அஸாதநத்வஹேதுக்களநேகமுண்டாகையால் இத்தை ஸாதநமாகக் கற்பிக்கப்போகாதென்றபடி. (அசித்வ்யாவ்ருத்திவேஷம்) என்று பாடமாகில், ஜ்ஞாநசூந்யமான வசித்திற்காட்டில் ஆத்மாவுக்குண்டான ஜ்ஞாத்ருத்வரூபவ்யாவ்ருத்தியின் வேஷமானவநுமதியை என்று சப்தார்த்தம்.

சுடு. ஆனல் இவ்வசித்வ்யாவ்ருத்திதனக்கொருப்ரயோஜநம் வேண்டாவோவென்ன வருளிச்செய்கிறார், (அசித்வ்யாவ்ருத்திக்கு) என்றுதுடங்கி. (உபாயத்திலுபகாரஸ்ம்ருதி)யாவது ''என்னைத் தீமனங்கெடுத்தாய்'' ''மருவித்தொழும் மனமேதந்தாய்'' என்கிறபடியே ஸித்தோபாயமானவெம்பெருமான் தன்திறத்தில் பண்ணினவுபகாரங்களையநுஸந்திக்கை. (உபேயத்திலுகப்)பாவது-அவன்திருவடிகளில் தான் பண்ணுங்கைங்கர்யங்களில் ''உகந்துபணிசெய்து'' என்கிறவுகப்பும், அத்தாலவனுக்கு விளைகிற ப்ரீதியைக்கண்டு தனக்கு விளைகிற ப்ரீதியும்.

சுசு. இப்படி இவன்பக்கலுள்ளதொன்றுமுபாயமன்றாகில், இவனுக்கு தத்ப்ராப்த்யுபாயந்தானேதென்ன வருளிச்செய்கிறார், (''உன் மனத்தால்'') என்றுதுடங்கி. அதாவது இத்தலையிலுள்ளதொன்றும் பேற்றுக்கு உபாயமல்லாமையாலே, ''உன்மனத்தாலென்னினைந்திருந்தாய்''

ஆ.—தாள்நயந்த" என்கிற ஸ்வரூபாநுரூபபக்தியும், அங்கீகாரஹேதுவன்றியே இவற்றைப் பார்த்து கைவிடவோ, உன்னையேபார்த்து கைக்கொள்ளவோ, ஏது திருவுள்ளம் என்கிற திருமங்கையாழ்வார் திருவுள்ளக் கருத்தின்படியே, பரதந்த்ரனாய் ஸ்வம்மானவிவன் ஸ்வதந்த்ரனாய் ஸ்வாமியானவவனை ப்ராபிக்கைக்குபாயமாயறுவது, நினைத்தபடிசெய்து தலைக்கட்டவல்லனுமாய், ப்ராப்தனுமான அவனுடைய இவனை யுஜ்ஜீவிப்பிக்க வேணுமென்னும் சலனமற்ற (நினைவு).

சுஎ. ஆகில் இன்னாள்வரை யவனுக்கின்னினைவுண்டாய்த்தில்லையோ வென்ன வருளிச்செய்கிறார், (அதுதான்) இத்யாதியால். ப்ராப்த்யுபாயமாயற்றவவன்னினைவுதான், இவனவனைப் பிரிந்து திரிகிறவநாதிகாலமே பிடித்து (எப்போதுமுண்டு).

சுஅ. ஆகில் இன்னாள்வரை பலியாதொழிவானென் என்ன வருளிச்செய்கிறார்,(அது பலிப்பது)இத்யாதி. அநாதியைப்பிடித்துண்டான வவன் நினைவு இவனுக்கு ப்ராப்திஸாதநமாய் பலிப்பது, தன்னநுமதியளவாகதத்ப்ராப்திஸாதநமென்று ப்ரமிக்கிற இந்த அஜ்ஞசேதநனுடைய ப்ரதிபந்தகமான ஸ்வரக்ஷணநிமித்தமான நினைவு, அவன் நினைவே தஞ்சமென்னும்படி அவன் தன்னினைவாலே ஸவாஸநமாகவற்றதாகில்.

சுக. ப்ராப்தியிலிவன்னினைவு குலையவேணுமென்னுமிதுக்கு சிஷ்டவசநங் காட்டுகிறார், (அந்திமகாலம்) இத்யாதியால். அழகியமணவாளப்பெருமாள் பட்டருடைய வந்திமதசையிலே நஞ்சீயரெழுந்தருளி வினவி

---

சுஎ. அதுதானெப்போதுமுண்டு.

சுஅ. அது பலிப்பது இவன்னினைவு மாறினால்.

சுக. "அந்திமகாலத்துக்குத் தஞ்சம், இப்போது தஞ்சமென் என்கிற நினைவு குலைகை" என்று ஜீயருளிச்செய்வர்.

---

ஜீ.—என்று கைகழிந்தவற்றுக்கும் ஒருபோக்கடிபார்த்திருக்கக்கடவவுன் திருவுள்ளத்தால் நினைத்திருந்ததென் என்று, ஹிதைஷியானவவன்நினைவே வுபாயமென்று ஆழ்வாரநுஸந்தித்தபடியே, அவனைப் ப்ராபிக்கைக்குபாயம், ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியாய் ப்ராப்தனாய் பரமதயாளுவாயிருக்கிறவவனுடைய, இச்சேதநோஜ்ஜீவநார்த்தமான நினைவென்றபடி.

சுஎ. அந்நினைவுதானவனுக்கு எப்போதுண்டாவதென்ன வருளிச்செய்கிறார், (அதுதானெப்போதுமுண்டு) என்று. (எப்போதும்)என்றது - இவன் ''யாதானும்பற்றி நீங்கித்திரிகிறகாலத்தோடு இன்றோடு வாசியற ஸர்வகாலத்திலுமென்றபடி.

சுஅ. ஆனால் அதிந்நாள்வரை பலியாதிருப்பானென் என்னவருளிச்செய்கிறார், (அது பலிப்பதிவன்னினைவுமாறினால்) என்று. அதாவது-அவன்னினைவு இவனுக்கு கார்யகரமாவது, இவனுடைய ஸ்வரக்ஷணசிந்தை மாறினகாலத்திலென்றபடி.

சுக. இவ்வர்த்தத்தினுடைய ஆப்தயர்த்தமாக நஞ்சீயர் வார்த்தையை யருளிச்செய்கிறார், (அந்திமகாலத்துக்கு) என்றுதுடங்கி. அதாவது-நஞ்சீயர், தம்முடைய ஸ்ரீபாதத்திலேயுள்ளாரொரு ஸ்ரீவைஷ்ணவரை

ஆ.—கைங்கர்யஸமாநமாய், இதரஸாதநங்கள்போலன்றியேபலவிளம்பாஸஹமாயிருக்குமென்றிறே ஸித்தஸாதநத்துக்கேற்றம்; அப்படியே யிவையுமென்று ஸாத்யஸமாநத்தை மேலேகூட்டியுமருளிச் செய்வர்.

ஹேதுஸாம்யத்தாலிவையும் ஸித்தஸாதநமாமென்கிறார் மேல் (ஸாத்யப்ராவண்யம்) இத்யாதியால். கைங்கர்யரூப ஸாத்யப்ராப்தி ப்ராவண்யமடியாகவிறே தத்விளம்பாஸஹமான ஸித்தஸாதநத்திலிழிகிறதும்; தத்விக்ரஹாநுபவரூபகைங்கர்யப்ராவண்யத்தாலே இவற்றிலே யிழிகையால், இவற்றையும் ஸித்தஸாதநம் என்னலாமென்று கருத்து. ஆக, பக்திபாரவச்யகார்யங்களான காமப்ஜநாதிகள் உபேயாந்தர்கதமாய்க்கொண்டு, உபாயப்ரதிபந்தகமாகாதென்றதாய்த்து.

கூசு. இப்படி ப்ரவர்தகமான விந்த ப்ராவண்யம் ஆத்மகுணகணகாரணமாயிருக்கு மென்கிறார், (இவனுக்குப் பிறக்கும்) இத்யாதியால். ஸத்த்வகுணோந்மேஷமுடைய விவனுக்கு ஆசார்யாங்கீகாரஹேதுவாக பகவத்ப்ரஸாதத்தாலே பிறக்கும் முமுக்ஷுத்வமுக்தத்வாநுகுணமான ஜ்ஞாநாத்யாத்மகுணங்களெல்லாவற்றுக்கும், ப்ரகாச ப்ரதாநஹேது ஸத்தாப்ரயுக்தமாய்த் துடிப்பிக்குமிந்த பகவத்ப்ராவண்யம்.

துக்கேற்றம்; ஸாத்யப்ராவண்யமடியாகவிறே ஸாதநத்திலிழிகிறது.

கூசு. இவனுக்குப் பிறக்குமாத்மகுணங்களெல்லாவற்றுக்கும் ப்ரதாநஹேது இந்த ப்ராவண்யம்.

ஜீ.—தலானவிஸ்ஸாதநத்திலிழிகிறதென்கை. ஆகையாலே, ஏவம்பூதப்ராவண்யத்தின் முறுகுதலாலே கண்ணைஞ்சுழலையிட்டுச்செய்கிற விப்ப்ரவ்ருத்திகள் உபாயம் மேல்விழுந்து கார்யம்செய்கைக்குடலாமித்தனையல்லது, தத்ப்ரதிபந்தகமாகாதென்று கருத்து. ஆக, (இவனுக்கு வைதமாய் வருமதிறே த்யஜிக்கலாவது) என்றுதுடங்கி இவ்வளவும்வர, பிள்ளை திருநறையூரரையர் ப்ரவ்ருத்திவ்யாஜத்தாலே, பகவத்ப்ரபந்நனாயிருந்தானேயாகிலும் உபேயபரனானவனுக்கு தத்விஷயப்ராவண்யத்தால்வரும் ஸ்வதேஹத்யாகம் துஸ்த்யஜம், உபாயபுத்த்யா வநுஷ்டிதமல்லாமையாலே அது தானுபாயகோடியிலந்வயியாது, வஸ்துகத்யா அந்வயித்ததாகிலும் ப்ரேமபரவசர்க்கு தோஷாயவன்று, புத்திபூர்வகமாகவநந்யோபாயத்வாதிகள் குலையும்படியான ப்ரவ்ருத்திகள் தெளியக்கண்டவர்கள்பக்கலிலும் காண்கையாலே; இவைதான் அஜ்ஞாநமூலமேயாகிலும் ப்ரேமகார்யமான வஜ்ஞாநத்தாலே வந்தவையாகையால் அதிச்லாக்யங்கள், ஸித்தோபாயப்ரதிபந்தகமாகாது; அவ்வளவன்றிக்கே, அத்தோடொக்கச்சொல்லலாம்படியன்றோ இவற்றின்பெருமையென்று சொல்லுகையாலே உபேயாதிகாரத்தில் (தன்னைப் பேணாமை) என்று சொன்ன விது அநந்யஸாதநத்வத்துக்குச் சேருமோவென்னுமதிசங்காபரிஹாரம் பண்ணப்பட்டது.

கூசு. ஏவம்பூதமான ப்ராவண்யம்விஷயவைலக்ஷண்யாதீநமத்தனையன்றோ, சமதமாத்யாத்மகுணங்களன்றோ அதிகாரத்தை மினுங்குவிப்பதென்ன, அவைதன்னையுமிதுதானேயுண்டாக்குமென்கிறார்மேல், (இவனுக்கு) என்றுதுடங்கி. "శమదమనియతాత్మా" "சமதமநியதாத்மா" "అమానిత్వమ్" "அமாநித்வம்" இத்யாதியிற்சொல்லுகிறபடியே இச்சேதநனுக்குண்டாகத்தக்க ஆத்மகுணங்கள் தானநேகமுண்டிறே; அவையெல்லாவற்றுக்குமிந்த ப்ராவண்யம் (ப்ரதாநஹேது) வாகையாவது - அநுகூலஸஹவாஸசாஸ்த்ராப்யாஸாசார்யோபதேசாதிகளான ஹேத்வந்தரங்களிற் காட்டில் முக்க்ய ஹேதுவாயிருக்கை.

ஆ.—௯௫. உக்தார்த்தப்ரமாணோபாதாநம்பண்ணுகிறார், ("மாற்பால்") இத்யாதியால். "*மாற்பால்மனஞ்சுழி" த்தபின்பிறே "மங்கையர்தோள்கைவிட்ட" து; ("పరమాత్మని యో రక్తః" "பரமாத்மநி யோ ரக்தః") என்று பரமாத்மாவின்பக்கல் ரக்தியுண்டானாலிறே அபரமாத்மாக்கள்பக்கல் விரக்தியுண்டாவது; அந்தமிதுநசேர்த்தியைக் கண்டபின்னிறே இந்த ஐச்வர்யகைவல்யங்களை யொழிந்தது.

௯௬. ப்ராவண்யஹேதுகுணப்ரதாநங்கள் இன்னதென்கிறார், (ஆத்மகுணங்களில்) இத்யாதியால். ஸ்வாதிகாராபேக்ஷிதஜ்ஞாநாத்யாத்மகுணங்களில், அதிகாராந்வயப்ரதாநம் பாஹ்யகரணநியமநரூபமான சமமும் அந்தஃகரணநியமநரூபமான தமமுமென்கிறார்; "శాన్తో దాన్త ఉపరతస్తితిక్షుస్సమాహితః" "சாந்தோ தாந்த உபரதஸ்திதிக்ஷுஸ் ஸமாஹிதः" "శమదమనియతాత్మా" "சமதமநியதாத்மா" இத்யாதிப்ரமாணஸித்தங்களிறே யிவை.

---

௯௫. "மாற்பால் மனஞ்சுழிப்ப," "పరమాత్మని యో రక్తః" "பரமாத்மநி யோ ரக்தः" "கண்டுகேட்டுற்றுமோந்து".

௯௬. ஆத்மகுணங்களில் ப்ரதாநம் சமமும் தமமும்.

---

ஜீ.—௯௫. இவ்வர்த்தத்தில் ப்ரமாணோபாதாநம் பண்ணுகிறார், ("மாற்பால்") என்று துடங்கி. "மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர் தோள் கைவிட்டு - நூற்பால் மனம்வைக்க நொய்விதாம்" என்று-ஸர்வேச்வரன் பக்கலிலே ஹ்ருதயம் ப்ரவணமாக, போக்யைகளான ஸ்த்ரீகளுடையதோளோடே யணைகையில் நசையற்று, ப்ரமாணங்களிலே மநஸ்ஸைவைக்கவெளிதாமென்றும்; "పరమాత్మని యో రక్తో విరక్తోఽపరమాత్మని" "பரமாத்மநி யோ ரக்தோ விரக்தோ஽பரமாத்மநி" என்று - பரமாத்மாவின் பக்கலிலே ரக்தனாய் அத்தாலே பரமாத்மேதரவிஷயத்தில் விரக்தனானவனென்றும்; "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக் கண்ட சதிர்கண்டு - கண்டுகேட்டுற்று மோந்துண்டுழலுமைங்கருவிகண்ட வின்பம் தெரிவரிய வளவில்லாச் சிற்றின்பம் ஒழிந்தேன்" என்று-பெரிய பிராட்டியாரும் தேவருமாயொரு தேசவிசேஷத்திலே யெழுந்தருளியிருக்கிற சேர்த்தியைக்கண்டு அங்கேப்ரவணனாய், ஐச்வர்யகைவல்யங்களில் விரக்தனானேனென்றும் பகவத்ப்ராவண்யமிதரவிஷயவிரக்திஹேதுவாகச் சொல்லப்பட்டதிறே.

௯௬. பகவத்ப்ராவண்யமாத்மகுணங்களெல்லாவற்றுக்கும் ப்ரதாநஹேதுவென்று ப்ரஸ்தாவித்து, இதரவிஷயவிரக்திஹேதுத்வமாத்ரத்தில் ப்ரமாணங்களை தர்சிப்பிப்பானென் என்கிற சங்கையிலே யருளிச்செய்கிறார், (ஆத்மகுணங்களில் ப்ரதாநம் சமமும் தமமும்) என்று. (சம)மாவது - அந்தஃகரணநியமநம்; (தம)மாவது - பாஹ்யகரணநியமநம்; "శమశ్చిత్తప్రశాన్తిస్స్యాద్దమశ్చేన్ద్రియనిగ్రహః" "சமச்சித்தப்ரசாந்திஸ்ஸ்யாத் தமச்சேந்த்ரியநிக்ரஹः" என்னக்கடவதிறே. "క్షమా సత్యం దమశ్శమః" "க்ஷமா ஸத்யம் தமச்சமः" என்கிறவிடத்தில் "దమో బాహ్యకరణానామనర్థవిషయేభ్యో నియమనమ్; శమోఽన్తఃకరణస్య తథా నియమనమ్" "தமோ பாஹ்யகரணாநாமநர்த்தவிஷயேப்யோ நியமநம்; சமோ஽ந்தஃகரணஸ்ய ததா நியமநம்" என்றிறே பாஷ்யகாரருமருளிச்செய்தது; மாறிச்சொல்லுமிடமுமுண்டு. இந்தசமதமங்களுண்டான விடத்தில் அல்லாதகுணங்கள் தன்னடையே வருமாகையாலே ப்ரதாநமான விவற்றுக்கு ஹேதுவென்னுமிடத்தில் ப்ரமாணம் காட்டப்பட்டதென்று கருத்து. — அன்றிக்கே, கீழ்ச்சொன்ன விரக்திஹேதுத்வம், ஸகலாத்மகுணோத்பத்திக்கும் ஹேதுவென்னுமிடத்துக்கு உபலக்ஷணமாக்கி, இவ்வாத்மகுணங்களில்

ஆ.—கூஎ. இவை யிரண்டாலும் வரும் ப்ரயோஜநவிசேஷங்களை ஆரோஹணக்ரமத்தாலும், ப்ரதாநப்ரயோஜநமான ப்ராப்யலாபஹேதுபரம்பரைகளை அவரோஹணக்ரமத்தாலுமருளிச்செய்கிறார் மேல், (இவையிரண்டும்) இத்யாதியால். ப்ரதாநகுணங்களான விவையிரண்டும், ஸதாசார்யபகவத்ப்ரஸாதத்தாலே நிலைநிற்க வுண்டாகப்பெற்றால், இவை கண்டுகந்து விசேஷேண கடாக்ஷிக்கும் ஹிதைஷியான ஸதாசார்யன், ஸ்வாபிமதார்த்தத்தையுபதேசிக்கும்படி கைபுகுரும்; இது ப்ரதமாங்கீகாரமல்லாமையால் ஸஹேதுகத்வதோஷம் வாராது; முன்பு நிர்ஹேதுகமாக வங்கீகரித்தபின்பு, சமதமாதிகண்டுகந்துவிசேஷமாக வங்கீகரிக்கையுமுண்டிறே. இத்தலையில் நன்மைகண்டுகக்கும் ஹிதைஷியான ஸதாசார்யன், ஜாத்யந்தனுக்கு நிதிபோல கைபுகுந்தவாறே, ஸ்வரூபாதிப்ரகாசகமான மாணிக்கச் செப்பான திருமந்த்ரம், ஸ்வார்த்தாநுஸந்தாநபரனும்படி கைபுகுரும்; அர்த்தப்ரதாநமான திருமந்த்ரம் அநுஷ்டாநபர்யந்தமாக கைபுகுந்தவாறே, அதில்ச்சமித்த "ஸ்ரீஸ்தநாபரண"மான வீச்வரன் "இனிநான்போகலொட்டேன்" என்

---

கூஎ. இவையிரண்டுமுண்டானால் ஆசார்யன் கைபுகுரும்; ஆசார்யன் கைபுகுந்தவாறே திருமந்த்ரம் கைபுகுரும்; திருமந்த்ரம் கைபுகுந்தவாறே ஈச்வரன் கைபுகுரும்; ஈச்வரன்கைபுகுந்தவாறே, "வைகுந்தமாநகர் மற்றது

---

ஜீ.—ப்ரதாநமேதென்கிற சங்கையிலே, (ஆத்மகுணங்களில் ப்ரதாநம் சமமும் தமமும்) என்றருளிச்செய்தாராகவுமாம்.

கூஎ. இந்தசமதமங்களுண்டானால் இவனுக்குண்டாகக்கடவ பலபரம்பரையை யருளிச்செய்கிறார் மேல், (இவை யிரண்டும்) என்றுதுடங்கி. பகவத்ப்ராவண்யமடியாகவரும் பரிபூர்ணமான சமதமங்களைக் கீழ்ச்சொல்லிற்றேயாகிலும், இவ்விடத்தில் ஆசார்யாங்கீகாரத்துக்கு பூர்வபாவியான வளவிலே யொதுக்கிச் சொல்லுகிறது. இந்தசமதமங்களி(ரண்டுமுண்டானால்ஆசார்யன் கைபுகுரு)கையாவது- இவ்வாத்மகுணம்கண்டுகந்து ஸம்ஸாரநிவர்தகமான பெரியதிருமந்த்ரத்தை ஸார்த்தமாகவுபதேசிக்கும்படி யிவனுக்குவச்யனாகை. "తస్మై స విద్వానుపసన్నాయ సమ్యక్ప్రశాన్తచిత్తాయ శమాన్వితాయ। యేనాక్షరం పురుషం వేద సత్యం ప్రోవాచ తాం తత్త్వతో బ్రహ్మవిద్యామ్" "தஸ்மை ஸ வித்வாநுபஸந்நாய ஸம்யக் ப்ரசாந்தசித்தாய சமாந்விதாய । யேநாக்ஷரம் புருஷம் வேத ஸத்யம் ப்ரோவாச தாம் தத்த்வதோ ப்ரஹ்மவித்யாம்" என்று- சமதமோபேதனைக்கொண்டு உபபந்நனானவனுக்கிறே ப்ரஹ்மவித்யையை தத்த்வத: உபதேசிக்கச்சொல்லிற்று. இந்த ச்ருதியில் ஆசார்யோபஸத்திக்குடலாகச்சொன்ன சமதமங்களுக்கு, "ఏతేన శ్రవణోపయుక్తమవధానం వివక్షితమ్-న తూపాసనోపయుక్తాత్యన్తేన్ద్రియజయాదిః" "ஏதேந ச்ரவணோபயுக்தமவதாநம் விவக்ஷிதம்-நதூபாஸநோபயுக்தாத்யந்தேந்த்ரியஜயாதி:" என்றிறே ச்ருதப்ரகாசிகாகாரர் வ்யாக்க்யாநம் பண்ணிற்று.—(ஆசார்யன் கைபுகுந்தவாறே திருமந்த்ரம்கைபுகுரு) கையாவது "తన్మన్త్రం బ్రాహ్మణాధీనమ్" "தந்மந்த்ரம் ப்ராஹ்மணாதீநம்" என்று- திருமந்த்ரம் ஆசார்யாதீநமாகையாலே, உபதேஷ்டாவானவன் கைபுகுந்தவாறே, ததுபதேசமுகத்தாலே ஸார்த்தமாக விவன் நெஞ்சிலே ப்ரதிஷ்டிதமாகை.—"బ్రహ్మవిద్బ్రాహ్మణో విదుః" "ப்ராஹ்மவித் ப்ராஹ்மணோவிது:" என்கையாலே - "బ్రాహ్మణాధీనమ్" "ப்ராஹ்மணாதீநம்" என்கிறவிடத்தில், ப்ராஹ்மணசப்தத்தால்ஆசார்யனைச்

ஆ.—னும்படி கைபுகுரும்; ஸ்வதந்த்ரனுன வீச்வரன் பரதந்த்ரனும்படிகை புகுந்தவாறே, "மற்றது" வான "வைகுந்தமாநகர்" "கையதுவே" என்று இதர வ்யாவ்ருத்த முக்தப்ராப்யபூமியான பரமபதம், "பொன்னுலகாளீரோ" என்று தானுகந்தார்க்குக் கொடுக்கும்படி கைபுகுரும்.

கூஅ. பரமபதப்ராப்திரூபப்ராப்யலாபம், இத்தை ப்ராபிக்கும் ஸ்வதந்த்ரோபாயமான நியந்தாவாலே யுண்டாம். இந்த ஸ்வதந்த்ரப்ராபகலாபம், நமச்சப்தசரணசப்தங்களாலே தத்ப்ரகாசகமான திருமந்த்ரத்தாலே யுண்டாம். இந்த ஸங்க்ரஹவிவரணரூபமந்த்ரலாபம், ஸ்வார்த்தோபதேசியான ஸதாசார்யனாலே யுண்டாம். (ப்ராபகலாபம்) என்று மந்த்ரார்த்தத்தை விசேஷிக்கையாலே, ஸ்வார்த்தோபதேஷ்ட்ருத்வப்ராதாந்யந்தோற்றுகிறது; "ಗರೀಯಾನರ್ಥದೋ ಗುರುः" "கரீயாநர்த்ததோ குரு:" என்றிறே ப்ரமாணம். இந்த ஸதாசார்யலாபம் தத்ப்ராவண்யஹேதுக சமதமரூபமான வாத்மகுணத்தாலே யுண்டாம். ஆக சமதமஹேதுசரமஸாத்யப்ராதாந்யமும், ப்ராப்யலாபஹேதுப்ரதாநப்ராதாந்யமும் உபயக்ரமத்தாலும் சொல்லப்பட்டது.

கூகூ. இந்த சமதமரூபையான விரக்தி, போகமோக்ஷாபிலாஷிகளெல்லார்க்கும் வேணுமென்கிறூர், (இதுதான்) இத்யாதியால். ஆப்தா

---

கையதுவே" என்கிறபடியே ப்ராப்யபூமி கைபுகுரும்.

கூஅ. ப்ராப்யலாபம் ப்ராபகத்தாலே; ப்ராபகலாபம் திருமந்த்ரத்தாலே; திருமந்த்ரலாபம் ஆசார்யனாலே; ஆசார்யலாபம் ஆத்மகுணத்தாலே.

---

ஜீ.—சொல்லுகிறது. (திருமந்த்ரம் கைபுகுந்தவாறே ஈச்வரன்கைபுகுரு) கையாவது- "మన్త్రాధీనం చ దైవతమ్" "மந்த்ராதீநம் ச தைவதம்" என்று- திருமந்த்ரமிட்டவழக்காயிருக்குமவனுகையாலே, அர்த்தஸஹிதமாக வது கைபுகுந்தவாறே, தத்ப்ரதிபாத்யனுனதான் இவனுக்கு அநிஷ்டநிவ்ருத்திபூர்வகேஷ்டப்ராப்திக்கு ப்ராபகனுகை. (ஈச்வரன் கைபுகுந்தவாறே, "வைகுந்தமாநகர் மற்றதுகையதுவே" என்கிறபடியே ப்ராப்யபூமிகைபுகுரு)கை யாவது-"దైవాధీనం జగత్సర్వమ్" "தைவாதீநம் ஜகத் ஸர்வம்" என்று உபயவிபூதியும் ஈச்வரனிட்டவழக்காகையாலே, அவன் ப்ராபகனுய் கைபுகுந்தவாறே, ப்ராப்யபூமியான ஸ்ரீவைகுண்டமிவனுக்கத்யந்தஸுலபமாகை.

கூஅ. இப்படி சமதமங்களுண்டாகவே உத்தரோத்தரமிவையெல்லாம் ஸித்திக்கும் ப்ரகாரத்தை ஆரோஹக்ரமத்தாலே யருளிச்செய்து, இதில் யாதொன்றுக்கு யாதொன்று ஹேதுவாகச்சொல்லிற்று அதுநியதமென்னுமிடத்தை அவரோஹக்ரமத்தாலே யருளிச்செய்கிறூர், (ப்ராப்யலாபம்) இத்யாதியாலே. இதுதனக்கு ப்ரயோஜநம் இந்தஹேது பரம்பரையில் ப்ரதமஹேது சமதமங்களாகையாலே, அவச்யமிவையிரண்டுமிவனுக்குண்டாகவேணுமென்கை. ஈச்வரனே ப்ராபகனுகையாலே, ப்ராப்யலாபமீச்வரனுலே என்கிற ஸ்த்தாநத்திலே (ப்ராபகத்தாலே) என்றருளிச்செய்தது.

கூகூ. இந்தசமதமாதிகள்தான் போகமோக்ஷகாமரெல்லார்க்கும்வேணுமென்கிறூர், (இதுதான்) என்றுதுடங்கி. ஐச்வர்யகாமர்க்கு சப்தாதிபோ

ஆ.—ங்கீகாரஹேதுவான இவ்விஷயவிரக்திதான்க்ஷேத்ரப்ரயோஜநார்த்திகளான ஐச்வர்யகாமர்க்கும் அநந்யப்ரயோஜநராயுமந்யஸாதநரான வுபாஸகர்க்கும், அநந்யப்ரயோஜநருமாயநந்யஸாதநருமான ப்ரபந்நர்க்கும் உபாஸ்த்யோக்யதாஜ்ஞாநவைசத்யாத்யநந்யபோக்யத்வஸித்த்யர்த்தமாக வவச்யம் வேணும். உபயர்க்குபாஸநாங்கமாக வேணுமே, ப்ரபந்நர்க்குபேயாநுகுணமாக வேணும்.

க௦௦. இம்மூவரிலுமதிகமாகவபேக்ஷிதம் ப்ரபந்நனுக்கென்கிறார், (மூவரிலும்) இத்யாதியால். இப்படி பிந்நாதிகாரிகளான மூவரிலும் வைத்துக்கொண்டு இவ்விஷயவிரக்தி மிகவும் வேண்டுவது, பகவதேகபோகனான ப்ரபந்நனுக்கு.

க௦க. (மிகவும்) என்றதை விசதீகரிக்கிறார் மேல், (மற்றை யிருவர்க்கும்) இத்யாதியால். பலஸாதநகலக்கமுடைய மற்றையிருவர்க்கும், சாஸ்த்ரநிஷித்தவிஷயபரதாரஸ்பர்சநிவ்ருத்திமாத்ரமே யமையும் ; உபய கல

---

கூகூ. இதுதான் ஐச்வர்யகாமர்க்கும் உபாஸர்க்கும் ப்ரபந்நர்க்கும் வேணும்.

க௦௦. மூவரிலும்வைத்துக்கொண்டு மிகவும்வேண்டுவது ப்ரபந்நனுக்கு.

க௦க. மற்றையிருவர்க்கும் நிஷித்தவிஷய நிவ்ருத்தியேய

---

ஜீ.-க்ஷேமே புருஷார்த்தமாகிலும், தத்ஸாதநாநுஷ்ட்டாநதசையில்சமதமாதிகள்வேணும் ; "ఇన్ద్రియాణి పురా జిత్వా జితం త్రిభువనం త్వయా" "இந்த்ரியாணி புரா ஜித்வா ஜிதம் த்ரிபுவநம் த்வயா" "படிமன்னுபல்கலன்பற்றோடறுத்தைம்புலன்வென்று" என்னக்கடவதிறே. "ஐம்புலன்வென்று" என்றது-மநோநியமநத்துக்குமுபலக்ஷணம்.— உபாஸகர்க்கு வித்யாங்கதயா சமாதிவேணும்; "తస్మాదేవంవిచ్ఛాన్తో దాన్త ఉపరత స్తితిక్షుస్సమాహితో భూత్వాత్మన్యేవాత్మానం పశ్యేత్" "தஸ்மாதேவம்விச்சாந்தோ தாந்த உபரதஸ்திதிக்ஷுஸ்ஸமாஹிதோ பூத்வாத்மந்யேவாத்மாநம் பச்யேத்" "புன்புலவழியடைத்தரக்கிலச்சினைசெய்துநன்புலவழிதிறந்து ஞானநற்சுடர்கொளீ"என்னக்கடவதிறே.ப்ரபந்நர்க்கதிகாரார்த்தமாக சமாதிவேணும்; "ఏకాన్తీ తు వినిశ్చిత్య దేవతా విషయాన్తరైః। భక్త్యుపాయం సమం కృష్ణప్రాప్తౌ కృష్ణైకసాధనః" "ஏகாந்தீ து விநிச்சித்ய தேவதா விஷயாந்தரைః।பக்த்யுபாயம் ஸமம் க்ருஷ்ணப்ராப்தௌ க்ருஷ்ணைகஸாதநః" "அடக்கரும்புலன்களைந்தடக்கி யாசையாமவைத் துடக்கறுத்துவந்துநின்தொழிற்கணின்ற வென்னை" என்னக்கடவதிறே.

க௦௦. இப்படி யதிகாரித்ரயத்துக்கும் அபேக்ஷிதமேயாகிலும், அதிகமாகவேண்டுவது ப்ரபந்நனுக்கென்கிறார், (மூவரிலும்) என்றுதுடங்கி. இவனுக்கிதிலாதிக்யம் சொல்லுகைக்காகவிறே அல்லாதவர்களை இவ்விடத்தில் ப்ரஸங்கித்ததும்.

க௦க. அவ்வாதிக்யந்தன்னை யருளிச்செய்கிறார் (மற்றையிருவர்க்கும்) என்றுதுடங்கி. அதாவது-சப்தாதிபோகபரனான வைச்வர்யகாமனுக்கும், ஸாதநாந்தரபரனான உபாஸகனுக்கும், சாஸ்த்ரநிஷித்தவிஷயமான பரதாராதியில் நிவ்ருத்திமாத்ரமமையும் ; ததுபயவ்யாவ்ருத்தனாயிருக்கிற ப்ரபந்நனுக்கு, சாஸ்த்ரவிஹிதவிஷயமான ஸ்வதாரத்தில் நிவ்ருத்தி அவர்களைப்பற்ற வேற்றமென்கை. அவர்களிருவரிலும், ஐச்வர்யகாமனுக்

ஆ.—க்கமற்றப்ரபந்நனுக்கு, ததேகபோகத்வதூஷணம்வாராதபடி, சாஸ்த்ரவிஹிதவிஷயஸ்வதாரஸ்பர்சநிவ்ருத்தி, அவர்களைப்பற்ற தன்னேற்றம். விசிஷ்டாகாரநிஷேதத்தோடு அநிஷேதத்தோடு வாசியற, நிஷ்க்ருஷ்டஸ்வரூபவிரோதித்வேந நிஷித்தத்தமமாகிறதிறே யிவ்வதிகாரிக்கு.

கOஉ. இந்த விஷயவிரக்தியின் ஹேதுபேதங்களையருளிச்செய்கிறார்மேல், (இதுதான்) இத்யாதியால். ஸ்வபரவிபாகமற இவ்விஷயவிரக்திதான், உள்ளபடி அவன் வடிவழகைக் காட்டக்கண்டார் சிலர்க்கு ''மற்றொன்றினைக் காணாவே'' என்னப்பண்ணும் ஸித்தோபாயமானவவன் வடிவழகாலே வருத்தமற வப்போதே பிறக்கும். ஒன்றாலும் மீளாதப்டி விஷயமக்நரானார் சிலர்க்கு, நம்மநுபவத்துக்கிட்டுப்பிறந்துமிவனுமிப்பாடுபடுவதேயென்னும் திருவருளாலே அயத்நேந பிறக்கும். தத்த்வஜ்ஞராயும் ப்ரக்ருதிவாஸனையநுவர்திப்பார் சிலர்க்கு பூர்வாசார்யர்கள் ஸ்வதாரவிரக்தராயிறே போந்தார்கள்; எம்பார் தனியிடங்கண்டிலேனென்றாரே; அவர்களாசாரத்தைப் பின்செல்லாவிடில், அவர்கள் பேற்றுக்கசலாய் அநர்த்தப்படோமோவென்னும்படி பண்ணும் சிஷ்டாசாரதர்சநச்ரவணங்களாலே க்ரமேண பிறக்கும்.

---

மையும்; ப்ரபந்நனுக்கு விஹிதவிஷயநிவ்ருத்தி தன்னேற்றம்.

கOஉ. இதுதான் சிலர்க்கழகாலே பிறக்கும்; சிலர்க்கருளாலே பிறக்கும்; சிலர்க்காசாரத்தாலே பிறக்கும்.

---

ஜீ.—கு, ஸ்வதாரத்தில் ஸாதநதசையில்தர்மபுத்த்யா ப்ரவ்ருத்தியும், பலதசையில்போக்யதாபுத்த்யா ப்ரவ்ருத்தியுமாயிருக்கும்; உபாஸகனுக்கு பலம் பகவதநுபவமாகையாலே, அவனைப்போலே பலதசையில் அந்வயமில்லையேயாகிலும், உபாஸநதசையில் தர்மபுத்த்யா ப்ரவ்ருத்தி வேணும்; ப்ரபந்நனுக்கு, தர்மபுத்த்யா ப்ரவர்திக்கையும் ஸ்வாதிகாரபஞ்ஜகமாகையாலே விஹிதவிஷயத்திலும் நிவ்ருத்திவேணுமென்றதாய்த்து.

கOஉ. தர்மபுத்த்யா ப்ரவ்ருத்திக்கு பரிஹாரம் பண்ணுவது போக்யதாபுத்த்யா ப்ரவ்ருத்திதான் தவிர்ந்தாலன்றோ, அநாதிகாலம் வாஸனைபண்ணிப்போந்தவிஷயங்களில் நிவ்ருத்திதான்பிறக்கும்படி யெங்ஙனேயென்கிற சங்கையிலே யருளிச்செய்கிறார், (இதுதான் சிலர்க்கு) என்றுதுடங்கி. (சிலர்க்கழகாலே பிறக்கும்) என்றது-ஸாக்ஷாத்க்ருதபகவத்தத்த்வரான பக்திபாரவச்யப்ரபந்நர்க்கு, ஸகலஜநமோஹநமான தத்விக்ரஹ ஸௌந்தர்யாநுபவத்தாலேபிறக்குமென்றபடி.—(சிலர்க்கருளாலே பிறக்கும்)என்றது- தத்த்வயாதாத்ம்யதர்சிகளான ஜ்ஞாநாதிக்யப்ரபந்நர்க்கு, ''நம்மையநுபவிக்க இட்டுப்பிறந்தவஸ்து இப்படி அந்யவிஷய ப்ரவணமாய் அநர்த்தப்படுவதே'' என்று, அந்யவிஷயஸங்கமறும்படி அவன்பண்ணும் பரமக்ருபையாலே பிறக்குமென்றபடி.—(சிலர்க்காசாரத்தாலே பிறக்கும்)என்றது-அளவிலிகளான வஜ்ஞாநப்ரபந்நர்க்கு, அவதாரங்களில் ''మర్యాదానాం చ లోకస్య కర్తా కారయితా చ సః'' ''மர்யாதாநாம் ச லோகஸ்ய கர்தா காரயிதா ச ஸঃ'' என்கிறபடியே அதிகாராநுகுணமாக வவனுசரித்தும் ஆசரிப்பித்தும் போந்தபடிகளையும், அளவுடையரான பூர்வாசார்யர்களாசரித்துப் போந்த படிகளையும், சாஸ்த்ரமுகத்தாலுமாசார்யோபதேசக்ரமத்தாலுமறிகையாலே, அவ்வாசாரங்களை யநுஸந்திக்க வநுஸந்திக்கப் பிறக்குமென்றபடி.

ஆ.—க0ங. இப்படிபிக்நஹேதுகவிரக்திப்ரகாரம்(பிறக்கும்படியென் என்னில்) என்று ப்ரச்நம்பண்ணி, உத்தரமருளிச்செய்கிறார், (அழகு) இத்யாதியால், வைரவுருக்கான வவன்வடிவழகு, விஷயாந்தரஸத்ப்பாவப்ரதிபத்த்யபாவமாகிற வஜ்ஞாநத்தை அவிச்சின்னமாக விளைக்கும்; பரதுஃகாஸஹிஷ்ணுத்வமானவவனருள் ஹேயத்வதர்சநமடியாக விஷயங்களில் அருசியைக்கொழுந்துவிட விளைக்கும் ; விசிஷ்டசிஷ்டாசாரஸ்மரணம் விஷயாஸக்தி அநர்த்தகரையென்று அச்சத்தை விஷயஸ்பர்சபீருவாம்படி நிரந்தரம் விளைக்கும். ஸௌந்தர்யாதிஹேதுகவிரக்திவிசேஷங்கள் விஷயதர்சநாபாவம் நிமித்தமாகவும், தர்சநத்தில் ஹேயதாப்ரகாசம் நிமித்தமாகவும், தத்ஸந்நிதியில் பிறக்கும் விகாரதர்சநபீதிநிமித்தமாகவுமுண்டாகின்றன.

க0ச. விரக்தியை வகையிட்டுச் சொல்லுகிறது ஒன்றிலே யொன்றுக் கூற்றமாகையாலே யென்கிறார்; அழகுக்கு விஷயாஜ்ஞாநத்தைப் பிறப்பிக்கையிலும், அருளுக்கதிலருசியைவிளைக்கையிலும், ஆசாரத்துக்கச்சத்தை விளைக்கையிலும் ஊற்றமென்கிற வ்வூற்றத்தைப்பற்ற விரக்திவ்யக்திபேதம்சொல்லுகிறது. அழகுமாசாரமுமருசியையும் அருளச்சத்தையும்விளைக்கவற்றாகிலும்,ஸ்வஸ்வாநுரூபமானவொவ்வொன்றிலேவூன்றிநிற்கும்; அழகு இதரவிஷயங்களைக் காரித்துமியும்படி அருசியை விளைக்குமதாகிலும் விஷ

க0ங. பிறக்கும் க்ரமமென் என்னில் ; அழகஜ்ஞாநத்தை விளைக்கும்; அருள் அருசியை விளைக்கும்; ஆசாரம் அச்சத்தைவிளைக்கும்.

க0ச. இவையுமூற்றத்தைப்பற்றச்சொல்லுகிறது.

ஜீ.—க0ங. இவ்வோஹேதுக்களால்பிறக்கும் க்ரமத்தை, தஜ்ஜிஜ்ஞாஸாப்ரச்நத்தை யநுவதித்துக்கொண்டருளிச்செய்கிறார், (பிறக்கும் க்ரமம்) என்று துடங்கி. (அழகஜ்ஞாநத்தைவிளைக்)கையாவது - சித்தாபஹாரியாகையாலே, விஷயாந்தரந்தன்னை யொன்றாகவறியாதபடியாக்குகை. (அருளருசியை விளைக்)கையாவது - விஷயாந்தரங்களைக்காணும்போது அருவருத்துக் காரித்துமிழ்ந்துபோம்படி பண்ணுகை. (ஆசாரமச்சத்தை விளைக்)கையாவது - ருசிசெல்லச்செய்தே, அவர்களாசரித்தபடி செய்யாதபோது நமக்கநர்த்தமே பலிக்குமென்று, விஷயஸ்பர்சத்திலிழிய நடுங்கும்படி பண்ணுகை. ஆகையால் இக்க்ரமத்திலே பிறக்குமென்று கருத்து.

க0ச. இந்தத்ரிவிதப்ரபந்நர்க்கும் ஸௌந்தர்யாதித்ரயத்திலோரொன்றே விரக்திஹேதுவாகச் சொல்லுகிறதுக்கு நிதாநத்தையருளிச்செய்கிறார், (இவையுமூற்றத்தைப்பற்றச்சொல்லுகிறது) என்று. அதாவது—(அஜ்ஞாநத்தாலே ப்ரபந்நர்) இத்யாதியால் - இவர்களுக்குச்சொன்ன ப்ரபத்திஹேதுக்களானவை ஓரோன்றினூற்றத்தைப்பற்றச்சொன்னப்போலே, (அழகாலே பிறக்கும்) என்றுதுடங்கிச் சொன்னவிரக்திஹேதுக்களான விவையும், ஓரோன்றினூற்றத்தைப்பற்றச்சொல்லுகிறதென்கை. இத்தால் - பக்திபாரவச்யப்ரபந்நர்க்கு, அருசிக்கடியான க்ருபையும் அச்சத்துக்கடியான வாசாராநுஸந்தாநமுமுண்டாயிருக்கச்செய்தே, பகவத்விக்ரஹவைலக்ஷண்யத்தை ஸாக்ஷாத்கரித்தநுபவிக்குமவர்களாகையாலே வடிவழகிலே யெப்போதும் நெஞ்சுபற்றிக்கிடக்கையால் விஷயாந்தரங்களை யறியாதபடிபண்ணுமவ்வழகே அவர்கள்பக்கலுறைத்திருக்கும்; ஜ்ஞாநாதிக்யப்ரபந்நர்க்கு, அஜ்ஞாநஹேதுவான விக்ரஹஸௌந்தர்

ஆ.—யாஜ்ஞாநத்தைவிளைக்கையே தனக்கு நிலைநின்றவேஷமாய், ஆசாரம் சிஷ்டர்கடை கணிசியாத ஹேயமென்று அருசியைவிளைக்கவற்றாகிலும் தத் கர்ஹிதஸ்பர்சப்ரீதியை விளைக்கையே தனக்கு நிலைநின்றவேஷமாய், அருள் விஷயஸ்பர்சம் ப்ராப்யவிரோதமென்னுமச்சத்தைவிளைக்கவற்றாகிலும் துஃக்கர்வஹவிஷயதோஷத்தை தர்சிப்பிக்கையே தனக்கு நிலைநின்றவேஷமாய், இப்படியொன்றிலேயொன்றுக்கூற்றமாயிருக்குமென்றபடி.

௧௦௫. ஈத்ருசவிரக்திகளின் முக்க்யாமுக்க்யசோதநம் பண்ணுகிறார், (அருசி) இத்யாதியால். அழகடியான வஜ்ஞாநவிரக்திஹேதுவை யொழிந்தால் அருளடியான வருசியன்றோ விரக்திப்ரதாநஹேதுவென்ன, அவ் விஷயங்களில் விரக்திஹேதுவான வருசிபிறக்கும்போதைக்கு, தோஷதர்சநம் பண்ணினாலல்லது அதுபிறக்கக்கூடாமையாலே தோஷதர்சநமவச்ய மபேக்ஷிதமாயிருக்கும்.

௧௦௬. இஹலோகவிஷயங்களிலே வரும் தோஷங்காணில் பரலோக விஷயங்களிலதுகாணவிரகற்று, அங்கே ருசிமண்டும்படியாய், வருத்தி பாஞ்சபௌதிகத்வாதிதோஷகல்பனைபண்ணி விரக்திபிறக்கவேண்டுமரிமையுண்டிறே; ஆகையால் விஷயங்களிலருசிபிறக்கை விரக்திக்கு ப்ரதாந ஹேதுவன்று.

---

௧௦௫. அருசிபிறக்கும்போதைக்கு தோஷதர்சநமபேக்ஷிதமாயிருக்கும்.

௧௦௬. அது ப்ரதாநஹேதுவன்று.

---

ஜீ.—யத்தை அர்சாவதாரத்திலே கண்டநுபவிக்கையும் பயஹேதுவான ப்ராக்தநசிஷ்டாசாராநுஸந்தாநமுமுண்டாயிருக்கச்செய்தே, அவன் தன்க்ருபையை முழுமடைசெய்தெடுத்த விஷயங்களாகையாலே அருசிக்கடியானக்ருபை அவர்கள்பக்கலுறைத்திருக்கும்; அஜ்ஞாநப்ரபந்நர்க்கு, அர்சாவதாரத்திலே காதாசித்கமாக விக்ரஹஸௌந்தர்யாநுபவமும் அருசிஹேதுவான க்ருபையும் ஒருமர்யாதை யுண்டாயிருக்கச்செய்தே, பூர்வர்களாசாரங்களையே பலகாலம் அநுஸந்தித்துக்கொண்டு போருகையாலே பயஹேதுவான அவ்வாசாரங்கள் அவர்கள்நெஞ்சிலே யூன்றியிருக்கும். இவ்வூற்றத்தைப்பற்ற ஓரொன்றே விரக்திஹேதுவாகச் சொல்லுகிறதென்றதாய்த்து.

௧௦௫. விஷயவைலக்ஷண்யாதிசயத்தாலே விஷயாந்தராஜ்ஞாநம் விளையவும் கூடும், ஆப்தரான சிஷ்டர்களுடைய வாசாராநுஸந்தாநத்தாலே அவிஹிதவிஹிதவிஷயஸ்பர்சத்திலச்சம் விளையவும் கூடும், அநாதிகாலமாசைப்பட்டு மேல்விழுந்துபோந்த விஷயங்களிலே அருசிபிறக்கை அகடிதமிறே; அப்படிப்பட்டவருசிதான் அவனருளாலே பிறக்கும் போதைக்கு அபேக்ஷிதாம்சத்தை யருளிச்செய்கிறார், (அருசி) என்று துடங்கி. (தோஷதர்சந) மாவது - போக்யதாபுத்த்யா பரிஷ்வங்கிக்கிற யோஷித்தேஹம் "மாம்ஸாஸ்ருக்பூயவிண்மூத்ரஸ்நாயுமஜ்ஜாஸ்த்தி" ஸமுதாயமாய் சர்மாவநத்தமாய் துர்கந்தியாயிருக்கும்படியையும், போகந்தான் அல்பமாய் அஸ்த்திரமாய் துஃக்கமிச்ரமாய் அநர்த்தாவஹமாயிருக்கும்படியையும், ப்ரத்யக்ஷாதிப்ரமாணங்களாலே தர்சிக்கை.

௧௦௬. ஆனால் அதுவோ பின்னையருசிஹேது வென்ன வருளிச்செய்கிறார், (அது) இத்யாதியால். (ப்ரதாநஹேதுவன்று) என்றது - அதுவுமொருஹேது, முக்க்யஹேதுவன்றென்றபடி.

ஆ.—௧௦௭. ஆகில்,ப்ரதாநஹேதுவாவதேதென்ன,விஷயாஸக்தி,ஸ்வரூபநாசகையாகையாலும்ப்ராப்திப்ரதிபந்தகையாகையாலும் சிஷ்டகர்ஹிதையாகையாலும் நமக்கப்ராப்தையென்றே யத்தைவிடுகையே விரக்திக்கு ப்ரதாநஹேதுவென்கிறார். தோஷஜ்ஞாநமின்றியுமப்ராப்தமென்றே விடுமிடங்களில் விரக்தியுண்டாயும், அதுண்டாயுமப்ராப்தமென்று விடாவிடங்களில் விரக்தியுண்டாகாமலும் போருகிறதிறே.

௧௦௮. இப்படிவிஷயாந்தரங்களை தோஷங்கண்டன்றியே யப்ராப்தமென்று விடுமாப்போலே, உபாதேயமான குணபூர்ணபகவத்விஷயத்திலிழிகிறதும் தத்கல்யாணகுணங்கண்டன்று; ததப்ருதக்ஸித்தமான ஸ்வரூபத்துக்கு ஸ்வதஃப்ராப்தமென்று.

௧௦௯. இதரவிஷயபகவத்விஷயங்கள் அப்ராப்திப்ராப்தியடியாக த்யாஜ்யோபாதேயங்களென்றுகொள்ளாதே, தோஷகுணங்களடியாக த்யாஜ்யோபாதேயங்களென்றுகொள்ளும்போது, ஆற்றாமையடியாக குணஹீநமென்று நினைத்த பக்திபாரவச்யதசையில், மடங்கி மேல்விழுகையாகிற பகவத்விஷயத்தில் ப்ரவ்ருத்தியும், ஸம்ஸாரத்தின் ஹேயத்வதுஃக்கமயத்வாதிதோஷங்களை யநுஸந்திக்கிற ஸாராஸாரவிவேகஜ்ஞாநதசையில், மடங்கி அஹங்காரதத்கார்யவிஷயாந்தரங்களிலழுந்துகையாகிற ஸம்ஸாரப்ரவ்ருத்தியும், ஸர்வதா கூடாதொழியவேணுமென்கிறார். பகவத்விஷயம் ஸ்வரூபப்ராப்தமாகையாலே வுபாதேயம்,

---

௧௦௭. அப்ராப்ததையே ப்ரதாநஹேது.

௧௦௮. பகவத்விஷயத்திலிழிகிறதும் குணங்கண்டன்று; ஸ்வரூபப்ராப்தமென்று.

௧௦௯. இப்படி கொள்ளாதபோது, குணஹீநமென்று நினைத்ததசையில் பகவத்விஷயப்ரவ்ருத்தியும், தோஷாநு

---

ஜீ.—௧௦௭. ஆனால்,ப்ரதாநஹேதுதானேதென்ன(அப்ராப்ததையே ப்ரதாநஹேது)என்கிறார். (அப்ராப்ததை)யாவது-பகவதேகபோகமான ஸ்வரூபத்துக்குச் சேராததாயிருக்கை. இத்தால் - அருளருசியை விளைக்குமிடத்தில் தோஷதர்சநாதிகளைப் பண்ணுவித்து விளைப்பிக்கையால், தோஷதர்சநமும் அப்ராப்திதர்சநமும் அருசிக்கு கௌணமுக்க்யஹேதுக்களாயிருக்குமென்றதாய்த்து.

௧௦௮. "மாற்பால் மனஞ்சுழிப்ப" இத்யாதிப்படியே ப்ராவண்யவிஷயமாகச்சொன்ன பகவத்விஷயத்தில் குணங்கண்டிழிகிறவோபாதி, இதுவும் தோஷங்கண்டேவிடுகிறதானாலோவென்ன,(பகவத்விஷயத்திலிழிகிறதும் குணங்கண்டன்று) என்கிறார். ஆகிலெத்தாலேயென்ன, (ஸ்வரூபப்ராப்தமென்று) என்கிறார். அதாவது - பகவத்விஷயத்தைப்பற்றுகிறது அத்தலையில் கல்யாணகுணங்களடியாகவன்று, இவ்வாத்மாவுக்கு வகுத்த விஷயமென்னுமத்தாலேயென்கை.

௧௦௯. கீழ் தாமருளிச்செய்தபடியே யர்த்தத்தை யங்கீகரியாதபோதைக்கு விரோதம் காட்டுகிறார், (இப்படி) என்றுதுடங்கி. (இப்படிகொள்ளாதபோது) என்றது - இதரவிஷயங்களிலருசிக்குஹேது அப்ராப்ததை, பகவத்விஷயத்தில் ருசிக்குஹேது ப்ராப்ததையென்று கொள்ளாதே, தோஷதர்சநத்தையும் குணதர்சநத்தையும் இவற்றுக்கு ஹேதுவாகக் கொள்ளும்போதென்றபடி. (குணஹீநமென்று நினைத்த தசையில் பகவத்விஷயப்ரவ்ருத்தி)யாவது - பிரிவாற்றாமை கரைபுரண்டு பெருவிடா

ஆ.—இதரவிஷயம் ஸ்வரூபத்துக்கப்ராப்தமாகையாலே த்யாஜ்யமென்றிப்படி கொள்ளும்போதாய்த்து, தத்தத்தசைகளில் தது‌பயப்ரவ்ருத்திநிவ்ருத்திகூடுவதென்றபடி.

கக௦. குணஹீநத்வாநுஸந்த்தாநதசையிலும் தத்விஷயப்ரவ்ருத்தி கூடுமென்கைக்கு ப்ரமாணம் காட்டுகிறார்மேல், (“கொடியவென்னெஞ்சம்”) இத்யாதியால். ப்ரணயரோஷத்தாலே “கடியன்” இத்யாதி குணஹீநத்வத்தை யநுஸந்த்திக்கிறதசையிலே “ஆகிலும் கொடிய வென்னெஞ்சமவனென்றே கிடக்கும்” என்று தத்விஷயஸக்திவிடாதென்றும்; “வேம்பின் புழு” என்றுதுடங்கி, விரஸவஸ்துவைத் தின்றுவளரும் ஜந்து ஸரஸவஸ்துவில் முகம்வையாதாப்போலே, சேஷியான நீ குணஹீநனானாலும் சேஷமான நான்உன்னையல்லது மற்றொரு குணவத்தான சேஷ்யந்தரத்தை யாசைப்படேனென்றும் இப்படியாழ்வார்கள்பாசுரங்களில் தத்குண

---

ஸந்த்தாநதசையில் ஸம்ஸாரத்தில் ப்ரவ்ருத்தியும் கூடாது.

கக௦. “கொடியவென்னெஞ்சமவனென்றே கிடக்கும்” “அடி-

---

ஜீ.—ய்ப்பட்டுத் துடித்து அலமராநிற்க,சடக்கெனவந்து முகங்காட்டாமையாலே குணஹீநமென்று சிந்தித்ததசையிலே, பின்னையும் “அவனையல்லதறியேன்” என்று அவன்பக்கலிலே யத்யபிநிவேசத்தைப்பண்ணுகை.— (தோஷாநுஸந்த்தாநதசையில் ஸம்ஸாரத்தில் ப்ரவ்ருத்தி)யாவது-மாதாபித்ராதிகளும் பார்யாபுத்ராதிகளும் ஜ்ஞாதிகளும் பந்துக்களும் க்ருஹக்ஷேத்ராதிகளுமாய் சப்தாதிபோகங்களை அநுபவித்திருக்கையாகிற ஸம்ஸாரத்தின் து:க்கபஹுலத்வாதிதோஷத்தை ப்ரத்யக்ஷாதிகளாலே யறிந்தநுஸந்த்தியாநிற்கச் செய்தேயும் அதிலே அபிநிவேசம் நடந்துசெல்லுகை. இவையிரண்டும் கூடாதென்றபடி. அன்றிக்கே, (தோஷாநுஸந்த்தாநதசையில் ஸம்ஸாரத்தில் ப்ரவ்ருத்தி)யாவது - தத்த்வவித்துக்களான மஹர்ஷிகள்துடக்கமானார், ஸாராஸாரவிவேகவத்தயா விஷயதோஷாநுஸந்த்தாநமுண்டாயிருக்கச்செய்தே, சாஸ்த்ரத்தை விஹிததயா ப்ராப்தமென்கிறபுத்தியாலே பண்ணுகிற ப்ரஜோத்பாதநாதிரூப ஸம்ஸாரத்தில் ப்ரவ்ருத்தியாகவுமாம். இப்படிகொள்ளாதபோதிவைகூடாதென்று விரோதங் காட்டுகையாலே இப்படி கொள்ளவேணுமென்னுமிடம் ஸ்த்தாபிக்கப்பட்டது.

கக௦. குணஹீநமென்று நினைத்த தசையில் பகவத்விஷயப்ரவ்ருத்தியெங்கேகண்டதென்ன வருளிச்செய்கிறார், (“கொடியவென்னெஞ்சம்”)என்றுதுடங்கி. அதாவது—“கடியன்” என்றுதுடங்கி, “அறிவருமேனி மாயத்தன்”என்னுமளவும்-ஸ்வகார்யபரன், பிறர்நோவறியாதவன், ஒருவர்க்குமெட்டாதவன்,வஞ்சகன், துர்ஜ்ஞேயஸ்வபாவன் என்று அவன்குணஹாநியைச் சொல்லி, இப்படியிருந்தானாகிலும், அதிலோகக்ரூரமான வென்னெஞ்சு அவனையல்லதறியாதே யிருக்குமென்றும்; வேம்புக்கிட்டுப்பிறந்த புழு அந்த வேம்பையே புஜிக்குமதொழிய கரும்பைக்கண்டாலும் விரும்பாது, அப்படியே, “கடல்மல்லைக் கிடந்தகரும்பு” என்னும்படி நிரதிசயபோக்யனான நீதானே வேம்புபோலே விரஸனானவன்றும், த்வதநந்யார்ஹசேஷபூதனானநான், எனக்குவகுத்தசேஷியான உன் திருவடிகளையொழியவாசைப் படே

ஆ.—ஹீநத்வஸ்மரணதசையிலும் தத்ப்ரவ்ருத்தியுண்டென்றுநின்றதிறே.

ககக. ஆகில், "𑌗𑍁𑌣𑍈𑌰𑍍𑌦𑌾𑌸𑍍𑌯𑌮𑍁𑌪𑌾𑌗𑌤𑌃" "குணைர்தாஸ்யமுபாகத:" என்றித்யாதிகளிலே பகவத்குணங்களுக்குத்தோற்று அடிமைபுக்கிருக்கையுமுண்டேயென்ன, சேஷியின் குணவசீக்ருதனாய் வரும் தாஸ்யத்தைப்பற்ற, ததப்ருதக்ஸித்த சேஷத்வரூபஸ்வரூபப்ரயுக்தமான ஸ்வாபாவிகதாஸ்யமொன்றுமேயிறே ஸத்தாப்ரயுக்தத்வேந ப்ரதாநமாய்த்ததென்கிறார்.

ககஉ. ஏதத்ப்ராதாந்யப்ரமாணோபாதாநம் பண்ணுகிறார், (அநஸூயை) இத்யாதியால். "ஸுகுமாரரையாயிருக்கப் பின் துடர்ந்து நீர் வந்தது பெருமாள்வடிவழகிலே யீடுபடுகையாலிறே" யென்ற வநஸூயைக்கு, நித்யாநபாயிநியான பிராட்டி, "தர்மியைவிட்டு தர்மம் நில்லாதாப்போலே, பிரிந்திருக்க யோக்யதையற்ற ஸ்வரூபத்தை யுடையேனாகையாலே பின்சென்று வந்தேனத்தனை, பெருமாள் விரூபராதல் என்னகவாயும் கண்ணுக்கிலக்காதல் செய்யிலிறே என் ஸ்வரூபம் உனக்குள்ளபடி யறியலாவது;

---

யேன் நான்பின்னுமுன்சேவடியன்றி நயவேன்" என்னாநின்றார்களிறே.

ககக. குணக்ருததாஸ்யத்திலுங் காட்டில் ஸ்வரூபப்ரயுக்தமான தாஸ்யமிறே ப்ரதாநம்.

ககஉ. அநஸூயைக்குப் பிராட்டி யருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது.

---

ஜீ.—னென்றும்; "மயர்வறமதிநலமருளப்" பெற்றவர்கள் அருளிச்செய்யாநின்றார்களிறேயென்கை.

ககக. "𑌗𑍁𑌣𑍈𑌰𑍍𑌦𑌾𑌸𑍍𑌯𑌮𑍁𑌪𑌾𑌗𑌤𑌃" "குணைர்தாஸ்யமுபாகத:" என்றாருமில்லையோவென்ன வருளிச்செய்கிறார், (குணக்ருததாஸ்யத்திலும்)என்று துடங்கி. (குணக்ருததாஸ்ய)மாவது -அவன் குணங்களுக்குத்தோற்றுஅடிமையாயிருக்கை. (ஸ்வரூபப்ரயுக்தமானதாஸ்ய)மாவது - சேஷத்வைகநிரூபணீயமான தன்ஸ்வரூபத்தைப் பார்த்து அடிமையாயிருக்கை. ஸ்வரூபமிப்படியிருந்தாலும், குணாதிகவிஷயமாகையாலே குணக்ருததாஸ்யமு மிவ்விஷயத்திலே யநுவர்தியாநிற்கும்; ஆகையிறே, சேஷத்வைகநிரூபகரான இளையபெருமாள் தாமப்படியருளிச்செய்ததும். ஆனாலும், குணக்ருததாஸ்யமானது ஔபாதிகமாகையாலே யப்ரதாநமாய், மற்றையது நிருபாதிகமாகையாலே ப்ரதாநமாயிருக்கும்; அத்தைப்பற்றவிறே தத்ப்ராதாந்யப்ரஸித்திதோற்றவருளிச்செய்தது.

ககஉ. இவ்வர்த்தத்துக்கு ஸம்வாதமாக பிராட்டிவார்த்தையை ஸ்மரிப்பிக்கிறார் மேல், (அநஸூயைக்கு) என்றுதுடங்கி. அதாவது - அத்ரிபகவானாச்ரமத்திலே பெருமாளெழுந்தருளி மஹர்ஷியையமநுவர்தித்திருந்தவநந்தரம், தத்பத்நியான வநஸூயையைப் பிராட்டி சென்றநுவர்தித்திருக்கிறவளவிலே, அவள், பிராட்டியைப்பார்த்து, "பந்துஜநத்தையும் அபிமாநத்தையும் ஐச்வர்யத்தையும் விட்டு பெருமாள்பின்னேகாட்டிலேபோந்தவிது தைவயோகத்தாலே யுமக்கு நன்றாகக்கூடிற்று, நகரஸ்த்தனாகிலுமாம் வநஸ்த்தனாகிலுமாம் நல்லவனாகிலுமாம், தீயவனாகிலுமாம், ஸ்த்ரீகளுக்கு தைவம் பர்தாவேகிடீர், நீரிப்படியெப்போதும் பெருமாள்விஷயமாக வநுகூலித்துப் போரும்"என்ன; பிராட்டி லஜ்ஜித்துக் கவிழ்தலையிட்டிருந்து, "எனக்குப்பெருமாள்பக்கல் பாவபந்தம் ஸ்வத: உண்டாயிருக்கச்செய்தே, அவர்தாம் குணாதிகராயிருக்கையாலே, என்னுடைய பாவ

ஆ.—வெறும் வடிவழகுகண்டு பின் துடர்ந்தேனல்லகாண்" என்றருளிச்செய்த இதிஹாஸச்ரேஷ்ட்டப்ரஸித்தவார்த்தையை ப்ரமாணமாக ஸ்மரிப்பதென்கிறார்.

ககங. குணபூர்ணபகவத்விஷயத்தில் அந்வயரூபப்ரவ்ருத்தி குணங்கண்டல்லது கூடுமோவென்று சங்கித்து, குணங்கண்டன்றியே ஸ்வரூபநிபந்தநமாக பகவத்விஷயத்திலிழிகிறவதுக்கடி "அன்புருகி நிற்குமது" என்கிற ஸத்தாநிபந்தநநித்யப்ராவண்யம். ததாவிதப்ராவண்யந்தனக்கடி ஸ்நேஹோத்பாதகதத்ஸம்பந்தம். ப்ராவண்யப்ரேரகமான வந்த சேஷசேஷிபாவஸம்பந்தந்தான், ப்ராக்ருதஸம்பந்தம்போலாகந்துகமாய்க்கொண்டுபாதிப்ரயுக்தமாமதன்று; விசேஷ்யசேஷிக்கு விசேஷணரூபசேஷமாய்க்கொண்டுதித்த தத்ஸத்தாப்ரயுக்தம்.

ககச. ஏவம்விதமான ஸத்தை ஸத்தாப்ரயுக்தஸம்பந்தநிபந்தந ப்ராவண்யத்தின் கார்யமான தத்விக்ரஹாநுபவமில்லாதபோது குலையும்படிவரும். அந்த ப்ராவண்யாதீநமான ஸத்தை தத்கார்யாநுபவாலாபத்தாலே குலையாமைக்காக, அநுபவஹேதுவாக வருமநந்யோபாயத்வாதி பஞ்ஜகங்களான காமபஜநாதிஸ்வயத்நப்ரவ்ருத்திகளானவையெல்லாம், பாரதந்த்ர்யாநுஸந்தாநத்தால் அவர்ஜநீயங்களுமாய், சேஷிக்கதிசயகரங்களுமாயிருக்கையாலே, ஸ்வரூபப்ராப்தங்களுமாயிருக்கும்.

---

ககங. பகவத்விஷயப்ரவ்ருத்தி பின்னைச்சேருமோவென்னில், அதுக்கடி ப்ராவண்யம்; அதுக்கடி ஸம்பந்தம்; அதுதானௌபாதிகமன்று; ஸத்தாப்ரயுக்தம்.

ககச. அந்தஸத்தை ப்ராவண்யகார்யமான வநுபவமில்லாதபோது குலையும்; அதுகுலையாமைக்காக வருமவையெல்

---

ஜீ.—பந்தத்தை குணநிபந்தநமேயென்றிருப்பர்கள் நாட்டார், அவ்வாச்ரயத்தை குணங்களோடு வ்யதிரேகித்துக் காட்டவொண்ணாமையாலே, நானவர்பக்கலிருக்குமிருப்பை யறிவிக்கப்பெறுகிறிலேன், அவர் குணஹீநருமாய் விரூபருமானவன்றும் நானவர்பக்கலிப்படிகாணுமிருப்பது"என்றருளிச்செய்தவார்த்தை.

ககங. இப்படி ஸ்வரூபப்ரயுக்தமான தாஸ்யமே ப்ரதாநமாகில்,சேஷிசெய்தபடிகண்டிருக்குமதொழிய, அநந்யோபாயத்வாதிகள் குலையும்படியவ்விஷயத்தைக்குறித்துப் பண்ணுகிற ஸ்வப்ரவ்ருத்திசேருமோவென்கிற சங்கையை யநுவதிக்கிறார், (பகவத்விஷயப்ரவ்ருத்தி) இத்யாதியால். அத்தைப்பரிஹரிக்கிறார், (அதுக்கடி ப்ராவண்யம்) என்றுதுடங்கி. (ப்ராவண்ய) மாவது - அதிமாத்ரஸ்நேஹம். அந்தப்ராவண்யத்துக்கடி விஷயவைலக்ஷண்யமன்றோவென்ன, (அதுக்கடி ஸம்பந்தம்) என்கிறார். (ஸம்பந்த)மாவது-சேஷசேஷிபாவம். அதுதான் குணக்ருதமாயும் வாராதோவென்ன, (அதுதானௌபாதிகமன்று; ஸத்தாப்ரயுக்தம்) என்கிறார். (ஸத்தாப்ரயுக்தம்) என்றது - இவ்வாத்மாவினுடைய ஸத்தையே பிடித்துள்ளதொன்றென்கை.

ககச. இத்தால் கீழ்ப்பண்ணின சங்கைக்குப்பரிஹாரமானதேதென்னவருளிச்செய்கிறார் மேல் வாக்யத்ரயத்தாலே.(அந்தஸத்தை ப்ராவண்யகார்யமான வநுபவமில்லாதபோது குலையும்) என்றது - அப்படிப்பட்ட ஸத்தைதான்,ஸ்வப்ரயுக்தஸம்பந்தமடியாய்வருகிற ப்ராவண்யகார்யமான பகவதநுபவமில்லாதபோது க்ஷணகாலமும் நில்லாதென்றபடி.—(அதுகுலையாமை

ஆ.—இப்படி ஸத்தாப்ரயுக்தமான ப்ராவண்யமிவனுக்குண்டாகையாலே, ஸம்பந்தஜ்ஞாநம் பிறக்கவே குணஜ்ஞாநமில்லாவிடினும், நிருபாதிக பந்துவானபகவத்விஷயத்தி லாச்ரயணரூப ப்ரவ்ருத்தி, ஸ்வரூபப்ராப்த மாகையாலே சேருமென்று பரிஹரிக்கிறார். "ஆக, இப்ப்ரகரணத்தால் ப்ரபத்தியின் அநியம நியமாதிகாரி விசேஷணத்வ நிரூபணமும், அபேக்ஷிதாநுமதிஸித்த்தோபாய ததகிகாராநுகுணஸ்வரூபநிரூபணமும்,உபயாநுஷ்ட்டாநசோதநவிஷயநிவ்ருத்தி பகவத்ப்ரவ்ருத்திப்ரகாரநிரூபணமும் சொல்லப்பட்டது. (இதிரண்டையும் பொருத)ளவாக, ப்ரதாநப்ரமேயமும், மேலடங்க ப்ராஸங்கிகவிசேஷப்ரகரணமுமாயிருக்கும்.

ஜநந்யாசார்யர் திருவடிகளே சரணம்.

---

லாமவர்ஜநீயங்களுமாய் ப்ராப்தங்களுமாயிருக்கும்; ஆகையாலே, பகவத்விஷயப்ரவ்ருத்தி சேரும்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்.

---

ஜீ.—க்காக வருமவையெல்லாம் அவர்ஜநீயங்களுமாய் ப்ராப்தங்களுமாயிருக்கும்) என்றது-அந்தஸத்தையழியாமைக்குறுப்பாக வருகிற மடலெடுக்கை முதலான ஸகலப்ரவ்ருத்திகளும், பகவதநுபவமொழியத் தரிப்பில்லாமையாலே தவிருவோமென்றாலும் தவிரப்போகாதவையுமாய், எல்லாம் சேஷிக்கதிசயகரங்களாகையாலே ஸ்வரூபப்ராப்தங்களுமாயிருக்குமென்றபடி.—(ஆகையாலே பகவத்விஷயப்ரவ்ருத்தி சேரும்) என்று-உக்தத்தை ஹேதுவாக்கிக்கொண்டு, ப்ரக்ருதசங்கையைப் பரிஹரித்துத் தலைக்கட்டுகிறார்.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

ப்ரதமப்ரகரணம் ஸம்பூர்ணம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம꞉.

---

# த்விதீயப்ரகரணம்.

ஆ.—ககரு. உக்தோபாயபூர்வபாவியாய்க்கொண்டு, த்யாகவிஷயமான வுப்பாயாந்தரங்களின் த்யாகப்ரகாரோபபாதநமுகேந தோஷவிசேஷங்களை யருளிச்செய்கிறார், (ப்ராபகாந்தரம்) துடங்கி (ஸ்வரூப) மளவாக. அப்ராப்தமென்றுவிடுகை விஷயாந்தரத்துக்கேயல்ல, ஸாதநாந்தரத்துக்குமொக்குமென்கிறார், (ப்ராபகாந்தரம்) இத்யாதியால். ச்லோகத்தில் "தர்ம" சப்தவாச்யங்களாய் மோக்ஷஸாதநங்களான கர்மஜ்ஞாநாதிப்ராபகாந்தரங்களுடைய ஸோபஸர்கல்யபந்தஸித்தஸவாஸநாத்யாகத்துக்கும் ப்ரதாநஹேது, துர்ஜ்ஞேயத்வதுரநுஷ்ட்டேயத்வரூபங்களானவஜ்ஞாநாசக்திகளன்று; பரதந்த்ரஸ்வரூபத்துக்கு ஸ்வதந்த்ரக்ருத்யங்களானவை விரோதிகளென்று விடுமதே ஸ்வரூபஜ்ஞனுக்கு ப்ரதாநஹேது. இவற்றையஜ்ஞாநாசக்திகளடியாக த்யஜிக்கில், ஜ்ஞாநசக்திகளுண்டாமளவில் மீண்டும் பரிக்ரஹிக்கவேண்டி வருகையால் அது ஸவாஸநாத்யாகமாகமாட்டாது; ஸ்வரூபவிரோதிகளென்று த்யஜிக்கில் மீண்டும் பரிக்ரஹிக்கக் கூடாமையால், அது ஸவாஸநாத்யாகமாகவற்றென்றபடி.

ககசு. இப்படி யிவற்றை விரோதிகளென்னலாமோ, அவையும் மோக்ஷோபாயங்களன்றோவென்ன, உள்ளபடி யுணர்ந்தவர்களுக்கபாயங்களத்தனை யென்கிறார், (ப்ராபகாந்தரமஜ்ஞர்க்கு) இத்யாதியால். ஸ்வரூபவிரோதியான ப்ராபகாந்தரத்தை அஜ்ஞாநாசக்திகளடியாகவிடுமஜ்ஞர்க்கா

---

ககரு. ப்ராபகாந்தரபரித்யாகத்துக்கும் அஜ்ஞாநாசக்திகளன்று, ஸ்வரூபவிரோதமே ப்ரதாநஹேது.

ககசு. ப்ராபகாந்தரமஜ்ஞர்க்குபாயம்.

---

ஜீ.—ககரு. இதரவிஷய பரித்யாகத்துக்கும்பகவத்விஷயபரிக்ரஹத்துக்கும் ப்ரதாநஹேதுக்களின்னதென்கிறார்கீழ்; இந்த ப்ரஸங்கத்திலே, இதரோபாயபரித்யாகத்துக்கு ப்ரதாநஹேது இன்னதென்கிறார்மேல், (ப்ராபகாந்தரபரித்யாகத்துக்கும்)என்றுதுடங்கி. (ப்ராபகாந்தரங்க)ளாவன- ப்ரபத்த்யுபாயத்தையொழிந்தவுபாயங்கள். (அஜ்ஞாநாசக்திகளன்று)என்றது - அவற்றையறிகைக்கு மநுஷ்ட்டிக்கைக்குமீடான ஜ்ஞாநசக்திகளில்லாமைதத்த்யாகத்துக்கு ப்ரதாநஹேதுவன்றென்றபடி. (ஸ்வரூப விரோதமேப்ரதாநஹேது)என்றது-பகவதத்யந்தபாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபத்துக்குச்சேராதென்னுமதுவே முக்க்யஹேதுவென்றபடி.— இத்தால்-(அஜ்ஞாநத்தாலேப்ரபந்நர்) என்கிறவிடத்திற்சொன்ன அஜ்ஞாநாசக்திகள் முக்க்யஹேதுவன்றென்னுமிடம் சொல்லுகிறது. அஜ்ஞாநாசக்திகளடியாக விடில் ஜ்ஞாநசக்திகளுண்டாகில் பரிக்ராஹ்யமாமிறே, ஸ்வரூபவிரோதமென்று விட்டாலிறே மறுவலிடாதொழிவது.

ககசு. இப்படி ப்ராபகாந்தரத்தை விரோதியென்று தள்ளலாமோ, அதுவும் மோக்ஷோபாயமாயன்றோ போருகிறது, அதுபின்னையார்க்குபாயமென்ன வருளிச்செய்கிறார், (ப்ராபகாந்தரம்) என்றுதுடங்கி. (அஜ்ஞர்க்குபாயம்) என்றது-ஸ்வரக்ஷணே ஸ்வயத்நகந்த்தாஸஹமான ஸ்வரூபத்தை

ஆ.—யிற்று, இது துஷ்கரோபாயம் ப்ரபத்தி ஸுகரோபாயமென்று ப்ரபத்தியோடொக்க அதுவுமுபாயமாகத்தோற்றுவது.

ககள. இது பரதந்த்ரஸ்வரூபவிரோதியென்றுணர்ந்துவிடும் ஜ்ஞாநிகளுக்கு, ஸ்வயத்நரூபமாய்க்கொண்டு ஸ்வரூபவிரோதியுமாய், ஸ்வதந்த்ர ஸ்வாமியுடைய வுபேக்ஷாஹேதுவாய்க்கொண்டு ப்ராப்யவிரோதியுமாயிருக்கையாலே, அபாயமாகவே தோற்றும்.

ககஅ. இவை ஜ்ஞாநிகளுக்கபாயமாவானென் என்ன, அபாயமாய்த் தோற்றுகைக்கடி, ஸ்வதந்த்ரக்ருத்யமாய்க்கொண்டு பரதந்த்ரஸ்வரூபநாசகமாகையாலே யென்கிறார்.

ககக. ததபாயத்வப்ரகாசகப்ரமாணங்காட்டுகிறார், ("நெறிகாட்டி") இத்யாதியால். ஸாதநாந்தரங்களைக்காட்டி யகற்றப் பார்த்தாயோ வென்று, இவை யவனை யகற்றுமபாயங்களாகவே த்ராவிடவேதஸூக்தி சொல்லாநின்றதிறே.

கஉ0. இவற்றினபாயத்வத்தைஸ்வபாவத்வயத்தாலே ஸ்த்திரீகரிக்கிறார் மேல், "శరీరే చ గతౌ చాపి వర్తతే మే మహద్భయమ్" "சரீரே ச கதௌ சாபி வர்ததே மே மஹத்பயம்" என்று ஸாதநாந்தராநுஷ்ட்டாநயோக்யமான சரீரத்திலே இருக்கவே கான்றத்தைக் கவ்விவிக்குமாப்போலே, த்யக்தமான விவற்றிலே மீண்டும்மூட்டுகிறதோவென்று, ஆச்ரயத்தளவல்லாத பயம் கனக்க வநுவர்தியாநின்றதென்கையாலே, இவை ஸ்வரூபஹாநிநிமித்தபயஜநகங்களுமாய்; "మా శుచః" "மா சுச:" என்று ஸாதநாந்தரதர்

ககள. ஜ்ஞாநிகளுக்கபாயம்.

ககஅ. அபாயமாய்த்தது ஸ்வரூபநாசகமாகையாலே.

ககக. "நெறிகாட்டி நீக்குதியோ" என்னுநின்றதிறே.

கஉ0. "వర్తతే మే మహద్భయమ్" "வர்ததே மே மஹத்பயம்"

ஜீ.—யுள்ளபடி தர்சிப்பிக்கைக்கீடான ஜ்ஞாநமில்லாதவர்களுக்குபாயமாயிருக்குமென்றபடி.

ககள. ஆனால், ஜ்ஞாநிகளுக்கிதெங்ஙனேயென்ன, (ஜ்ஞாநிகளுக் கபாயம்) என்கிறார். அதாவது - ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞாநமுடையவர்களுக்கு அபாயமாயிருக்கு மென்கை.

ககஅ. இவர்களுக்கு அபாயமாவானென் என்ன, (அபாயமாய்த்தது ஸ்வரூபநாசகமாகையாலே) என்கிறார். (ஸ்வரூப)மாவது - அத்யந்தபாரதந்த்ர்யம்; இதுக்கு ஸ்வயத்நரூபமானவதுநாசகமிறே.

ககக. ததபாயத்வத்தை ஜ்ஞாநிநாமக்ரேஸரரான வாழ்வார்பாசுரத்தாலே தர்சிப்பிக்கிறார், ("நெறிகாட்டி") என்றுதுடங்கி. அதாவது- உன்னையொழியவேறொருபாயத்தைக்காட்டி யுன்பக்கலினின்று மகற்றப் பார்க்கிறாயோ வென்கையாலே, ப்ராபகாந்தராபாயத்வம் ஸித்தமிறே யென்கை. நீக்குகையாவது - பரதந்த்ரமான வஸ்துவை ஸ்வதந்த்ரக்ருத்யமான வுபாயாநுஷ்ட்டாநத்திலே மூட்டித்தனக்கசலாக்குகையிறே.

கஉ0. இதினுடைய ஸ்வரூபநாசகத்வப்ரயுக்தமான தூஷணவிசேஷங்களை யருளிச்செய்கிறார், ("వర్తతే" "வர்ததே") இத்யாதி வாக்யத்வயத்தாலே. அதாவது-"కాలేష్వపి చ సర్వేషు దిక్షు సర్వాసు చాచ్యుత। శరీరే చ గతౌ చాపి వర్తతే మే మహద్భయమ్" "காலேஷ்வபி ச ஸர்வேஷு திக்ஷு ஸர்வாஸு சாச்யுத। சரீரே ச கதௌ சாபி வர்ததே மே மஹத்பயம்" என்றுபாயாந்தராநுஷ்ட்டாநத்துக்கு யோக்யமான காலதேசதேஹவிஷயமாகவும், உபா

ஆ.—சநத்தாலே கலங்கி சோகாவிஷ்டனான அர்ஜுநனை, பழுதையைப் பாம்பென்று சோகிக்கவேண்டாவென்கையாலே, ஸ்வாநுரூபமல்லாமையைப்பற்ற சோகஜநகங்களுமாயிருக்கும். இப்படி பயசோகஜநகங்களானவபாயங்களாகையாலே, ஸ்வரூபவிரோதித்வமே யிவற்றின் நிரவசேஷபரித்யாகஹேதுவென்னுமிடம் ஸுவ்யக்தம்.

கஉக. இதின் ஸ்வரூபவிரோதித்வத்தையிசைவிக்கிறார் மேல், (இப்படி) இத்யாதியால். ஸ்வரூபவிரோதித்வேந இவை த்யாஜ்யங்களென்று கொள்ளாதபோது, உபாயமாகத்தோற்றுகிற விந்த ஸாதநாந்தரங்களை ப்ரவர்திப்பிக்குமிடத்து, கூச்மாண்டகணஹோமாதிப்ராயச்சித்த கர்மவிதியோக்யதை ஸம்பாதிக்கவேண்டாமையால் கூடாது; ஸ்வரூபப்ராப்தங்களேயாகில் ப்ராயச்சித்தம்பண்ணி யிவற்றிலிழியவேண்டுவதில்லை; ஸ்வரூபப்ராப்தத்திலிழிகிறவனுக்கு அது காணுமையால்.

கஉஉ. இவை புத்திவிசேஷபரிசுத்தங்களாகிலும், அஹங்காரகர்ப்பத்வேந த்யாஜ்யங்களேயத்தனை யென்னுமிடம் சிஷ்டோக்திஸித்த

---

என்கையாலே பயஜநகம்; "மா ஶுச:" "மா சுச:" என்கையாலே சோகஜநகம்.

கஉக. இப்படிகொள்ளாதபோது ஏதத்ப்ரவ்ருத்தியில் ப்ராயச்சித்தவிதி கூடாது.

கஉஉ. திருக்குருகைப்பிரான்பிள்ளான் பணிக்கும்படி-மதிரா

---

ஜீ.—யாந்தரங்கள் தன்விஷயமாகவும், எனக்கு மஹாபயம்வர்தியாநின்றதென்கையாலும்; உபாயாந்தரச்ரவணாநந்தரம்அர்ஜுநனுக்கு சோகம்பிறக்க, ஸ்வரூபாநுரூபோபாயத்தை யுபதேசித்து, "மா ஶுச:" "மா சுச:" என்று சோகாபநோதநம்பண்ணி யருளுகையாலும்; ஸ்வரூபவிரோதியான ப்ராபகாந்தரம் ஜ்ஞாநிகளுக்கு பயஜநகமுமாய் சோகஜநகமுமாயிருக்குமென்கை.

கஉக. கீழ்ச்சொன்னபடியே யர்த்தத்தை யங்கீகரியாதவளவில் விரோதங்காட்டுகிறார், (இப்படிகொள்ளாதபோது) என்றுதுடங்கி. (இப்படி கொள்ளாதபோது) என்றது - ஸ்வரூபநாசகமென்று கொள்ளாதபோதென்றபடி; (ஏதத்ப்ரவ்ருத்தியில் ப்ராயச்சித்தவிதி கூடாது) என்றது -"సకృదేవ హి శాస్త్రార్థః కృతోఽయం తారయేన్నరమ్ । ఉపాయాపాయసంయోగే నిష్ఠయా హీయతేఽనయా ॥ అపాయసంప్లవే సద్యః ప్రాయశ్చిత్తం సమాచరేత్ । ప్రాయశ్చిత్తిరియం సాత్ర యత్పునశ్శరణం వ్రజేత్ ॥ ఉపాయానాముపాయత్వస్వీకారేఽప్యేతదేవ హి" "ஸக்ருதேவ ஹி சாஸ்த்ரார்த்த: க்ருதோ஽யம் தாரயேந்நரம் । உபாயாபாயஸம்யோகே நிஷ்டயா ஹீயதே஽நயா ॥ அபாயஸம்ப்லவே ஸத்ய: ப்ராயச்சித்தம் ஸமாசரேத் । ப்ராயச்சித்திரியம் ஸாத்ர யத்புநச்சரணம்வ்ரஜேத் ॥ உபாயாநாமுபாயத்வஸ்வீகாரே஽ப்யேததேவ ஹி" என்று ப்ரபந்நனானவனுக்கு ப்ராமாதிகமாக உபாயாந்தரப்ரவ்ருத்திவந்தகாலத்தில், அபாயப்ரவ்ருத்தியிற்போலே புந:ப்ரபதநரூபப்ராயச்சித்தத்தை விதிக்கக்கூடாதென்கை. புந:ப்ரபதநமாவது - பூர்வப்ரபதநஸ்மரணம்; புந:ப்ரயோகமன்று.

கஉஉ. இப்படி ஸ்வரூபநாசகமான வுபாயாந்தரத்தினுடைய அத்யந்தநிஷித்தத்வத்தை அபியுக்தவசநத்தாலே தர்சிப்பிக்கிறார், (திருக்குருகைப்பிரான்பிள்ளான்) என்றுதுடங்கி. திருக்குருகைப்பிரான்பிள்ளானுகிறார் - ஸர்வஜ்ஞரான பாஷ்யகாரர் திருவடிகளிலே ஸேவித்து ததபிமதவிஷயமாய் ஸகலசாஸ்த்ரங்களையுமாராய்ந்தறுதியிட்டிருக்குமவராகையாலே, ஆப்ததமராயிருக்குமவரிறே; (பணிக்கும்படி) என்றது - அருளிச்

ஆ.—மென்கிருர்மேல், (திருக்குருகைப்பிரான்) இத்யாதியால். ஸகல வேதசாஸ்த்ரதாத்பர்யஜ்ஞரான திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருவுள்ளத்தில் சோதித்தபடியே பணிக்கும்படி, அவாச்யத்ரவ்யத்தின் அத்யல்ப பிந்துலேசஸ்ப்ருஷ்டமான ஸ்ப்ருஹணீயபாவநபாஜநஸ்த்த பரிசுத்தஜலம் பரித்யாஜ்யமாமாப்போலே, ''நீர்நுமதென்று'' அவாச்யமான வஹங்கார லேசமிச்ரமாய் பரிசுத்ததசேஷத்வஜ்ஞாநாந்தர்கதமாய் தத்கைங்கர்ய புத்த்யா பரிசுத்தமுமான ஸ்வயத்நரூப மோக்ஷோபாயாந்தரங்கள், இவை பரிசுத்தமோக்ஷஸாதநங்களேயாகிலும், ஸ்வயத்நரூபஹீநாஹங் காரஸ்பர்சமுண்டாகையாலுபாதேயமன்றென்றபடி.

கஉரு. ஆகிலுமிவை ஸாதநமாக வீச்வரன் மோக்ஷபலத்தைக் கொடாநின்ருனே யென்ன, ரத்நராஜ்யார்த்திகள் உதாரனை ராஜாவின்பக்கலிலே பலகரையும் எலுமிச்சம்பழமும் கொடுத்து ரத்நராஜ்யங்களைப் பெற்ருல், அந்த குருட்டுப்பலகரையு மெலுமிச்சங்காயும், மஹாலாபமான அவ

---

பிந்துமிச்ரமான சாதகும்ப்பமயகுப்பகததீர்த்தஸலிலம்போலே அஹங்காரமிச்ரமான வுபாயாந்தரம்.

கஉரு. ரத்நத்துக்குப் பலகரைபோலேயும் ராஜ்யத்துக்கு

---

ஜீ.—செய்யும் ப்ரகாரமென்றபடி. (மதிரை)யாவது - அத்யந்தநிஷித்தத்ரவ்யமாய் ஸ்வஸ்பர்சலேசமுள்ள வஸ்துக்களையும் தன்னைப்போலே நிஷித்தமாக்குமதிறே; இத்தை யஹங்காரத்துக்கு த்ருஷ்டாந்தமாக்குகையாலே - அதினுடைய அத்யந்தநிஷித்ததத்வமும், தத்ஸ்பர்சலேசமுள்ளவஸ்துவும் தத்வந்நிஷித்தமென்னுமிடமும் தோற்றுகிறது. (சாதகும்ப)மாவது - ஸுவர்ணம்; (தந்மயகும்ப்பம்) என்றது - உள்ளுத்ரவ்யாந்தரமாய் ஸுவர்ணம் மேற்பூச்சாயிருக்கையன்றிக்கே, அதுதானே உபாதாநமாகப்பண்ணின குடமென்றபடி. இத்தால் - பாத்ரசுத்தி சொல்லுகிறது. (தத்கததீர்த்தஸலிலம்) என்கையாலே - அதுக்குள்ளிருக்கிற ஜலத்தின் பாவநத்வம் சொல்லுகிறது. (அதுபோலே அஹங்காரமிச்ரமான உபாயாந்தரம்) என்கையாலே - இங்கும் பாத்ரசுத்தியும் தத்கதபதார்த்தசுத்தியும் சொல்லவேணும். அதாவது - ''ఆత్మా జ్ఞానమయోஉమలః'' ''ஆத்மா ஜ்ஞாநமயோஉமல:'' என்கிற ஸ்வதோ நிர்மலதையாலும் பகவதநந்யார்ஹசேஷதையாலும் பரிசுத்தமாயிறே பக்த்யாச்ரயமான ஆத்மவஸ்து விருப்பது; தத்கதபக்தியும் பகவதேகாக்ரதயா பரிசுத்தையிறே; அஹங்காரம் கலசிற்றில்லையாகில் ஒரு குறையில்லையே.—ஆக, இத்தால் சொல்லிற்ருய்த்ததென் என்னில்; ஸுவர்ணபாத்ரகதமான தீர்த்தஜலம், பாத்ரசுத்தியுமுண்டாய்த் தானும் பரிசுத்தமாயிருக்க, ஸுராபிந்துமிச்ரதையாலே நிஷித்தமாமாப்போலே, ஸ்வதோ நிர்மலத்வாதிகளாலே பரிசுத்தமான வாத்மவஸ்துகதையாய் பகவதேகவிஷயதயா பரிசுத்தையாயிருக்கிற பக்திதான், ஸ்வயத்நமூலமான வஹங்காரஸ்பர்சத்தாலே, ஜ்ஞாநிகளங்கீகரியாதபடி நிஷித்தையாயிருக்குமென்றதாய்த்து. (பணிக்கும்படி) என்றதுக்கு ச்சேர, வாக்யத்தின்முடிவிலே, என்று என்கிற வித்தனையும் கூட்டி நிர்வஹிப்பது.

கஉரு. இன்னமுமிதுக்கு பலவிஸத்ருசத்வமென்பதொரு தூஷணமுண்டென்கிருர், (ரத்நத்துக்கு) என்றுதுடங்கி. அதாவது - த்வீபாந்தரங்களிலே சிலர் பலகரையாபரணமாகப் பூண்கையாலே, பலகரையைக் கொடுத்தவர்களுக்கு ரத்நத்தைக்கொடுப்பர்கள்; உதாரரான ராஜாக்கள்

ஆ.—ற்றுக்கு ஸத்ருசப்ரதேயமாகமாட்டாதே அபேக்ஷிதார்த்தஸூசக மாத்ரங்களாய்விடுமாப்போலே, மோக்ஷார்த்திகளும் பரமோதாரனான வெம்பெருமான்பக்கலிலே, ஸ்வயத்நஸாத்த்யையான துச்ச்சபக்தியைப்பண்ணினாராய் அநந்தஸ்த்திரபலமான மோக்ஷத்தைப்பெற்றால், அந்தக்லிஷ்ட பக்தி அதுக்கு ஸத்ருசமன்றியே, அநந்யபரத்வஸூசகமாத்ரமாமத்தனையிறே யென்கிறார்.

கஉச. ஆனாலும் பலஹேதுவாகவேதேனும் சிறிது அவனுக்குக்கொடுக்கவேண்டாவோ என்ன, தன்னுதென்று ஓராத்மாத்மீயங்களில்லாதபடி தான் நித்யதரித்ரனாகையாலே, மதீயமென்ன யோக்யதையற்ற தனக்கு, ததீயமென்னுமல் ஸ்வாமிக்குக் கொடுக்கலாவதொன்றுமில்லை என்கிறார்.

கஉரு. "దదామి బుద్ధియోగం తం యేన మాముపయాన్తి తే" "ததாமி புத்த்தி யோகம்தம் யேந மாமுபயாந்தி தே"என்றுஅவன் தந்தபக்தியை அவனுக்

எலுமிச்சம்பழப்போலேயும், பலத்துக்கு ஸத்ருசமன்று.

கஉச. தான் தரித்ரனாகையாலே தனக்குக்கொடுக்கலாவதொன்றில்லை.

கஉரு. அவன் தந்தத்தைக்கொடுக்குமிடத்தில், அடைவிலே

ஜீ.—ராஜ்யார்த்தியாய்வந்து ஒரெலுமிச்சம்பழத்தைக் கொடுத்தவனுக்கு ராஜ்யத்தைக்கொடுப்பர்கள்; இப்படி கொடுப்பர்களென்றால் மஹார்க்கமானரத்நத்துக்கும் மஹாஸம்பத்தான ராஜ்யத்துக்கும், பலகரையுமெலுமிச்சம்பழமும் ஸத்ருசஸாதநமல்லாதாப்போலே, "భక్త్యా లభ్యస్త్వనన్యయా" "భక్త్యాత్వనన్యయా శక్యః" "பக்த்யா லப்ப்யஸ்த்வநந்யயா" "பக்த்யாத்வநந்யயா சக்யః" என்கிறபடியே - பக்திசபலனாய் பரமோதாரனான வீச்வரன், இவன் பக்கல் பக்திமாத்ரமே பற்றாசாக பரமபுருஷார்த்தலக்ஷணமோக்ஷத்தைக் கொடுத்தாலும், பலத்துக்கிது ஸத்ருசஸாதநமன்றென்கை.

கஉச. ஆனால், விஸத்ருசமான பலகரையையும் எலுமிச்சம்பழத்தையும் உபஹாரமாகக்கொடுத்து, ரத்நத்தையும் ராஜ்யத்தையும் பெறுகிறவர்கள் தான்பெறுகிறபடியென், அவ்வோபாதியாகிறது என்ன; அது தனக்கும் யோக்யதையில்லை யென்கிறார், (தான்) என்றுதுடங்கி. அதாவது-அங்கு தானும் தனக்குரியனாய் தனக்கென்ன ஒருபலகரையும் எலுமிச்சம்பழமுமுண்டாகையாலே யதுசெய்யலாம்; இங்கப்படியன்றிக்கே "யானே நீ யென்னுடைமையும் நீயே" என்கிறபடியே ஆத்மாத்மீயங்களிரண்டும்அங்குத்தையதாய், தனக்கென்ன ஒன்றுமில்லாத அகிஞ்சநனாகையாலே, பேற்றுக்கு ஹேதுவாக அவன்விஷயத்தில் தனக்கு ஸமர்பிக்கலாவதொன்றுமில்லை யென்கை.

கஉரு. கோதாநத்தில் பிதாவுக்கு புத்த்ரன் தக்ஷிணைகொடுக்குமாப்போலே, அவன்தந்ததுதன்னை யவனுக்குக் கொடுத்தாலோ வென்ன வருளிச்செய்கிறார், (அவன்) என்றுதுடங்கி. (அவன்தந்தத்தைக் கொடுக்கை)யாவது - "విచిత్రా దేహసమ్పత్తిరీశ్వరాయ నివేదితుమ్। పూర్వమేవ కృతా బ్రహ్మన్ హస్తపాదాదిసంయుతా" "விசித்ரா தேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும்। பூர்வமேவக்ருதா ப்ரஹ்மந் ஹஸ்தபாதாதிஸம்யுதா" என்றும், "அந்நாள் நீதந்த வாக்கை" என்றும் சொல்லுகிறபடியே-அடியிலே யவன்தந்த கரணகளேபரங்களை, "మన్మనా భవ మద్భక్తో మద్యాజీ మాం నమస్కురు" "மந்மநா பவ மத்ப்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு" என்றும் "సతతం కీర్తయన్తో మాం

ஆ.—குக்கொடுத்தாலோவென்ன, ஸ்வதந்த்ரஸ்வாமியான அவன்தந்த பக்தியே, தரித்ரனானவிவன் பூர்ணனானவவனுக்குக் கொடுக்குமிடத்து, அவன் தந்தத்தை மீண்டு அவன்கையிலே கொடுக்கையாகிற வடைவிலே கொடுக்கில், அவனைப்பெறுகைக்கது ஸாதநமாகமாட்டாமையாகிற வநுபாயமாமத்தனை; கொடுத்தத்தை கொடுக்கில் பலஸாதநமாகமாட்டாதிறே. நாம் கொடுத்தத்தையேநமக்குக்கொடுத்து நாக்கு நீட்டாநின்றாய் நீயென்றபஹஸிக்கைக்குடலாமித்தனை. அன்றியே அவன் கொடுத்த பக்தியை தன்னுதாக வபிமாநித்து, அடைவுகெடும்படிகொடுக்கிறானாக பாவிக்கில், பரத்ரவ்யாபஹாரமாகிற கோயில் களவு, வருந்தியும் மறைக்கவொண்ணாதபடி பாவஜ்ஞரறிய வெளிப்பட்டுவிடும். திருவாபரணத்தைக் களவுகண்டு மீளக் கொடுக்கையேோபாதியாய்விடுமிறே.

க௨௬. இப்படி களவுவெளிப்படுமளவேயன்று, தன்னுடன் கலந்த பர்தாவினுடைய போகத்தையே தன்ப்ரயோஜநமென்றுநினையாதே, தன் வயிறுவளர்க்கைக்குறுப்பென்று பதிவ்ரதை நினைக்கில், சேஷபூதையான தனக்கும் ரக்ஷகனான பர்தாவுக்கும் அவத்யமாமாப்போலே, பரபோகோபகரணபக்தியே ஸ்வபோகத்துக்குறுப்பென்று சேஷபூதன் நினைக்கில், ததேகபோகனான தனக்கும் நிருபாதிகரக்ஷகனான சேஷிக்கும் நிலைநின்றவவத்யமாய்த் தலைக்கட்டுமென்கிறார்.

கொடுக்கில் அநுபாயமாம்; அடைவுகெடக் கொடுக்கில் களவுவெளிப்படும்.

க௨௬. பர்த்ருபோகத்தை வயிறுவளர்க்கைக் குறுப்பாக்குமாப்போலே, இருவர்க்குமவத்யம்.

ஜீ.—யத்ந்தஶ்ச த்ருடவ்ரதா: ''ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தச்ச த்ருடவ்ரதா:'' என்றும் சொல்லுகிறபடியே - த்யாநார்சநப்ரணாமாதிகளாலே தச்ச்சேஷமாம்படிபண்ணுகை. (அடைவிலேகொடுக்கை)யாவது - ததீயமென்னும் புத்தியாலே ஸமர்ப்பிக்கை. இப்படி கொடுக்கில் (அநுபாயமாம்) என்றது - அவனத்தை யவனுக்கே கொடுத்த வித்தனையொழிய, தானொன்று கொடுத்ததாகாமையாலே, அது பேற்றுக்கு ஸாதநமாகாதென்றபடி. (அடைவுகெடக்கொடுக்கை)யாவது - மதீயமென்னும் புத்தியாலே ஸமர்ப்பிக்கை. இப்படிசெய்யில் (களவுவெளிப்படும்) என்றது-பகவத்த்ரவ்யாபஹாரம் ப்ரகாசிக்குமென்றபடி. ராஜமஹேந்த்ரன்படியை ரஹஸ்யத்திலே களவுகண்டு ஓலக்கத்திலே கொடுக்குமாப்போலேயிறே இவன்கொடை.

க௨௬. இன்னமு முபாயாந்தரத்துக்கொரு தூஷணம் சொல்லுகிறார், (பர்த்ருபோக) இத்யாதியாலே. அதாவது-பார்யையானவள் ஸ்வயம்ப்ரயோஜநமான பர்த்ருபோகத்தை ஸ்வோதரபோஷணத்துக்கு ஸாதநமாக்கிக்கொள்ளுமளவில், தன்னை பார்யையாக விரும்பின பர்தாவுக்கும், தத்பார்யையென்று பேரிட்டிருக்கிற தனக்குமவத்யமாமாப்போலே, பகவத்வைலக்ஷண்யாநுபவத்தாலே விளைந்த போகரூபையான பக்தியை மோக்ஷஸாதநமாக்குமளவில், தன்னை சேஷபூதனாகவிரும்பித் தன்னோடே கலந்து பரிமாறின வீச்வரனுக்கும் தச்ச்சேஷபூதனென்று பேரிட்டிருக்கிற தனக்குமவத்யமாய்த் தலைக்கட்டுமென்கை.— ''ராத்ரி பர்தாவோடே ஸம்ச்லேஷித்து விடிவோறே கைக்கூலிதரவேணும் என்று வளைக்குமாப்போலே, பக்தியை யுபாயமாகக்கொள்ளுகை'' என்றிறே பிள்ளானருளிச்செய்தது.

ஆ.—க௨௭, க௨௮. இப்படி யிருவர்க்குமவத்யகரையான விந்தபக்தியை "శ్రోతవ్యో మన్తవ్యో నిదిధ్యాసితవ్యః" "ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்த்யாஸிதவ்ய:" என்றித்யாதிகளாலே ஸாராம்சமான வேதாந்தங்கள் மோக்ஷோபாயமாக விதிக்கிறபடி யென் என்று சங்கித்து பரிஹரிக்கிறார், (ஔஷதஸேவை) இத்யாதியால். வேண்டிக்கொள்ளவும் ஔஷதஸேவைபண்ணாதே முகம்மாறித்திரிகிற வபிமதரான ரோகிகளுக்கு, ரோகாநுகுணமாக ததபிமதமான வபத்த்யவஸ்துக்களிலே, ரோகநாசகரமான வந்த திவ்யௌஷதத்தை மறைத்துக் கலசியிடும் ஹிதைஷிகளான வைத்யரைப்போலே, ஸம்ஸாரமஹாரோகநாசகரமாம் ஔஷதமான நச்சுமாமருந்தை யுபதேசித்தாலும் ஸேவியாதே விமுகராய்த் திரிகிற சேஷபூதரான ஸம்ஸாரிகளுக்கு ஸம்ஸாராநுகுணமாக ததபிமதமாய் அஹங்காரகர்ப்பமான ஸ்வயத்நத்திலே நோய்களனுக்கும் மருந்தான வீச்வரனைத்தெரியாதபடி கலந்து, அந்த வேதாந்தங்கள் வாத்ஸல்யத்தாலே விதிக்கிற வித்தனை. பரிசுத்த்த பகவதுபாஸநத்திலே யிழியவே, ஸ்வாதந்த்ர்யாந்யசேஷத்வங்க

---

க௨௭. வேதாந்தங்களுபாயமாக விதிக்கிறபடியென் என்னில்;

க௨௮. ஔஷதஸேவைபண்ணாதவர்களுக்கு அபிமதவஸ்துக்களிலே அத்தைக்கலசியிடுவாரைப்போலே, ஈச்வரனைக் கலந்து விதிக்கிறதித்தனை.

---

ஜீ.—க௨௭. இப்படி ஸ்வரூபவிரோதாதி தோஷதுஷ்டமானவித்தை, ஹிதாநுசாஸநம் பண்ணுகிறவேதாந்தங்கள், "ఓమిత్యాత్మానం ధ్యాయథ" "ఆత్మానమేవ లోకముపాసీత" "ఆత్మా వా అరే ద్రష్టవ్యః శ్రోతవ్యో మన్తవ్యో నిదిధ్యాసితవ్యః" "ஓமித்யாத்மாநம் த்யாயத" "ஆத்மாநமேவ லோகமுபாஸீத" "ஆத்மா வா அரே த்ரஷ்டவ்யச் ச்ரோதவ்யோமந்தவ்யோ நிதித்த்யாஸிதவ்ய:" என்று இச்சேதநனுக்கு மோக்ஷோபாயமாக விதிக்கிறதுக்கு நிதாநமருளிச்செய்வதாக, தஜ்ஜிஜ்ஞாஸுப்ரச்நத்தை யநுவதிக்கிறார், (வேதாந்தங்கள்) என்றுதுடங்கி.

க௨௮. தந்நிதாநந்தன்னை யருளிச்செய்கிறார், (ஔஷதஸேவை)இத்யாதியாலே. அதாவது - அத்யந்தருக்ணராய்த் திரியாநிற்கச்செய்தே, அத்தை யவிளம்பேந போக்குமாப்தமான மஹௌஷதத்தை ஸேவிக்கச் சொன்னாலதுக்கிசையாத பாலபுத்த்ராதிகளுக்கு அவர்களாசைப்பட்டு விநியோகங்கொள்ளும் வஸ்துக்களிலே அந்த ஔஷதத்தைக் கலசியிடும் வத்ஸலரான மாத்ராதிகளைப்போலே, சீக்க்ரமாக ஸம்ஸாரவ்யாதியைத் தீர்க்கும் ஸித்த்தோபாயமாகிற நச்சுமாமருந்தை ஸ்வப்ரவ்ருத்திநிவ்ருத்திபூர்வகமாக ஸேவிக்கச்சொல்லி முதலிலே யுபதேசித்தால், அநாதியாய் வருகிற ஸ்வயத்நவாஸனையாலே அதுக்கிசையாத சேதநரையும் விடமாட்டாமையாலே அவர்களுக்கபிமதமான ஸ்வயத்நரூபமாயிருக்கிற உபாஸநத்திலே ததங்கத்வேந ஸித்த்தோபாயமான வீச்வரனைக்கலந்து தாத்ருசமான உபாஸநத்தை யவர்களுக்கு மோக்ஷோபாயமாக விதிக்கிற வித்தனையென்கை.— த்ருஷ்டாந்தத்தில், அபிமதவஸ்து வ்யாதிஹரமன்றியே தந்மிச்ரமாக ப்ரயோகித்த ஔஷதமே வ்யாதிஹரமாகிறாப்போலே, தார்ஷ்டாந்திகத்திலும், உபாஸநமன்றிக்கே தந்மிச்ரனான வீச்வரனே உபாயமென்னுமிடம் ஸம்ப்ரதிபந்நம். அவ்யவதாநேந ஸேவிக்குமளவில் அவிளம்பேந வ்யாதியைப் போக்கும் ஔஷதம்; அபிமதவஸ்துமிச்ரமானபோது

ஆ.—ளடங்குமே முன்னமென்னும் ஹிதைஷித்வத்தாலேயாயிற்று அவை ஸ்வயத்நரூபோபாஸநத்தைவிதித்ததுமென்றபடி.

கஉகூ. ஸ்வரூபஹாநிகராக்ருத்யவிசேஷநிவர்தநார்த்தமாகவாயிற்று இந்தவுபாஸநத்தை வேதாந்தசாஸ்த்ரம் விதித்ததுமென்கிருர், (இத்தை) இத்யாதியால். இந்த உபாஸநத்திலே யிவனைமூட்டினது, ஸ்வர்கஸாதநப்ரவ்ருத்தியாகிற பரஹிம்ஸையினின்றுமிவனை மீட்கைக்காக. இந்த ஹிம்ஸாசப்தமபிசாரகர்மவாசகமென்னவொண்ணுது, தந்நிவர்தகம் ஸ்வர்காதிஸாதநவிதியேயாகையாலும் ஏதத்விதியல்லாமையாலும். ஆனலும் து:க்கஸாதநமன்றியே ஸுகஸாதநமான விவற்றை பரஹிம்ஸையென்னலாமோவென்னவேண்டா, "సర్వదుఃఖ మయంగతే" "ஸர்வது:க்கமயம்கதே" என்றுப்ராக்ருத

---

கஉகூ. இத்தை ப்ரவர்த்திப்பித்தது பரஹிம்ஸையை நிவர்த்திப்பிக்கைக்காக.

---

ஜீ.—து விளம்பேந கார்யகரமாகிருப்போலேயாய்த்து உபாஸநமிச்ரனுனபோது ஈச்வரன் விளம்ப்யபலப்ரதனுகிறதும்.

கஉகூ. இனி யிப்படி இதுதன்னைவிதித்தது, கீழ்நின்ற நிலையைக்குலைத்து மேலேகொண்டுபோகைக்காகவித்தனை யென்கிருர், (இத்தை) என்றுதுடங்கி. அதாவது - சாஸ்த்ரமாகிறது, "త్రైగుణ్యవిషయా వేదాః" "த்ரைகுண்யவிஷயா வேதா:" என்கிறபடியே பெற்ற தாய் அந்த்தபதிராதிகளான விகலகரணரோடு படுகரணரோடு வாசியற வத்ஸலையாயிருக்குமாப்போலே, "மாதாபித்ருஸஹஸ்ர" ங்களிற்காட்டிலும் வத்ஸலதரமாகையாலே, தம:ப்ரசுரரோடு ரஜ:ப்ரசுரரோடு ஸத்த்வப்ரசுரரோடு வாசியற, அவர்கள் அபதே ப்ரவ்ருத்தராய் நசிக்கவிட க்ஷமமல்லாமையாலே, அவ்வோருடைய குணநுகுணமாக புருஷார்த்தங்களையும் தத்ஸாதநங்களையு முபதேசித்து, கொள் கொம்பிலே யேற்றுகைக்குச் சுள்ளிக்கால் நாட்டுவாரோபாதி, இவ்வோமுகங்களால் தன்னுடைய தாத்பர்யாம்சத்திலே யாரோபிக்கைக்காக ப்ரவர்திப்பிக்கிறதாகையாலே, ச்யேநவிதிதுடங்கி ப்ரபத்திபர்யந்தமாகவருமளவும் சேதநர் நின்றநின்றவளவுக்கீடாக, உத்தரோத்தரபுருஷார்த்தஸாதநங்களை ப்ரவர்திப்பித்து, பூர்வபூர்வங்களை நிவர்திப்பிக்கக் கடவதாயிருக்கும்; ஆகையாலே இவ்வுபாஸநத்தை ப்ரவர்திப்பித்தது பரஹிம்ஸையை நிவர்திப்பிக்கைக்காக.—(பரஹிம்ஸை)என்றது-மேலான ஹிம்ஸையென்றபடி; பரதேவதை, பரகதி என்கிற விடங்களில் - மேலான தேவதை மேலான கதி யென்றர்த்தமாகிறப்போலே. அதாவது - ச்யேநவிதிக்குமேலாக விதிக்கப்பட்ட பச்வாலம்பநாதிகளைச் சொன்னபடி. அத்தை ஹிம்ஸை யென்னலாமோ வென்னில், விஹிதஹிம்ஸையென்னக் கடவதிறே. "అగ్నీషోమీయం పశుమాలభేత" "அக்நீஷோமீயம் பசுமாலபேத" என்கிற விடத்தில், ஆலம்ப்பசப்தம், "ఆలమ్భః స్పర్శహింసయోః" "ஆலம்ப: ஸ்பர்சஹிம்ஸயோ:" என்கையாலே ஹிம்ஸாவாசியிறே. இத்தால், காம்யகர்மத்தைச்சொன்னபடி. (பூர்வவிஹிதஹிம்ஸை) யென்று ச்யேநவிதியைச்சொல்லுகையாலும், ததுபரிவிஹிதமான காம்யமே இவ்விடத்தில் விவக்ஷிதம்.—அன்றிக்கே, விஹிதமேயாகிலும், பகவச்சேஷத்வஜ்ஞாநபூர்வகமாக வநந்யப்ரயோஜநனாய்க்கொண்டு, அக்நீந்த்ராதிதேவதாந்தர்யாமிஸமாராதநமாகவே பண்ணும் பச்வாலம்ப்பநாதியுக்தயாகாதிகர்மத்தைப்பற்ற, ஸ்வதந்த்ரனாய்க்கொண்டு, ஸ்வர்காதிபலஸாதநமாக அக்நீந்த்ராதிதேவதாமாத்ரங்களை யுத்தே

ஆ.—ப்ரஹ்மர்ஷியுமானுன்; இப்படி யேகஜந்மத்திலே வர்ணுந்தரம் வரக் காண்கையாலே வர்ண மநித்யமென்னுமிடம் ஸித்தம். அல்பசக்திகவஸிஷ்ட்டவாக்யம் செய்தபடிகண்டால் ஸர்வசக்திஸம்பந்த்தவிசேஷ மென் செய்யாதென்று கருத்து.

௨௨௮. ஆனுலிவர்களை பஹுமதிபண்ணினு ருண்டோவென்ன, பெருமாள்முதலானுர் பலருமுண்டு, அதில் ஸம்சயிக்கவேண்டா வென்கிருர். "విభీషణస్తు ధర్మాత్మా" "விபீஷணஸ்து தர்மாத்மா" என்று ராவணனுடன் பிறந்தும் தர்மாத்மாவான ஸ்ரீ விபீஷணப்பெருமாளை, "ప్రదీయతాం దాశరథాయ మైథిలీ" "ப்ரதீயதாம் தாசரதாயமைதிலீ" என்று ஹிதம் சொன்னதுவே குற்றமாக குபிதனுன ராவணன், "కులపాంసనమ్" "குலபாம்ஸநம்" என்று அதர்மம்வளருகிற கோஷ்ட்டியிலே தர்மத்தைப்புகிறவிட்டு தூஷித்தாய், இக்குலத்துக்கழுக்கா யிருந்தாயென்று பருஷித்துத் தள்ளிவிட்டான். இப்படி தள்ளுண்டவவரை இக்ஷ்வாகுகுலதிலகரான பெருமாள் "అస్మాభిస్తుల్యో భవతు" "அஸ்மாபிஸ்துல்யோபவது" என்றந்த வுத்க்ருஷ்டவம்சத்திலே யவதரித்த தங்கள் நால்வரிலே யொருவராகத்

---

௨௨௮. விபீஷணனை ராவணன் "కులపాంసనమ్" "குலபாம்ஸநம்" என்ருன். பெருமாள் இக்ஷ்வாகுவம்ச்யனுக நினைத்து வார்த்தையருளிச்செய்தார்.

---

ஜீ.—க்ருஷ்டஜந்மாவானவன் அந்தசரீரந்தன்னிலே உத்க்ருஷ்டனுகக்கூடுமோவென்ன, கூடுமென்னுமிடத்துக்கு உதாஹரணதயா வருளிச்செய்கிருர், (க்ஷத்ரியனுன)என்றுதுடங்கி. அதாவது க்ஷத்ரியகுலோத்பவனுன விச்வாமித்ரன் அஜ்ஜந்மத்திலே தான் பண்ணின தபோவிசேஷமடியாக வஸிஷ்ட்டவாக்யத்தாலே க்ஷத்ரியத்வம் பின்னுட்டாதபடி ப்ரஹ்மர்ஷியாய் விட்டானிறே. ஆகையாலத்யந்தாபக்ருஷ்டகுலோத்பவரானுலும் அந்த சரீரம் தன்னுேடே அநவதிகசக்திகபகவத்ஸம்பந்த்தரூப ஸம்ஸ்காரவிசேஷத்தாலே, அத்யந்தோத்க்ருஷ்டகுலஜாநுவர்தநீயராம்படி உத்க்ருஷ்டதமராகக் குறையில்லையென்கை. அல்பசக்திகவஸிஷ்ட்டவாக்யம் செய்தபடிகண்டால் ஸர்வசக்திஸம்பந்த்தவிசேஷ மென்செய்யமாட்டாது.

௨௨௮. இதிஹாஸாதிப்ரமாணமுகத்தாலே பாகவதவைபவத்தை தர்சிப்பித்தார்கீழ்; சிஷ்டர்களுடைய வாசாரமுகத்தாலும் பாகவதவைபவத்தை தர்சிப்பிக்கிருர் மேல், "ధర్మజ్ఞసమయః ప్రమాణం వేదాశ్చ" "தர்மஜ்ஞஸமயஃப்ரமாணம்வேதாச்ச" என்று ஆப்தப்ரமாணமான வேதத்துக்குமுன்னே யெடுக்கும்படியிறே சிஷ்டாசாரத்தினுடைய ப்ராமாண்யமிருப்பது; அதில் ப்ரதமத்திலே அபக்ருஷ்டஜாதீயரானவர்கள் அந்த சரீரத்தோடே ஸஜாதீயவ்யாவ்ருத்தராய் உத்க்ருஷ்டதமராவர்களென்று கீழ்ச்சொன்னவர்த்தத்தை ஸ்த்திரீகரிக்கைக்காக, ராவணுநுஜனைக்குறித்து பெருமாளருளிச்செய்தவார்த்தையை யருளிச்செய்கிருர், (விபீஷணனை) என்றுதுடங்கி. அதாவது "ప్రదీయతాం దాశరథాయ మైథిలీ" "ப்ரதீயதாம் தாசரதாயமைதிலீ" என்று தனக்கு ஹிதத்தைச்சொன்ன தர்மாத்மாவான ஸ்ரீவிபீஷணுழ்வானை, பாபிஷ்ட்டனுனராவணன் குபிதனுய் "త్వాం తు ధిక్కులపాంసనమ్" "த்வாம்துதிக்குலபாம்ஸநம்" என்றிக்குலத்துக்கழுக்காகப் பிறந்தவுன்னை வேண்டேனென்று பருஷித்துத் தள்ளிவிட்டான்; இக்ஷ்வாகுகுலநாதரான பெருமாள் இவனையாதரபூர்வகமாக வங்கீகரித்த வநந்தரம் "ఆఖ్యాహి మమ తత్త్వేన రాక్షసానాం బలాబలమ్" "ஆக்யாஹி

ஆ.—திருவுள்ளம்பற்றி திருவாய்மலர்ந்து கைக்கொண் டருளினர். இத்தால் ஸ்வஜநம் கைவிட்டவர்களையும் ஆநுகூல்யமேபார்த்து சீரியராய்ப் புரையறக்கைக்கொள்ளுவ ரென்றபடி.

உஉகூ. தம்மையழியமாறும்படி யுடையராய் ஸ்ரீகார்யம் செய்த பெரியவுடையார்க்கு, ஸாமாந்யதர்மஸம்ஸ்தாபகரான பெருமாள், ஜந்மாதிநிகர்ஷம்பாராமல் ஜாத்யாத்யுத்க்ருஷ்டர்க்கு ஸத்புத்ர சிஷ்யர்கள் பண்ணும் ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரத்தைப் பெருப்பேருகப் பண்ணினர். இத்தால் ஸாமாந்யசிஷ்டரும் ஜாத்யாதிநிகர்ஷம்பாராமல் பாகவதர்களுக்குச் சேஷவ்ருத்தி பண்ணுவரென்றபடி.

உகூ௦. வர்ணதர்மத்தையே பேணிப்போரும் தர்மபுத்ரரும், விச்வஸநீயமான வசரீரிவாக்யத்தையும் க்ருஷ்ணங்கீகாரயோக்ய ஜ்ஞாநாதிக்யத்தையும் ஸம்ஸ்காரயோக்யதாஹேதுவாகக்கொண்டு, வர்ணதிகரன்றியே

---

உஉகூ. பெரியவுடையார்க்கு பெருமாள் ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரம்பண்ணி யருளினர்.

உகூ௦. தர்மபுத்ரர் அசரீரிவாக்யத்தையும் ஜ்ஞாநாதிக்யத்தை

---

ஜீ.—மமதத்வேந ராக்ஷஸாநாம் பலாபலம்" என்றுராக்ஷஸருடைய பலாபல மிருக்கும்படி நமக்குச்சொல்லுமென்கையாலே இவனை ராக்ஷஸஜாதீயனுக நினையாதே திருத்தம்பிமாரோபாதியாக அபிமானித்து வார்த்தையருளிச்செய்தாரென்கை. இவ்வாக்யத்திலே ராவணன் பரித்யஜித்தமையும் பெருமாள் பரிக்ரஹித்தமையும் சொல்லுகையாலே, பகவதாநுகூல்யமுண்டாகவே ப்ராக்ருதர் இவன் நமக்குடலல்லனென்று கைவிடுமவர்களென்னுமிடமும், பகவான் விரும்பி மேல்விழுந்து பரிக்ரஹிக்குமென்னுமிடமும் சொல்லப்பட்டது.

உஉகூ, இப்படி உக்திமாத்ரத்தாலன்றிக்கே பாகவதவைபவத்தை வ்ருத்தியாலும் பெருமாள் வெளியிட்டபடியை யருளிச்செய்கிறார், (பெரியவுடையார்க்கு) என்றுதுடங்கி. "మర్యాదానాంచలోకస్య కర్తాకారయితాచసః" "மர்யாதாநாம்சலோகஸ்ய கர்தாகாரயிதாசஸ:" என்கிறபடியே லோகமர்யாதாஸ்த்தாபநார்த்தமாக வவதரித்து பித்ருவசநபரிபாலநாதிகளாலே ஸாமாந்யதர்மஸ்த்தாபநசீலராயிருப்பா ரொருவரிறே பெருமாள்; ஏவம்ப்பூதரானவர் பிராட்டிபிரிவுகண்டு பொறுக்கமாட்டாமை தம்மையழியமாறின பெரியவுடையார்க்கு, ஜந்மவ்ருத்தாதிகளால் உத்க்ருஷ்டரானவர்களுக்கு தத்புத்ரசிஷ்யர்கள் பண்ணும் ப்ரஹ்மமேதஸம்ஸ்காரத்தை, அவருடையப்ரேமாதிக்யமே ஹேதுவாக திருத்தம்பியாரும் கூடநிற்கச் செய்தே தாமே ஸாதரமாகப்பண்ணி யருளினரிறே. இத்தால் ஜந்மாத்யுத்க்ருஷ்டரானவர்கள் அவற்ருல்குறைந்திருக்கும் விலக்ஷண பாகவத விஷயத்தில் புத்ரக்ருத்யமநுஷ்ட்டிக்கலாமென்னுமிடம் காட்டப்பட்டது.

உகூ௦. இவ்வர்த்தத்தை தர்மபுத்ரராநுஷ்ட்டாநத்தாலும் தெளிவிக்கிறார், (தர்மபுத்ரர்) என்றுதுடங்கி. பெருமாள் பரார்த்தமாக ஸாமாந்யதர்மத்தைப் பண்ணிப்போந்தாரேயாகிலும் விசேஷதர்மத்திலே திருவுள்ளமொத்திருக்கையாலே யவர்க்குச்செய்யலாம்; இவர்செய்ததிறேயரியது; ஸ்வவர்ணதர்மத்தையே உத்தேச்யமாகநினைத்து ஸர்வாவஸ்த்தையிலு மதுக்கொரு நழுவுதல்வாராதபடி ஸாவதாநமாக நடத்திக்கொண்டுபோருமவரிறே யிவர்; இப்படியிருக்கிற விவர் ஸ்ரீவிதுரரை ஸம்ஸ்

ஆ.—ஜ்ஞாநாதிகரான ஸ்ரீவிதுரரை வைதிகமான ப்ரஹ்மமேதத்தாலே கூச்சமற ஸம்ஸ்கரித்தார். இத்தால் வர்ணதர்மிகளும் ஜ்ஞாநாதிகரை வர்ணபகர்ஷம்பாராம லநுவர்த்திக்கவேணுமென்றபடி.

உ௱க. விசிஷ்டவேஷதர்சிகளாய் மந்த்ரத்ரஷ்டாக்களான ருஷிகள், மந்த்ரச்ரவணயோக்யதையற்ற தர்மவ்யாதன் வாசலிலே நெடுநாள் துவண்டு, ச்ரேயஸ்ஸாதநங்களான தர்மங்களினுடைய அயதாப்ரதிபத்திரூபஸந்தேஹங்களை, யதார்த்தோபதேசச்ரவணங்களாலே சமிப்பித்துக்கொண்டு நிஸ்ஸம்சயதர்மஜ்ஞரானார்கள். ஒருவ்ருக்ஷமூலத்தே நின்று தபஸ்ஸுபண்ணுகிற ஒருப்ராஹ்மணன் மேலே யெச்சமிட்டதொரு பக்ஷியைச்சுடப்பார்க்க, அது வெந்து நீறாய்ப்பறக்கக்கண்டு விஸ்மிதனாய், அருகணைந்ததொரு க்ராமத்திலே பிக்ஷைவரவுதாழ்த்ததென்று ஒரு

யும் கொண்டு ஸ்ரீவிதுரரை ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்தார்.

உ௱க. ருஷிகள் தர்மவ்யாதன் வாசலிலே துவண்டு தர்மஸந்தே

ஜீ.—கரிக்கிறதசையில் அவருடையவர்ணத்தைப்பார்ப்பதுஜ்ஞாநாதிக்யத்தைப்பார்ப்பதாய் என்செய்யக்கடவோமென்று வ்யாகுலப்படாநிற்கச்செய்தே "ధర్మరాజస్తుతత్రైనం సంచిస్కారయిషుస్తథా । పస్థుకామోఽభవద్విద్వానథాకాశేవచోఽబ్రవీత్ ॥ భోభో రాజన్నదగ్ధవ్య మేతద్విదురసంజ్ఞకమ్ । కలేబరమిహైతత్తే నైషధర్మస్సనాతనః ॥ లోకవైలక్షణోనామ భవిష్యత్యస్యపార్థివ । యతిధర్మమవాప్తోఽసౌనశోచ్యభరతర్షభ" "தர்மராஜஸ்துதத்ரைநம் ஸஞ்சிஸ்காரயிஷுஸ்ததா । தக்த்துகாமோऽபவத்வித்வாநதாகாசேவசோऽப்ரவீத் ॥ போபோ ராஜந்நதக்த்தவ்யமேதத்விதுரஸம்ஜ்ஞகம் । கலேபரமிஹைதத்தே நைஷதர்மஸ்ஸநாதநः ॥ லோகவைலக்ஷணோநாம பவிஷ்யத்யஸ்யபார்த்திவ । யதிதர்மமவாப்தோऽஸௌநசோச்ய பரதர்ஷப" என்றிவர் ப்ரஹ்மமேதஸம்ஸ்காரார்ஹரென்று சொன்ன அசரீரிவாக்யத்தாலும் ஸம்ப்ரதிபந்நமான இவருடைய ஜ்ஞாநாதிக்யத்தாலும் ஸந்தேஹமற்று, வைதிகாக்ரேஸரருக்குச் செய்யக்கடவ ப்ரஹ்மமேதஸம்ஸ்காரத்தாலே ஸம்ஸ்கரித்தாரிறே.

உ௱க. அநந்தரம் ஜந்மாத்யுத்க்ருஷ்டரானருஷிகள் ததபக்ருஷ்டன் பக்கலிலே தர்மச்ரவணம்பண்ணினபடியை யருளிச்செய்கிறார், (ருஷிகள்) என்றுதுடங்கி. சதுர்வேததரராய் ஸர்வோத்க்ருஷ்டராயிறே ருஷிகளிருப்பது; ஏவம்பூதரானவர்கள் வேதச்ரவணயோக்யதை யில்லாதகுலத்திலே பிறந்துள்ளவனாய், ஜாதிஸ்ம்ருதியோடே ஜாதனாகையாலே பூர்வஜந்மஸித்தமான ஜ்ஞாநத்தில் ப்ரம்சமில்லாமையாலும் மாதாபித்ருசிச்ருஷாவிசேஷத்தாலும் ஸகலதர்மஸூக்ஷ்மஜ்ஞாநனாயிருக்கும் தர்மவ்யாதன் வாசலிலேசென்று, மாதாபித்ருசிச்ருஷைகபரனாயிருக்கிறவவனவஸரம்பார்த்துத்துவண்டு ஜ்ஞாதவ்யங்களானதர்மங்களில் தங்களுக்கு ஸந்திக்த்தங்களானவையெல்லா மவன்பக்கலிலேகேட்டு அதில் ஸந்தேஹங்களைப் போக்கிக்கொண்டார்களென்கை. "కశ్చిద్ద్విజాతిప్రవరో వేదాధ్యాయీతపోధనః । తపస్వీధర్మశీలశ్చ కౌశికోనామభారత ॥ సాఙ్గోపనిషదాన్ వేదా నధీతేద్విజసత్తమః । సవృక్షమూలేకస్మింశ్చిద్వేదానుచ్చారయన్ స్థితః ॥ ఉపరిష్టాచ్చవృక్షస్య బలాకాసన్న్యలీయత । తయాపురీషముత్సృష్టం బ్రాహ్మణస్యతదోపరి" "கச்சித்த்விஜாதிப்ரவரோ வேதாத்த்யாயீ தபோதநः । தபஸ்வீ தர்மசீலச்ச கௌசிகோநாமபாரத ॥ ஸாங்கோபநிஷதாந்வேதாநதீதேத்விஜஸத்தமः । ஸவ்ருக்ஷமூலேகஸ்மிம்ச்சித் வேதாநுச்சாரயந்ஸ்த்திதः ॥ உபரிஷ்டாச்சவ்ருக்ஷஸ்ய பலாகாஸந்ந்யலீயத ।

ஆ. ... பதிவ்ரதையைச்சுடப்பார்க்க, அவளும்பகவத்ஸமாராதநம்பண்ணும் பர்த்ருசிச்ரூஷண பரையாய் தாழ்த்தேனத்தனைகாணும், அந்தப்பக்ஷியைப்பார்த்தாப்போலே யென்னையும் பார்க்கலாமென்றிருந்தீரோ, பிக்ஷைக்குவந்துகோபியாமல்போமென்ன, அவனும்திகைத் தநுதாபப்பட்டு இதுக்கு ப்ராயச்சித்தமநுக்ரஹிக்கவேணுமென்ன, அத்தைதர்மவ்யாதன்பக்கலிலே கேட்டுக்கொள்வதென்ன, பின்பு தர்மவ்யாதனிருக்கிறவிடத்தே சென்று அவன் மாம்ஸவிக்ரயம் பண்ணிக்கொண்டிருக்கிறபடியைக்கண்டு சங்கித்துக்கொண்டுநிற்க அவனுமிவனைக்கடைக்கணித்து பக்ஷியைக்கொன்ற பாபப்ராயச்சித்தமென் பக்கலிலே கேட்கச்சொல்லி அப்பதிவ்ரதைவரவிடஹங்களைச் சமிப்பித்துக்கொண்டார்கள்.

---

ஜீ.—தயாபுரீஷமுத்ஸ்ருஷ்டம் ப்ராஹ்மணஸ்ய ததோரஸி" என்றுதுடங்கி, கௌசிகனென்று பேரையுடையனாய் அதீதஸாங்கஸசிரஸ்கஸகலவேதனாயிருப்பானொருப்ராஹ்மணோத்தமன், ஒருவ்ருக்ஷமூலத்திலே வேதங்களையுமுச்சரித்துக்கொண்டு நிற்கச்செய்தே, அதின் மேலே யிருந்ததொரு கொக்கெச்சமிட்டதுதன் மார்பிலேவந்து பட்டவாறே, க்ருத்த்தனாய்ப்பார்த்தபார்வையிலே அதுபட்டுவிழ, அத்தைக்கண்டு தப்தசித்தனாய் கனக்கசோகித்து ராகத்வேஷபலாத்க்ருதராய்க்கொண்டு அக்ருத்யத்தைச்செய்தோமென்று பலகாலும்சொல்லிக்கொண்டு, ஆஸந்நமானதொருக்ராமத்திலே பிக்ஷார்த்தமாகப்போய், ப்ரதமமொரு க்ருஹத்திலேசென்று "భిక్షాందేహి" "பிக்ஷாம்தேஹி" என்று யாசித்தவளவிலே, அந்தக்ருஹிணியானவள் நில்லும் வருகிறேனென்றுசொல்லி கரசுத்த்யாதிகள்பண்ணி பிக்ஷைகொண்டுவருவதாக உத்யோகியா நிற்கச்செய்தே, பர்த்தாவானவன் அதீவக்ஷுதார்த்தனாய்வந்துபுகிற, அவள்பதிவ்ரதையாகையாலே பிக்ஷைகொண்டுவருகிறத்தைவிட்டு பாத்யாசமநீயாஸநப்ரதாநாதிகளாலே யவனைசிச்ரூஷிக்கிற பராக்கிலே ப்ராஹ்மணர் நிற்கிறத்தை மறந்து நெடும்போது நின்று பின்னையவன் நிற்கிறத்தைக்கண்டு நடுங்கி பிக்ஷையைக்கொண்டுவந்தவளவிலே, என்னை நிற்கச்சொல்லி இத்தனைபோது நீபுறப்படாதிருப்பானென்னென்றவன்குபிதனானவாறே, அவளவனை ஸாந்த்வநம்பண்ணி இத்தைப்பொறுக்க வேண்டிக்கொண்டு நான்பர்த்தாவேதெய்வமென்றிருப்பாளொருத்தி, அவனிளைத்துவருகையாலே தச்ச்சிச்ரூஷைபண்ணிநின்றேனித்தனையென்ன, உனக்குபர்த்தாவேயன்றோ ஸத்கரிக்கவேண்டுவது ப்ராஹ்மணரளவில் கௌரவப்ரதிபத்தியில்லையேயென்று வ்யங்க்யமாகச்சொல்லி, க்ருஹதர்மத்திலே வர்த்திக்கிற நீ ப்ராஹ்மணரை யிப்படியவமதிபண்ணலாகாதுகாணென்ன, நானொருக்காலும் ப்ராஹ்மணரை யவமதிபண்ணேன் ப்ராஹ்மணருடைய வைபவமெல்லாம் நன்றாகவறிவனென்று பரக்கச்சொல்லிக்காட்டி, இவ்வபராதத்தைப்பொறுக்கவேணும் பர்த்தாவேதெய்வமென்றிருக்கையாலே தச்ச்சிச்ரூஷையிலே பரவசையாய்நின்றேனித்தனை, என்னுடைய பதிசிச்ரூஷையினுடைய பலத்தைப்பாரீர் உம்முடையரோஷத்தாலே யந்தகொக்கு யாதொருபடிதக்த்தமாயிற்று அதுவுமெனக்கு விதிதம்காணுமென்றுசொல்லி "క్రోధశ్శత్రుశ్శరీరస్థో మనుష్యాణాం ద్విజోత్తమ। యః క్రోధమోహౌ త్యజతి తం దేవా బ్రాహ్మణం విదుః" "க்ரோதச்சத்ருச்சரீரஸ்த்தோ மநுஷ்யாணாம் த்விஜோத்தம । யஃக்ரோதமோஹௌத்யஜதி தம்தேவாப்ராஹ்மணம் விதுஃ" என்று துடங்கி. காமக்ரோதாதிகள் ப்ராஹ்மணனுக்காகாது,

ஆ.—வன்றோவந்தீர், என்வ்ருத்திகண்டு சங்கிக்கவேண்டாகாணும், ஜாதியிதுவாகையாலே இந்த விக்ரயமாத்ரத்தால்வந்தகொத்தாரம்கொண்டு இங்ஙனே வர்த்திப்பனித்தனை, ஒன்றையும் ஹிம்ஸிப்பதில்லையென்று, அவன் தத்ப்ராயச்சித்தமின்னதென்ன, தத்தர்சநஸம்பாஷணமாத்ரத்தாலே இவனும் பூதனாய் பலதர்மஸந்தேஹங்களும் சமிப்பித்துக்கொண்டு போனான். இன்னமிங்ஙனேபல இதிஹாஸங்களுண்டென்றருளிச்செய்வர். இத்தால் ஜ்ஞாநாதிகனே தர்மச்ரவணம்பண்ணுவார்க்கு அதிகவிஷயமென்றபடி.

---

ஜீ.—ஸத்யார்ஜவாதிகளுண்டாகவேணுமென்று விஸ்தரேண தான் ப்ரதிபாதித்து, "భవానపిచధర్మజ్ఞస్స్వాధ్యాయనిరతశ్శుచిః । నతుతత్త్వేనభగవన్ ధర్మాన్ వేత్సీతిమేమతిః॥ మాతాపితృభ్యాంశుశ్రూషుస్సత్యవాదీజితేన్ద్రియః । మిథిలాయాంవసన్ వ్యాధస్సతేధర్మాన్ ప్రవక్ష్యతి॥ తత్రగచ్ఛస్వభద్రంతే యథాకామం ద్విజోత్తమ। వ్యాధఃపరమధర్మాత్మా సతేఛేత్స్యతిసంశయాన్" "பவாநபிச தர்மஜ்ஞஸ்ஸ்வாத்யாயநிரதச்சுசிः। நதுதத்த்வேநபகவந் தர்மாந்வேத்ஸீதிமேமதிः। மாதாபித்ருப்யாம்சிச்ருஷுஸ்ஸத்யவாதீஜிதேந்த்ரியः। மிதிலாயாம்வஸந்வ்யாதः ஸதே தர்மாந் ப்ரவக்ஷ்யதி॥ தத்ரகச்சஸ்வபத்ரம்தே யதாகாமம் த்விஜோத்தம। வ்யாதःபரமதர்மாத்மா ஸதேசேத்ஸ்யதி ஸம்சயாந்" என்று நீரும் தர்மஜ்ஞர் வேதாத்த்யநநிரதர் சுத்தர், ஆயிருக்கச்செய்தேயும் தர்மங்களையுள்ளபடி யறியீரென்றெனக்கு நினைவு; மாதாபித்ருசிச்ருஷுவாய் ஸத்யவாதியாய் ஜிதேந்த்ரியனாய்க்கொண்டு, மிதிலையிலேயிருக்கிற வ்யாத னுமக்குதர்மங்களைச் சொல்லக்கடவன் அங்கேபோம், உமக்கு நன்மையுண்டாவுதாக, பரமதர்மாத்மாவா யிருக்கிற அந்தவ்யாதன் வேண்டினபடி யும்முடையஸம்சயங்களை யெல்லாம் போக்கக்கடவனென்ன, அவன் ப்ரீதனாய் இவனைகனக்கஸ்தோத்ரம்பண்ணி, அங்கு நின்றும் மிதிலையிலேசென்று, "పఞ్చకానిపవిత్రాణి శిష్టాచారేషునిత్యదా । ఏతన్మహామతే వ్యాధ ప్రబ్రూహియథాతథమ్" "பஞ்சகாநிபவித்ராணி சிஷ்டாசாரேஷு நித்யதா। ஏதந்மஹாமதேவ்யாத ப்ரப்ரவீஹியதாததம்" என்று சிஷ்டாசாரங்களிலே யெப்போது முளவாயிருக்கிற பவித்ரங்களஞ்சுளவை? மஹாமதியானவனே யத்தைச்சொல்லவேணுமென்ன, "యజ్ఞోదానంతపోవేదా స్సత్యంచ ద్విజసత్తమ। పఞ్చైతానిపవిత్రాణి శిష్టాచారేషునిత్యదా" "யஜ்ஞோதாநம் தபோவேதா ஸ்ஸத்யம்ச த்விஜஸத்தம। பஞ்சைதாநி பவித்ராணி சிஷ்டாசாரேஷு நித்யதா" என்று யஜ்ஞமும் தானமும் தபஸ்ஸும் வேதங்களும் ஸத்யமுமாகிற பவித்ரங்களான விவையைந்தும் சிஷ்டாசாரங்களிலே யெப்போதுமுளவாயிருக்குமென்று இத்யாதியாலே அவனித்தை யுபதேசிக்க, மேல்மேலும் தனக்கு ஸம்சயமானவையெல்லா மிவன் கேட்க உபதேசமுகத்தாலே ஸகலதர்ம ஸம்சயங்களையும் தர்மவ்யாதனறுத்த ப்ரகாரத்தை தர்மபுத்ரர்க்கு மார்க்கண்டேய னநுக்ரஹித்ததாக ஆரண்யபர்வத்திலே யிருநூறுமத்த்யாயம் தொடங்கி பதிமூன்றத்த்யாயத்தாலேபரக்கச் சொல்லப்பட்டதிறே. இன்னமுமிப்படி பலருமிவன்வாசலிலேதுவண்டு தர்மஸந்தேஹங்கள் சமிப்பித்துக்கொண்டமை பலவிடங்களிலுமுண்டு. இத்தால் ஜந்மாத்யுத்க்ருஷ்டரானவர்கள் ஜ்ஞாநாதிகரா யிருக்கில் அவர்கள் வாசலிலேதுவண்டு ஜ்ஞாதவ்யார்த்தங்கள் கேட்கக்குறையில்லை யென்னுமிடம் காட்டப்பட்டது.

ஆ.—உகூஉ. தர்மஸம்ஸ்த்தாபகனனக்ருஷ்ணன் "భీష్మద్రోణావతిక్రమ్య మాం చైవ మధుసూదన" "பீஷ்மத்ரோணாவதிக்ரம்ய மாம்சைவமதுஸூதந" என்னும்படி உத்க்ருஷ்டவர்ணவ்ருத்தராய் பார்த்துக்கொண்டிருக்கிற பீஷ்மத்ரோணாதிகளுடைய வலங்க்ருதமான க்ருஹங்களைக் கடைக்கணியாமல் புறக்கணித்துவிட்டு, வர்ணோத்யுத்கர்ஷமுமின்றியே யெழுந்தருளக்கூடுமென்னும் நினைவுமில்லாத ஸ்ரீவிதுரருடைய ஆநந்தாச்ருபங்கிலமாய் ஸஸம்ப்ப்ரம ந்ர்த்தஸமுத்த்ததூளிதூஸரிதமுமாய் ஸந்தோஷாதிசயத்தாலே பெருத்த திருமாளிகையிலே, "భుక్తవత్సు ద్విజాగ్రేషు నిషణ్ణః పరమాసనే। విదురాన్నాని బుభుజే శుచీని గుణవన్తి చ" "புக்தவத்ஸு த்விஜாக்ரேஷு நிஷண்ணః பரமாஸநே। விதுராந்நாநிபுபுஜே சுசீநி குணவந்திச" என்றுபாவநத்வபோக்யத்வ பரிமளஸாரஸ்யம் திருப்பவளத்திலும் திருவுள்ளத்திலுமூற்றெழும்படி யுகந்தமுதுசெய்தான்.

---

உகூஉ. க்ருஷ்ணன் பீஷ்மத்ரோணாதி க்ருஹங்களைவிட்டு ஸ்ரீ விதுரர் திருமாளிகையிலே யமுதுசெய்தான்,

---

ஜீ.—உகூஉ. அநந்தரம் "యద్యదాచరతి శ్రేష్ఠః" "யத்யதாசரதிச்ரேஷ்டஃ" என்று க்ருஷ்ணனுசரித்தபடியை யருளிச்செய்கிறார், (க்ருஷ்ணன்) என்று துடங்கி. தர்மஸம்ஸ்த்தாபநார்த்தமாக வவதரித்தருளி "లోకసంగ్రహమేవాపి సంపశ్యన్ కర్తుమర్హసి" "லோகஸங்க்ரஹமேவாபி ஸம்பச்யந் கர்துமர்ஹஸி" என்று ஜ்ஞாநியானாலும் லோகஸங்க்ரஹத்தைப்பார்த்து வர்ணாச்ரமதர்மங்கள் நன்றாகவநுஷ்டிக்க வேணுமென்றுபதேசித்தும், "యది హ్యహం న వర్తేయం జాతు కర్మణ్యతన్ద్రితః। మమ వర్త్మానువర్తన్తే మనుష్యాః పార్థ సర్వశః" "யதிஹ்யஹம்நவர்தேயம் ஜாதுகர்மண்யதந்த்ரிதః। மமவர்த்மாநுவர்தந்தே மநுஷ்யாஃ பார்த்தஸர்வசஃ" என்றொருக்கால் கர்மத்தில் சோம்பாதே நான் ப்ரவர்தியேனாகில் மநுஷ்யரெல்லா மென்வழியைப்பின்செல்லு மென்றபடியே பரார்த்தமாகத்தான் குறிக்கொண் டநுஷ்டித்தும் போரும் ஸ்வபாவனிறேக்ருஷ்ணன்; ஏவம்ப்பூதனானவன் ஸ்ரீதூதெழுந்தருளினபோது "భీష్మద్రోణావతిక్రమ్య మాం చైవ మధుసూదన। కిమర్థం పుణ్డరీకాక్ష భుక్తం వృషలభోజనమ్" "பீஷ்மத்ரோணாவதிக்ரம்ய மாம்சைவமதுஸூதந। கிமர்த்தம் புண்டரீகாக்ஷ புக்தம்வ்ருஷலபோஜநம்" என்னும்படி உத்க்ருஷ்டவர்ணவ்ருத்தராய் இங்கேயெழுந்தருளுவரென்று பார்த்துக்கொண்டிருந்த பீஷ்மாதிகளுடைய க்ருஹங்களையுபேக்ஷித்து, வர்ணோத்யுத்கர்ஷரஹிதராய் அத்தாலே யிங்கேயெழுந்தருளுவரென்னும் நினைவுமற்றிருந்த ஸ்ரீவிதுரர் திருமாளிகையிலே ஸாதரமாகச்சென்றுபுக்கு "సమ్భ్రమైస్తుష్యగోవిన్ద ఏతన్నః పరమం ధనమ్" "ஸம்ப்ரமைஸ்துஷ்யகோவிந்த ஏதந்நஃபரமம்தநம்" என்று பக்திபரவசரான அவர்பண்ணின ஸம்ப்ரமங்களையெல்லாம் கண்டுகந்து, "విదురాన్నాని బుభుజే శుచీని గుణవన్తి చ" "விதுராந்நாநிபுபுஜே சுசீநி குணவந்திச" என்கிறபடியே அஹங்காரோபஹதமல்லாமையாலே பரமபாவநமாய், பக்த்யுபஹ்ருதமாகையாலே பரமபோக்யமாயிருக்கிறவன்னத்தை, அந்த பாவநத்வபோக்யத்வங்களடியாக அத்யாதரம்பண்ணி யமுதுசெய்தானிறே.

ஆ.—உகூரு. பாவநபதார்த்தவாசியறியும் பெருமாள் "శబర్యా పూజితస్సమ్యగ్రామో దశరథాత్మజః" "சபர்யாபூஜிதஸ்ஸம்யக் ராமோதசரதாத்மஜ:" என்று ஜ்ஞாநாதிகையாய் பரிவையான ஸ்ரீசபரியின் ஜலஸ்பர்சமில்லாத திருக்கையாலே முன்புதான் பரீக்ஷித்து த்விஜஸ்பர்சமுள்ள தித்தித்த வற்றைத் திருப்பவளத்திலேகொடுக்க, துறைவாசியறிந்து விடாய்கெட வமுதுசெய்தருளினர். இத்தால் துரபிமாநமற்ற ஜ்ஞாநாதிகபக்திமான் களுடைய வபிமாநஸ்பர்சமுள்ளது, துறைவாசியறியும் விசிஷ்டர்க்குப் பாவநமுமாய் பரமபோக்யமுமாய் ப்ரார்த்தநீயமுமா யிருக்குமென்றபடி.

உகூச. மாறனேரிநம்பி பெரியநம்பிமடியிலே திருநாட்டுக்கெழுந்த ருளுகிறபோது புரோடாசத்தை நாய்க்கிடாதேகிடீர், நானின்னபடியின்ன படிசொன்னேனாகில் நீருமின்னபடியின்னபடிசெய்யும், நானொருபடியும் சொல்லிற்றிலேனாகில் நீருமொருபடியும் செய்யாதிருமென்று ஒன்றுமருளி ச்செய்யாமல் திருநாட்டுக்கெழுந்தருள; நம்பியு மவரை ப்ரஹ்மமேதத்தா லே பள்ளிபடுத்தி யருளிச்செய்தபடியே செய்தருள; இவரை வினவவெழுந் தருளினவுடையவர் ஜீயா லோகம்சிலுகிடாதபடி யடியேனொருவழியிலே யடைத்துக்கொண்டுவர தேவரீர் ஒருவழியே பிரித்தருளாநின்றது தேவரீர் செய்தருள வேண்டிற்றோவென்ன, ஆளிட்டந்திதொழவோ நான் பெருமா ளில் தர்மபுத்ரனில் பெரியனோ, இவர்பெரியவுடையாரில் ஸ்ரீவிதுரரில் தண் ணியரோ, நாட்டாரோடியல்வொழிந்தநமக்கு அவர்கள்சிலுகால்வரும் தா ழ்வேது,பயிலும்சுடரொளி,கெடுமாற்கடிமையி லாழ்வாரருளிச்செய்த ததீ யசேஷத்வத்திலிங்கக்வயியாமல் எங்கேபோய்ப் பின்னைகொள்ளலாமென்

---

உகூரு. பெருமாள் ஸ்ரீசபரிகையாலே யமுதுசெய்தருளினர்.
உகூச. மாறனேரி நம்பி விஷயமாக பெரியநம்பி உடையவர்க்

---

ஜீ.—உகூரு. ஏதத் பூர்வாவதாரத்திலு மிப்படி யநுஷ்ட்டித்த ப்ரகா ரத்தை யருளிச்செய்கிறார், (பெருமாள்) என்றுதுடங்கி. அதாவது ரகு குலதிலகரா யாசாரப்ரதாநரான பெருமாள், "శబర్యా పూజితస్సమ్యగ్రామో దశరథాత్మజః" "சபர்யாபூஜிதஸ்ஸம்யக்ராமோதசரதாத்மஜ:" என்னும்படி வேடுவிச்சியாய்வைத்தே குருசிச்ரூஷையிலே பழுத்து ஜ்ஞாநாதிகை யாய், தன்நாவுக்கு இனிதாயிருந்த பலமூலாதிகளெல்லாம் இங்குத்தைக் கென்று ஸஞ்சயித்துக்கொண்டு வரவுபார்த்திருந்த ஸ்ரீசபரி, தன்னுதாநு குணமாகத் தன்கையாலே யமுதுசெய்யப்பண்ண அதிஸந்துஷ்டராயமு து செய்தாரென்கை. இத்தா லபிஜநாதிகளால் வரு மபிமாநகந்தமற்ற ஜ்ஞாநப்ரேமாதிகருடைய வபிமாநஸ்பர்சமுள்ளவை ஆத்மகுணகதர்சிக ளான விசேஷஜ்ஞர்க்கு அதீவ பாவநபோக்யங்களாயிருக்குமென்னுமிடம் காட்டப்பட்டது.

உகூச. இப்படி ஸ்ரீராமாயண மஹாபாரத ஸித்தமான சிஷ்டாசா ரங்களாலே பாகவதவைபவத்தை ப்ரகாசிப்பித்தார்கீழ்; இன்னமு மிவ் வர்த்தவிஷயமாக பூர்வாசார்யவசநத்தை ஸ்மரிப்பிக்கிறார், (மாறனேரி நம்பி) என்றுதுடங்கி, அதாவது - அபிமாநஹேதுவான ஜந்மவ்ருத்தா திகளன்றிக்கே ஆளவந்தார் ஸ்ரீபாதத்தையுடையராய் அத்த்யாத்மஜ்ஞா நபரிபூர்ணராயிருக்கிற மாறனேரிநம்பி, தம்முடையவந்திமதசையிலே ஆள வந்தாரபிமானித்தருளின வித்தேஹத்தை ப்ராக்ருதிபந்துக்கள் ஸ்பர்சிக் கில்செய்வதென்னென்றதிசங்கை பண்ணி, ஸப்ரஹ்மசாரிகளான பெரிய நம்பியைப்பார்த்து புரோடாசத்தைநாய்க்கிடாதேகிடீரென்றருளிச்செய்து

ஆ.—திருந்தீரோவென்ன, உடையவருமுகந்து வித்தராய்நிற்க, இவரொன்று மருளிச்செய்யாம லெழுந்தருளினதுக்கு காரணமென்னென்ன, ச்லோகத்வயம் காணும் அப்போதிவர்க்கநுஸந்தாநமென்ன, அதுபெண் கண்ட பிச்சின் வார்த்தையன்றோவென்ன, இப்பெண்ணினுடைய நித்ய யோகத்தை யநுஸந்தித்தருளவேண்டாவோ வென்ன, நம்பியுமுகந்து அப்போது விசேஷகடாக்ஷம் பண்ணியருளினாரென்கிற சரமாதிகாரியான மாறனேரி நம்பிவிஷயமாக சரமார்த்த நிஷ்ட்டரான பெரியநம்பி ச்ரோதாவானவுடையவர்க்கு மறையாமலருளிச்செய்த தஞ்ஜமானவார்த்தையைபரமரஹஸ்யமாகையாலே ஸூசித்து(ஸ்மரிப்பது)என்கிறார். ஆகஜாத்யாதிநிகர்ஷம்பாராமல்ஜ்ஞாநாதிக்யத்தையேபார்த்துததீயரையாதரித்தநுவர்த்திக்க வேணுமென்னுமிடம் ததீயாநுஷ்ட்டாநஸித்தத மென்றதாயிற்று.

உருடு. இனி பகவத்ஸாஜாத்யாதிகள்போல் ததீயஸாஜாத்யாதிகளும் ச்லாக்க்யங்கள், அபாகவதருடைய வித்யாத்யுத்கர்ஷமடங்க கர்ஹயங்களென்று மருளிச்செய்கிறார், ("ప్రాదుర్భావైః")("ப்ராதுர்ப்பாவைஃ") இத்யாதியால். "ప్రాదుర్భావై స్సురనరసమో దేవదేవస్తదీయా జాత్యావృత్తై రపిచ గుణత స్తాదృశో నాత్రగర్హా । కింతు శ్రీమద్భువనభవనత్రాణతో ఽన్యేషు విద్యావృత్తప్రాయో భవతి విధవాకల్పకల్పః ప్రకర్షః" "ப்ராதுர்ப்பாவை ஸ்ஸுரநரஸமோ தேவதேவஸ்ததீயா ஜாத்யாவ்ருத்தை ரபிச குணதஸ்தாத்ருசோ நாத்ரகர்ஹா । கிந்து ஸ்ரீமத்ப்புவநபவநத்ராணதோ ऽந்யேஷு வித்யாவ்ருத்தப்ராயோபவதிவிதவாகல்பகல்பஃ ப்ரகர்ஷஃ"

---

கருளிச்செய்தவார்த்தையை ஸ்மரிப்பது.
உருடு. "ప్రాదుర్భావైః" "ப்ராதுர்ப்பாவைஃ" இத்யாதி

---

ஜீ.—திருநாட்டுக்கெழுந்தருள பெரியநம்பியுமப்படியே பிறர்கையில்காட்டிக்கொடாதே தாமேபள்ளிபடுத்துவந்தெழுந்தருளியிருக்க, இத்தையுடையவர்கேட்டருளி; பெரியநம்பி ஸ்ரீபாதத்திலேவந்து, ஜீயா மர்யாதை கிடக்கக் காரியம்செய்யவேண்டாவோ, தேவரீர்செய்தருளவேண்டிற்றோவென்ன, ஆளிட்டந்திதொழவோ, நான் பெருமாளில்காட்டி லுத்க்ருஷ்டனோ, இவர் பெரியவுடையாரில்காட்டி லபக்ருஷ்டரோ, பயிலும் சுடரொளி நெடுமாற்கடிமை கடலோசையோபாதியோ, ஆழ்வாரருளிச்செய்தவர்த்தத்தைச் சிறிதுகுறையவாகிலு மாசரிக்கவேண்டாவோ வென்றருளிச்செய்தவார்த்தை.

உருடு. இனி பாகவதஜந்மாதி ச்லாக்க்யதாகதநபூர்வகமாக அபாகவதோத்கர்ஷ நிந்த்யதையை ப்ரகாசிப்பிக்கிறார், "ప్రాదుర్భావైః"("ப்ராதுர்ப்பாவைஃ") இத்யாதி என்று. "ప్రాదుర్భావై స్సురనరసమో దేవదేవస్తదీయా జాత్యావృత్తైరపిచగుణతస్తాదృశో నాత్రగర్హా । కింతుశ్రీమద్భువనభవనత్రాణతో ఽన్యేషు విద్యావృత్తప్రాయోభవతి విధవాకల్పకల్పః ప్రకర్షః" "ப்ராதுர்ப்பாவைஸ்ஸுரநரஸமோ தேவதேவஸ்ததீயா ஜாத்யாவ்ருத்தை ரபிசகுணத ஸ்தாத்ருசோநாத்ரகர்ஹா । கிந்து ஸ்ரீமத்ப்புவநபவநத்ராணதோ ऽந்யேஷுவித்யாவ்ருத்தப்ராயோபவதி விதவாகல்பகல்பஃப்ரகர்ஷஃ" இத்தால் அயர்வறுமமரர்களதிபதியானவன் ப்ராதுர்ப்பாவங்களாலே ஸுரநரஸஜாதீயனாகாநிற்கும், ததீயரும் ஜாதியாலும் வ்ருத்தங்களாலும் குணத்தாலு மப்படியே யிதரஸமராயிருப்பர்கள், இதில் கர்ஹையில்லை, ச்லாகையேயுள்ளது; உபயரு மிப்படி நிற்கிறது இந்தலோகரக்ஷணம் நிமித்தமாக; இனி அபாகவதர் பக்கலுண்டான வித்யாவ்ருத்தபாஹுள்யரூபமான வுத்கர்ஷம் விதவாலங்காரம்போலே நிந்த்யமாகாநின்றதென்கிறது.

ஆ.—உகூகூ. பாகவதரன்றென்ன அதிகரித்த வேதவித்யை நிஷ்ப்பலமாமோவென்ன ஆமென்றுப்ரமாணம் சொல்லாநின்றதேயென்கிறூர்மேல், (பாகவதன்) இத்யாதியால். "చతుర్వేదధరోవిప్రో వాసుదేవంనవిన్దతి । వేదభారభరాక్రాన్త స్సవైబ్రాహ్మణగర్దభః" "சதுர்வேததரோவிப்ரோ வாஸுதேவம் நவிந்ததி। வேதபாரபராக்ராந்த ஸ்ஸவைப்ராஹ்மணகர்தப:" என்று வேதத்தினுட்பொருளான பகவத்ஸம்பந்தியான ஜ்ஞாநாநுஷ்ட்டாநமின்றியே புறப்பொருளான ஜ்ஞாநாநுஷ்ட்டாநமுடைய ஸ்த்தூலதர்சியானவன், தத்ததீயபோக்யமான வேதபரிமள த்ரவ்யபாரத்தைக் கினிய பரித்திளைத்து அதில் போக்யதாசுவடறியாத ப்ராஹ்மணக்கழுதையென்று ப்ரமாணம் தாக்ஷிண்யமறச்சொல்லாநின்றதிறே யென்கிறூர். "అవైష్ణవో వేదవిద్యో వేదహీనశ్చవైష్ణవః । జ్యాయాంసమనయోర్విద్ధి యస్యభక్తిస్త్విరామయి" அவைஷ்ணவோ வேதவித்யோ வேதஹீநச்சவைஷ்ணவ: । ஜ்யாயாம்ஸமநயோர்வித்த்தி யஸ்யபக்தி: ஸ்த்திராமயி" என்று வேதமோதாதவைஷ்ணவனில் ஓதியுமவைஷ்ணவனுனவன் தண்ணியனென்னு நின்றதிறே.

உகூஎ. பகவத்ஸம்பந்தமற்ற வைதிகஜந்மம் ஸத்கர்ஹிதமாமாப்போலே, தத்ஸம்பந்தமுள்ள திர்யகாதிஜந்மமும் ஸத்ப்ரார்த்தநீயமாயிருக்குமென்கிறூர் மேல் (ராஜாவான) இத்யாதியால். ரமணீயமானவற்றை யாசைப்படும்ராஜாவான ஸ்ரீகுலசேகரப்பெருமாள் "கோனேரிவாழும்

உகூகூ. பாகவதனன்றிக்கே வேதார்த்தஜ்ஞாநாதிகளை யுடையவன் குங்குமம்சுமந்த கழுதையோபாதியென்று சொல்லா நின்றதிறே.

உகூஎ. ராஜாவான ஸ்ரீகுலசேகரப்பெருமாள் திர்யக்ஸ்த்தாவர

ஜீ.—உகூகூ. பாகவதர்களன்றென்னு அவர்களுக்குண்டான வேதவித்யாதிகள் வ்யர்த்தமாமோவென்ன அப்படிப்ரமாணம் சொல்லாநின்றதிறேயென்கிறூர் (பாகவதனன்றிக்கே) என்றுதுடங்கி. அதாவது - "చతుర్వేదధరోవిప్రో వాసుదేవం నవిన్దతి । వేదభారభరాక్రాన్త స్సవైబ్రాహ్మణగర్దభః" "சதுர்வேததரோவிப்ரோ வாஸுதேவம்நவிந்ததி। வேதபாரபராக்ராந்த ஸ்ஸவைப்ராஹ்மணகர்தப:" என்று வேததாத்பர்யமான பகவத்ஜ்ஞாநாதிகளில்லாமையாலே பாகவதனன்றிக்கே வேதாத்த்யயநத்தோடே அதில் ஸ்த்தூலார்த்தஜ்ஞாநாதிகளை யுடையனுயிருக்குமவன், போகிகளாயிருப்பார் விரும்பும் பரிமளத்ரவ்யமான குங்குமத்தைச்சுமந்து திரியாநிற்கச்செய்தே அதின் வாசியறியாதகழுதைபோலே, பூர்வோத்தரபாகங்களாலே ஆராதநஸ்வரூபத்தையு மாராத்த்யஸ்வரூபத்தையும் ப்ரதிபாதியாநின்றுகொண்டு பகவதேகபரமாயிருக்கிற வேதமாகிற விலக்ஷணவஸ்துபாரத்தைக்கினியச்சுமந்துகொண் டிருக்கச்செய்தே, அதின் சுவடறியாத ப்ராஹ்மணக்கழுதையென்று வேதோபப்ரும்ஹணமான ப்ரமாணம் சொல்லாநின்றதிறேயென்கை.

உகூஎ. பகவத்ஸம்பந்தரஹிதமான ஜந்மாதிகள் ஸத்கர்ஹிதமென்னுமத்தை தர்சிப்பித்தார்க்கீழ்; தத்ஸம்பந்தமான திர்யகாதிஜந்மமும் ஸத்ப்ரார்த்த்யமென்னுமத்தை தர்சிப்பிக்கிறூர்மேல், (ராஜாவான) என்றுதுடங்கி. அதாவது த்விதீயவர்ணரான ஏற்றத்தையுடைய ஸ்ரீகுலசேகரப்பெருமாள், திர்யக்ஸ்த்தாவரஜந்மங்களானவை "వాచికైఃపక్షిమృగతామ్" "வாசிகை:பக்ஷிம்ருகதாம்" இத்யாதிகளாலே பாபயோநிகளாகச்சொல்லப்படா நிற்கச்செய்தே "வேங்கடத்துக்கோனேரிவாழும் குருகாய்ப்பிற

ஆ.—குருகாய்ப்பிறப்பேனே" "செண்பகமாய்நிற்கும் திருவுடையேனுவே னே" என்றித்யாதியாலே திருமலையாழ்வாரோடு ஸம்பந்தமுள்ள திர்யக்ஸ்த்தாவரஜந்மங்களை அலப்யலாபமாக வாசைப்பட்டார்.

உருஅ. உத்க்ருஷ்டஜந்மத்தை யாசைப்படவேண்டாதபடி ப்ராஹ்மணோத்தமரான வேண்டியவேதங்களோதி வேதார்த்தஸ்த்தாபநம் பண்ணும் பெரியாழ்வாரும், வேதமனைத்துக்கும் வித்தானமழலைச் சொல்லுடைய பிஞ்ஜில்பழுத்த விவர்திருமகளாரான வாண்டாளும் தாங்களவதரித்தவர்ணத்துக்கு நீசமானமூன்றாம் வர்ணமாய் அறிவொன்றுமில்லாத கோபஜந்மத்தை "நான்மெலிந்தேன் நங்காய்" "என்மகன் கோவிந்தன்" இத்யாதிகளாலும் "ஆய்ப்பாடிச்செல்வச்சிறுமியர்காள்" "நாமும் நம்பாவைக்கு" இத்யாதிகளாலும் இடையர்படி வடிவிலே துடைகொள்ளலாம்படி தானவனாகமீளாதபடி யாஸ்த்தாநம்பண்ணினார்கள். ஆக தத்தீய ஸம்பந்தமுள்ள ஜந்மமேவுத்க்ருஷ்டம், இதரமபக்ருஷ்டமென்றதாயிற்று.

உருகூ. இப்படி ஸ்ரீகோபிமாராக பாவிக்கும் காட்டில் ததவஸ்த்தை பிறக்கப்போகிறதோவென்ன, தத்ஸ்வாமிநியான பிராட்டி யவஸ்த்தையும் பிறவாநின்றால் ததவஸ்த்தைபிறக்கச்சொல்லவேணுமோ வென்கிறார் மேல்,

---

ஜந்மங்களை யாசைப்பட்டார்.

உருஅ. ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வாரும் திருமகளாரும் கோபஜந்மத்தை யாஸ்த்தாநம் பண்ணினார்கள்.

உருகூ. கந்தல்கழிந்தால் ஸர்வருக்கும் நாரீணாமுத்தமை

---

ஜீ.—ப்பேனே" "மீனாய்ப்பிறக்கும்விதியுடையேனுவேனே" "செண்பகமாய்நிற்கும் திருவுடையேனுவேனே" "தம்பகமாய்நிற்கும் தவமுடையேனுவேனே" என்று திருமலையாழ்வாரோடு ஸம்பந்தமுடைய திர்யக்ஸ்த்தாவரஜந்மங்களைப் பெறும்பேறாக வாசைப்பட்டாரென்றபடி.

உருஅ. இப்படி யாசைப்பட்டவளவன்றிக்கே தாழ்ந்த ஜந்மத்தை யாஸ்த்தாநம்பண்ணினவர்களை யருளிச்செய்கிறார், (ப்ராஹ்மணோத்தமர்) என்றுதுடங்கி. அதாவது இனி யிதுக்குமேலில்லை யென்னும்படியான வர்ணத்திலே யவதரித்து வித்யாமாஹாத்ம்யாதிகளாலே தஜ்ஜாதீயஸகலலோகோத்தமரான பெரியாழ்வாரும் வேதப்பயன்கொள்ளவல்லவவர் தம்மைப்போலே பேதைப்பருவத்திலே வேதஸாரார்த்த வித்தமையாயிருக்குமவர் திருமகளான வாண்டாளும், க்ருஷ்ணாவதாராநுபவத்தில் அபிநிவேசாதிசயத்தாலே "மிடுக்கிலாமையால் நான்மெலிந்தேன் நங்காய்" "என்மகன் கோவிந்தன்" "பன்னிருதிங்கள் வயிற்றில் கொண்டவப்பாங்கினால்" இத்யாதியாலும் "ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமியர்காள்" "நாமும் நம்பாவைக்கு" "ஆய்க்குலத்துன்றன்னைப்பிறவிபெறுந்தனை புண்ணியம்யாமுடையோம்" இத்யாதியாலும், தானவளாகப்பேசும்படி தாங்களவதரித்தவர்ணத்துக்கு மூன்றாம்வர்ணமாகையாலே தண்ணிதாயிருந்துள்ள அறிவொன்றுமில்லாத கோபஜந்மத்தைப் புரையற ஏறிட்டுக்கொண்டார்களென்கை.

உருகூ. இப்படி யாசைப்படுகையும் ஆஸ்த்தாநம்பண்ணுகையு மொழிய, கந்தல்கழிந்தால் ஸ்வரூபமிருக்கும்படி தானென்னென்ன வருளிச்செய்கிறார், (கந்தல்கழிந்தால்) என்றுதுடங்கி.—, அன்றிக்கே இப்படி விசிஷ்டவேஷப்ரயுக்தமான தாரதம்யாவஸ்த்தைகளன்றிக்கே, கந்தல்

ஆ.—(கந்தல்) இத்யாதியால். அநாதியேபிடித்து ஸ்வரூபத்தைதுருப்பற்றினஸ்வாதந்த்ர்யகந்தல் தத்ப்ரஸாதத்தாலே ஸவாஸநமாகக் கழிந்தால், பாரதந்த்ர்யமேவடிவான ஸர்வாத்மாக்களுக்கும் "సర్వలక్షణసమ్పన్నా నారీణా ముత్తమావధూః" "ஸர்வலக்ஷணஸம்பந்நா நாரீணாமுத்தமாவதூ:" என்று ஸமீசீநலக்ஷணவதிகளான நாரிகளெல்லார்க்கும் தன்னபிமாநத்தாலே தல்லக்ஷணம்பெறவேண்டும்படி யுத்தமையான நாச்சியாருடைய நிரதிசய ப்ரேமாவஸ்த்தை தன்னடையேவரக்கடவதாயிருக்கும்.

உசo. ஏததவஸ்த்தை யிவர்களுக்குண்டாகைக்கடியென்னென்ன, அநந்யார்ஹசேஷத்வம் அநந்யசரணத்வம் அநந்யபோகத்வம் ஸம்ச்லேஷத்தில் தரிக்கை விச்லேஷத்தில் தரியாமை ததேகநிர்வாஹ்யத்வமென்கிற சேஷபரதந்த்ர ஸ்வரூபசேதந ஸ்வரூபாநுரூபமானவாறு ப்ரகாரத்தாலே ஸ்வாதந்த்ர்யகந்த்தமற்று, பரிசுத்தமான ப்ரத்யகாத்ம ஸ்வரூபத்துக்கு கடிமாமலர்ப்பாவையோடுண்டான ஸ்வபாவஸாம்யம் ஸ்வதஸ்ஸித்தமாக வுண்டு; அதாயிற்றவ்வவஸ்த்தை யுண்டாகைக்கடியென்கிறார். இப்படி பிராட்டியுடைய ஸ்வபாவமுட்பட வுண்டாகைக்கிட்டுப்பிறந்த ஸ்வரூபமுடையவர்களுக்கு, அவரபிமாநத்திலே யொதுங்கின ஸ்ரீகோபிமார் ஸ்வபாவமுண்டாகச் சொல்லவேணுமோவென்று கீழேஸம்பந்தம்.

உசக. ப்ராஹ்மணோத்தமரானவர்கள் உத்க்ருஷ்டப்ராஹ்மஜந்மத்தை யுபேக்ஷித்து கோபஜந்மத்தை யாதரிப்பானென்னென்ன, அவற்றினஹங்காராநஹங்காரத்தாலேயென்கிறார், (த்ருஷ்டத்தில்) இத்யாதியால்.

---

யுடைய வவஸ்த்தை வரக்கடவதாயிருக்கும்.

உசo. ஆறுப்ரகாரத்தாலே பரிசுத்தாத்ம ஸ்வரூபத்துக்கு தத்ஸாம்ய முண்டாயிருக்கும்.

உசக. த்ருஷ்டத்தி லுத்கர்ஷமஹங்காரத்தாலே;

---

ஜீ.—கழிந்தால் ஸகலாத்மாக்களுக்கும்வரு மவஸ்த்தைதானேதென்ன வருளிச்செய்கிறாராகவுமாம், (கந்தல்கழிந்தால்) இத்யாதி அதாவது ஆத்மஸ்வரூபத்தை யுள்ளபடிப்ரகாசியாதபடி அநாதிகால மபிபவித்துப்போந்தவந்தேறியானவவித்யாதிதோஷம், பகவத்ப்ரஸாதவிசேஷத்தாலே பின்னுட்டாதபடி ஸவாஸநமாகப்போனால், ஸகலாத்மாக்களுக்கும் "సర్వలక్షణసమ్పన్నా నారీణా ముత్తమావధూః" "ஸர்வலக்ஷணஸம்பந்நா நாரீணாமுத்தமாவதூ:" என்கிறபடியே ஸ்த்ரீத்வலக்ஷணங்களெல்லாவற்றாலும் குறைவற்று, ஸ்வேதரஸகலஸ்த்ரீணா முத்தமையாயிருக்கும் பெரியபிராட்டியாருடையநிலை தன்னடையேவரக்கடவதா யிருக்குமென்கை.

உசo. அதெங்ஙனேயென்னு மபேக்ஷையிலே யத்தையுபபாதிக்கிறார், (ஆறுப்ரகாரத்தாலே) என்றுதுடங்கி. அதாவது அநந்யார்ஹசேஷத்வ மநந்யசரணத்வ மநந்யபோக்யத்வம் ஸம்ச்லேஷத்தில் தரிக்கை விச்லேஷத்தில் தரியாமை ததேகநிர்வாஹ்யத்வமாகிற வாறுப்ரகாரத்தாலே, நிச்சேஷநிவ்ருத்தாவித்யாதிதோஷதயா பரிசுத்தமானவாத்மஸ்வரூபத்துக்கு, ப்ரகாரஷட்க பரிபூர்ணையான பிராட்டியோடு ஸாம்யம் நைஸர்கிகமாக வுண்டாயிருக்குமென்கை. இந்தஸாம்ய ஷட்கத்தை நினைத்திறே "கடிமாமலர்ப்பாவை யொப்பாள்" என்றாழ்வாரருளிச்செய்தது. ஆக இவ்விரண்டுவாக்யமும் ப்ராஸங்கிகம்.

உசக. இனி யவர்களுத்க்ருஷ்டமான ஜந்மங்களையுபேக்ஷித்து நிக்ருஷ்டமான ஜந்மங்களை விரும்புவானென்னென்ன வருளிச்செய்கிறார் (த்ரு

ஆ.—விசிஷ்டவேஷமாகிற த்ருஷ்டத்தில் அபக்ருஷ்டரைப்பற்ற ஒருவனுக்கு வருமுத்கர்ஷம், அதி லுத்க்ருஷ்டாகாரத்தைப்பற்றி வருமஹங்காரத்தாலே யுண்டாம்; நிஷ்க்ருஷ்டவேஷமாகிற வத்ருஷ்டத்தில் ஸ்வேதரரைப்பற்ற ஒருவனுக்கு வருமுத்கர்ஷம், அதி லுத்க்ருஷ்டாகாரத்தைப்பற்றிவரு மஹங்காரராஹித்யத்தாலே யுண்டாம். அஹங்காரஹேதுவான வர்ணாதிகளில் வருமுத்கர்ஷம் விசிஷ்டவேஷாபிமாநமாகிற வஹங்காரத்தாலே நிற்கும்; அஹங்காரராஹித்யஹேதுவான சேஷத்வாதிகளில் வரு முத்கர்ஷம் நிஷ்க்ருஷ்டவேஷாநுகுணமான ததாவிதாஹங்காரராஹித்யத்தாலே நிற்குமென்றபடி. உத்க்ருஷ்டாபக்ருஷ்ட ஜந்மங்களினுபேக்ஷாபேக்ஷைக்கடி அஹங்காராநஹங்கார கார்யமான த்ருஷ்டாத்ருஷ்டோத்கர்ஷஹேதுவாகையாலே என்று கீழேஸம்பந்தம்.

உசஉ. இந்த வஹங்காராநஹங்காரங்கள் பேறிழவுகளையுண்டாக்கும்படியை மூதலித்துக்காட்டுகிறார் மேல் (ப்ரஹ்மாவாய்) இத்யாதியால். "ద్విపరార్ధావసానేమాం ప్రాప్తుమర్హసి పద్మజ" "த்விபரார்த்தாவஸாநேமாம் ப்ராப்துமர்ஹஸிபத்மஜ" "கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான்" என்கிறபடியே த்விபரார்த்தகாலாவஸாநத்தளவும் அஹங்கார கார்யத்ருஷ்டத்தி லுத்கர்ஷாதிசயமுடைய ப்ரஹ்மாவாய், ஸர்வஸுலபனானகண்ணனடிக்கமலத்தை யிழந்தகர்த்தப்பட்டுப்போதல்; "ముక్తిం గతా న్యా గోపకన్యకా" "முக்திம்கதாந்யாகோபகந்யகா" என்றஹங்காரராஹித்யகார்யமான வத்ருஷ்டத்தி லுத்கர்ஷாதிசயமுடைய இடக்கையும் வலக்கையுமறியாத இடைச்சி சிந்தயந்தியாய் கண்ணன் கழலிணை நண்ணிவாழ்ந்துவிடுதல் செய்யும்படியிறே அஹங்காராநஹங்காரஸ்வபாவ மிருக்கும்படியென்கிறார். அண்டாதிபத்யத்தால்வந்தவஹங்காரமளவிறந்து அதடங்க விட்டுப்பற்றவேண்டுமருமையுண் டவனுக்கு; ஒரு குடிசிலைப்பற்றி வருமஹங்காரமும் திருக்குழலோசையாலடியறுகையால் வருத்தமறக் கடுகெனபெறலா

---

அத்ருஷ்டத்தி லுத்கர்ஷமஹங்கார ராஹித்யத்தாலே.

உசஉ. ப்ரஹ்மாவா யிழந்துபோதல் இடைச்சியாய்ப்பெற்று விடுதல் செய்யும்படியா யிருக்கும்.

---

ஜீ.—ஷ்டத்தில்) என்றுதுடங்கி. அதாவது -ஆபிஜாத்யாதிகளுமைச்வர்யமுமாகிற த்ருஷ்டபுருஷார்த்தத்தில் ஒருவனுக்குள்ளவுயர்த்தி விச்வாமித்ராதிகளைப்போலே தான்நின்ற நிலைக்குமேலே உத்கர்ஷம் தேடப்பண்ணுமஹங்காரத்தாலேயுண்டாம்; சேஷத்வாதிகளும் கைங்கர்யஸம்பத்துமாகிற அத்ருஷ்டபுருஷார்த்தத்தில் ஒருவனுக்குண்டாமுயர்த்தி இவற்றினுடைய வபிவ்ருத்த்தியி லாசையினாலே நிலைக்குநிலை தாழப்போம்படியான வஹங்காரராஹித்யத்தாலே யுண்டாமென்கை.

உசஉ. இவ்வஹங்கார தத்ராஹித்யங்கள் இழவுபேறுகளுக்குடலாம்படியை யருளிச்செய்கிறார், (ப்ரஹ்மாவாய்) என்றுதுடங்கி. அதாவது த்ருஷ்டோத்கர்ஷாதிசயத்துக்குத்தக்க வஹங்காராதிகனான ப்ரஹ்மாவாய் "ద్విపరార్ధావసానేమాం ప్రాప్తుమర్హసి పద్మజ" "த்விபரார்த்தாவஸாநேமாம்ப்ராப்துமர்ஹஸிபத்மஜ" என்றும் "கடிக்கமலத் துள்ளிருந்தும் காண்கிலான் கண்ணனடிக்கமலந்தன்னை யயன்" என்றும் சொல்லுகிறபடியே யிழந்துபோதல்; அஹங்காரஹேதுக்க ளொன்று மில்லாமையாலே தத்ராஹிதையாய் இடக்கை வலக்கையறியாத யிடைச்சியான சிந்தயந்தியாய் "ముక్తిం గతా న్యా గోపకన్యకా" "முக்திம்கதாந்யா கோபகந்யகா"

ஆ.—மிவனுக்கு. ஆக பகவல்லாபாலாபத்துக்கடி அஹங்காரா நஹங்கார ப்ராவண்யமென்றதாயிற்று. ஆக இப்ரகரணத்தால் பகவதங்கீகார விசேஷாபேக்ஷித புருஷகாரபலமும், ததங்கீக்ருத குணவ்ருத்தி தூஷகாஹங்காராதி கார்பாபசாரகோரதையும், நிரஹங்காராதி ஜந்மாத்யுத்க்ருஷ்ட ததீயப்ரஸித்த வைபவவிசேஷமும், அஹங்கார கார்யஜந்மாதி தோஷ துஷ்டதையும் சொல்லப்பட்டது.

உசரு. மேல் (இப்படி) என்றுதுடங்கி. (உபயவிரோதிகளுமாயிருக்குமளவாக) உக்தவைபவவிசிஷ்டப்ரபந்நதிநசர்யா நுஸந்த்தாநாநுஷ்ட்டாந ப்ரகாரவிசேஷத்தை யருளிச்செய்கிறார், (இப்படி) என்று - அஹங்கார விஷயங்களின் பூர்வோக்த தோஷவிசேஷ ஸ்மரணம்பண்ணுகிறார்; ஸ்வரூபேணமுடித்தும் பாகவதவிரோதத்தைவிளைத்து முடித்தும் ப்ராப்ய ப்ரதிபந்த்தகமாயும் போருகிற ஸர்வப்ரகாரத்தாலும், அஸத்ஸாம்யாபத்திரூப ஸ்வரூபவிநாசஹேதுவான சரீராத்மாக்களைப் பற்றிவருமுபய விதமான வஹங்காரத்துக்கும், தேஹாத்மாபிமான ரூபமான வஹங்காரத்தின் கார்யமாய் விஹித நிஷித்தரூப விஷயப்ராவண்யத்துக்கு முத்பத்தி வ்ருத்திஹேதுவான விளைநிலம், அஹங்கார விஷயப்ராவண்ய காரணமான ஹேயதேஹவிசிஷ்டனை தானாகையாலே, சத்ருசதேஹ விசிஷ்டனாய் அஹங்கார விஷயரதிக்ரஹக்ரஸ்தனைக்கொண்டு பகவத்

உசரு. இப்படி ஸர்வப்ரகாரத்தாலும் நாசஹேதுவான வஹங்காரத்துக்கும், அதினுடையகார்யமான விஷயப்ராவண்யத்துக்கும், விளை நிலம்தானாகையாலே, தன்னைக் கண்டால் சத்ருவைக்கண்டாப்போலேயும்; அவற்றுக்கு

ஜீ.—என்னும்படியவன் திருவடிகளைப்பெற்று விடுதல்செய்யும்படியாயிருக்கு மிவ்வஹங்கார தத்ராஹித்யங்களின் ஸ்வரூபமென்கை. இப்படி யஹங்காரதத்ராஹித்யங்கள் இவனையிழக்கைக்கும் பெறுகைக்குமுடலாகையாலே, ஸ்ரீகுலசேகரப்பெருமாள் முதலானவர்கள் அஹங்காரஹேதுவாக ஜந்மங்களை யநாதரித்து தத்ரஹித ஜந்மங்களை யாதரித்தார்களென்று கருத்து.

உசரு. (தன்னைத்தானேமுடிக்கை) யாவது என்றுதுடங்கி இவ்வளவாக அஹங்காராதிகளின்தோஷமுபபாதிக்கப்பட்டது; அநந்தரம் ப்ராப்ய ப்ராபகங்க ளிரண்டுமவனே யென்றிருக்கும் ப்ரபந்நாதிகாரியுடைய திநசர்யாவிசேஷம் சொல்லப்படுகிறது, (இப்படி ஸர்வப்ரகாரத்தாலும்) என்றுதுடங்கி (ஸதாசார்யப்ரஸாதத்தாலே வர்த்திக்கும்படி பண்ணிக்கொண்டுபோரக்கடவன்) என்னுமளவாக. (இப்படி) என்று - கீழுக்தமான ப்ரகாரத்தைப் பராமர்சிக்கிறது; (ஸர்வப்ரகாரத்தாலும் நாசஹேதுவாகை) யாவது - ஸ்வரூபேணமுடித்தும் பாகவதவிரோதத்தை விளைத்து முடித்தும் பகவல்லாபவிரோதியாயும் எல்லாப்படியாலும் "అసన్నేవ" "அஸந்நேவ" என்கிறபடியே அஸத்கல்பமாம்படி ஸ்வரூபத்தை யுருவழியப்பண்ணுமதாயிருக்கை; அஹங்காரம்தான் தேஹாத்மாபிமாநரூபமாயும் தேஹாதிரிக்தாத்மவிஷயத்தில் ஸ்வாதந்த்ர்யாபிமாந ரூபமாயுமிரண்டுவகைப்பட்டிறே யிருப்பது, இவ்விடத்தி லவையிரண்டும் சேரச் சொல்லப்படுகிறது; (அதினுடையகார்யமான விஷயப்ராவண்யத்துக்கும்) தேஹாத்மாபிமாநமும் ஸ்வாதந்த்ர்யாபிமாநமுமே விஷயங்களை ஸ்வபோக்யத்வேந விரும்புகைக்கு மூலமாகையாலே விஷயப்ராவண்யத்தை யஹங்கார கார்யமென்கிறது; விஷயசப்தத்தாலே கீழநுகூலமாகவும்

ஆ.—விமுகனாய்ப்போந்த தன்னை ச்ரவணமநந தர்சநங்களாலே யுள்ளபடி கண்டால், உருவினவாளும் எரிந்தவிழியும் இறுக்கினபல்லும் தானுமாய் வெட்டத்துடரும் சத்ருவைக்கண்டாப்போலே யேங்கி நமக்கு நாசகமென்றே நினைத்தும், அஹங்காராதி வர்த்தகராய்க்கொண்டு தத்வசீக்ருதராய்த்திரியும் ஸம்ஸாரிகளைக் காணக்கண்ணொன்றிருக்கிறதான், காதாசித்கமாகக் கண்டால் சீறி முனைந்தெதிர்ந்துவரும் துஷ்டஸர்பத்தை நினைவறக்கண்டாப்போலே வெருவிப் பிற்காலித்து நமக்கு பாதகரென்றே நினைத்தும், அஹங்காராதிகளின் தோஷதர்சநத்தைப்பண்ணிவித்து அவற்றின்பேர்சொல்ல கருக்குலையும்படி ஸவாஸநமாக அவற்றுக்கு நிவர்த்தகரானததுபய ஸ்பர்சகந்தமற்ற விலக்ஷணவிசிஷ்ட ஸ்ரீ வைஷ்ணவர்களை "ஈட்டம்கண்டிடக்கூடுமேல்" என்று கண்குளிரக்கண்டால், நெடுநாள் தூரதேசாந்தரம்போய்வந்தவாப்தரானபந்துக்களை சத்ருஸர்ப்பமத்யே பயம்கெடக் கண்டாப்போலே மேல்விழுந்துகந்து அபிமததமரென்றேநினைத்தும், அந்தஸ்ரீவைஷ்ணவர்கள் முன்னாகப்பற்றுமர்ச்சாவதார ஸுலபனை

வர்த்தகரான ஸம்ஸாரிகளைக்கண்டால் ஸர்ப்பத்தைக்கண்டாப்போலேயும்; அவற்றுக்கு நிவர்த்தகரான ஸ்ரீ வைஷ்ணவர்களைக்கண்டால் பந்துக்களைக் கண்டாப்போலேயும்; ஈச்வரனைக்கண்டால் பிதாவைக்கண்டாப்

ஜீ.—ப்ரதிகூலமாகவும் சொல்லப்பட்ட விஹிதநிஷித்தரூபவிஷயத்வயத்தையும் சொல்லுகிறது; (வினைநிலம் தானாகையாலே) என்றது-இவையிரண்டுக்கும் ஜந்மபூமிபகவத்ஸ்வரூப திரோதாநாதிகளைப் பண்ணக்கடவ குணத்ரயாத்மக ப்ரக்ருதிபரிணமரூபமாய் ஸ்வகர்ம விசேஷாரப்தமாயிருக்கிற சரீரவிசிஷ்டனான தானாகையாலே யென்றபடி; கர்மாநுகுணமாக ரஜஸ்தமஸ்ஸுக்களாலே கலங்கவடிக்கும் சரீரவிசிஷ்டதையாலே மதிமயங்கி, தானல்லாத தேஹத்தைத் தானாகவும் தனக்குரியனல்லாத தன்னை ஸ்வதந்த்ரனாகவு மபிமானிப்பது தனக்கநர்த்தகரமான விஷயங்களிலே அத்யாதரத்தைப் பண்ணுவதா மவன்தானேயிறே; (தன்னைக்கண்டால்)இத்யாதி. இப்படி யநாதிகாலம்போந்தவனாய் இப்போது மதுக்குயோக்யமான சரீரவிசிஷ்டனாயிருக்கிற தன்னை தர்சித்தால், கொன்றல்லது விடேனென்று ஸாயுதராய்ப் பல்கவ்வித்திரியும் சத்ருவைக்கண்டாப்போலே குடல்கரித்து தனக்குநாசகனாக நினைத்தும், தங்களுடைய வுக்திவ்ருத்திகளாலே துர்வாஸனையைக்கிளப்பி அஹங்காராதிகளை மேல்மேலும் வளரும்படிபண்ணும் ததுபயவச்யரான ஸம்ஸாரிகளைக் கண்ணெதிரேகண்டால், அணுகில் மேல்விழுந் தள்ளிக்கொள்ளு மதிக்ரூரமான ஸர்ப்பத்தைக்கண்டாப்போலேயும் அஞ்சி நடுங்கி பிற்காலித்து நமக்கு பாதகரென்றே நினைத்தும், தங்களுடைய வுபதேசாநுஷ்டாநங்க ளிரண்டாலும் அஹங்காராதிகளின் தோஷதர்சநத்தைப்பண்ணிவித்து, தத்ப்ரஸங்கத்திலே பீதபீதனும்படிபண்ணி ஸவாஸநமாக வவற்றை நிவர்த்திப்பிக்கும் மத்யமபத நிஷ்டரான ஸ்ரீ வைஷ்ணவர்களைக் காணப்பெற்றால், தன்னுடைய வநர்த்தாப்யுதயங்களிரண்டும் தங்களதாய் தீயது விலக்கி நல்லதில்மூட்டி ரக்ஷிக்குமாப்தபந்துக்களைக் கண்டாப்போலே அத்யாதரம்பண்ணி நமக்கு நற்றுணையானவர்களென்று நினைத்தும், அடியிலே கரணகளேபரங்களைத்தந்து அவற்றைக்கொண்டு வ்யபிசரியாமல் நல்வழி நடக்கும்படி

ஆ.—ஈச்வரனை "காண்பதெஞ்ஞான்றுகொலோ" என்றபிநிவேசித்தபடியே விடாய்கெடக்கண்டால், ஹிதப்ரவர்த்தகனான பிதாவைக்கண்டாப்போலே ஸ்நேஹபயமிரண்டு முடையனாய் ஸ்வதந்த்ரஸ்வாமியென்றே நினைத்தும்; அந்த ஈச்வரனை கையிற்கனியென்னக்காட்டும் ஸதாசார்யனை த்ருஷ்ணையுடன் கண்டபோதெல்லாம், பெரும்பசியன்கைப்பட்டசேர்ப்பால்சோற்றைக்கண்டாப்போலே அபிநிவேசத்துடன் மேல்விழுந் தநுபவித்து போக்யபூதனென்றே நினைத்தும்; ஆசார்யஸேவையாலே பழுத்தஜ்ஞாநாநுஷ்ட்டாநபூர்ணனான ஸச்சிஷ்யனை அன்புடன்கண்டால், தானுகந்தவபிமதவிஷயத்தைக் கண்டாப்போலே சேஷத்வபாரதந்த்ர்யாதியான வாத்மபூஷணங்களைப்பூட்டி வைராக்யமாகிறகட்டுக்குள்ளே அந்ய த்ருஷ்டிபடாதபடி மறைத்து பகவத்குணாநுஸந்தாநரூபபோகவிஷயமாக்கி நிரந்தரம் நெடுநோக்குக்கொள்ளும் விஷயமென்று நினைத்தும்; விரோதிவர்த்தக ஸ்வரூபவிஷயத்தில் பாதகப்ரதிபத்தியும், தந்நிவர்த்தக விஷயத்தில் ஸ்வரூபவர்த்தக ப்ரதிபத்தியும், ஸ்வதந்த்ரசேஷிபக்கல் ஹிதைஷித்வப்ரதிபத்தியும், பரதந்த்ரசேஷிபக்கல் ப்ராப்யைகப்ரதிபத்தியும் தத்பரதந்த்ரர் பக்கலாதரணீய ப்ரதிபத்தியு முடையனாய், ஸம்ஸாரஹேதுவாய்க்கொண் டநர்த்தகரமான வஹங்காராதிகள் மூன்றில், ஆச்ரயாசி

போலேயும், ஆசார்யனைக்கண்டால் பசியன்சோற்றைக்கண்டாப்போலேயும்; சிஷ்யனைக்கண்டா லபிமதவிஷயத்தைக்கண்டாப்போலேயும் நினைத்து; அஹங்காரார்த்தகாமங்கள் மூன்றும்,

ஜீ.—சாஸ்த்ரங்களைக்காட்டி அக்ருத்யகரணாதிகளில் சிக்ஷித்துஸர்வாவஸ்த்தையிலும் தன்னுடைய ஹிதமேபார்த்துப் போருமீச்வரனை அர்ச்சாஸ்த்தலங்களிலே கண்களாரக்கண்டால், உத்பாதகனாய் வித்யாப்ரதனாய் அபதேப்ரவ்ருத்தனாகாதபடி நியமித்து நடத்திக்கொண்டுபோரும் ஹிதைஷியான பிதாவைக்கண்டாப்போலே ஸ்நேஹஸாத்த்வஸவிநயங்களை யுடையனாய்க்கொண்டு நமக்கு ஹிதபரனென்று நினைத்தும் அநாதிகாலம் "அஸந்நேவ" "அஸந்நேவ" என்னும்படி கிடந்ததன்னை பகவத்ஸம்பந்தத்தை யறிவித்து ஸத்தாவானாக்கி மேன்மேலும் தன்னுபதேசத்தாலே ஜ்ஞாநவைராக்யபக்திகளை விளைத்து கையிற்கனியென்ன பகவத்விஷயத்தைக்காட்டித்தரும் மஹோபகாரகனாய் "உன்சீரே யுயிர்க்குயிராய்" என்றும் "உன்றன்மெய்யிற் பிறங்கிய சீரன்றிவேண்டிலன்" என்றும் சொல்லும்படி குணவிக்ரஹங்களாலே தனக்கு தாரகபோக்யனாயிருக்குமாசார்யனைக் கண்ணுக்கிலக்காம்படி கண்டால், கண்ணுஞ்சுழலையிடும் பெரும்பசியன் தாரகமுமாய் போக்யமுமான சோற்றைக்கண்டாப்போலே அத்யபிநிவேசத்தோடே யநுபவித்து நமக்குதாரகபோக்யவிஷயமென்றேநினைத்தும். ஸாத்ய்யாந்தரநிவ்ருத்யாதி ஸமஸ்தஸ்வபாவ ஸம்பந்நதயா ஸம்யக்ஜ்ஞாநப்ரேமவானாயிருக்கும் ஸச்சிஷ்யனைக்கண்டால், தனக்காநந்தாவஹமான வபிமதவிஷயத்தைக் கண்டாப்போலே பகவத்குணாநுஸந்தாநதசையில் நாம்சொல்லுகிற பகவத்குணங்களை யாதரித்துக்கேட்பது அநுபாஷிப்பது வித்தனுவதாமாகாரங்களினாலே நமக்காநந்தாவஹனென்று நினைத்தும். (அஹங்காரார்த்த காமங்கள் மூன்றும்) இத்யாதி இவைமூன்றிலும் வைத்துக்கொண்டு அஹங்காரமநுகூலர்பக்கல் அநாதரத்தைப்பிறப்பிக்கும், அதாவது - சேஷத்வத்தை தன் ஸந்நிதியில் ஜீவிக்கவொட்டாதபடியிறே யஹங்காரத்தின் பலமிருப்பது, அஹங்காரி

ஆ.—யானவஹங்காரம் ஸ்வரூபவர்த்தகராய்க்கொண்டு அநுகூலரான ஸ்ரீவைஷ்ணவர்கள் பக்கல் ஸ்வாதிக்யஸாம்யபுத்தியால் வரும் ஸ்வநாசகரமான வநாதரத்தைப் பிறப்பிக்குமென்று கருக்குலைந்தும்; அநர்த்தகரமானவர்த்தம் ஸ்வரூபநாசகரமாய்க்கொண்டு ப்ரதிகூலரான ஸம்ஸாரிகள் பக்கல் ஒரு இடாக்காசைநச்சப்பண்ணு மாத்மநாசகரப்ராவண்யத்தைப் பிறப்பிக்குமென்று நடுங்கியும்; அப்ராப்தவிஷயகாமம் தன்கால்மேல் விழிலுதைத்துத்தள்ளிப் பருஷித்து முகம்காட்டாமலுபேக்ஷிக்கும் விமுகஸ்த்ரீகள்பக்கல், இப்படி நம்மையுபேக்ஷித்தாகிலும் காலாலேஸ்பர்சித்து முகம்பார்த்து வையப்பெறுவோமேயென்றும் அபஹாஸ்யநிஷித்தாபேக்ஷையைப் பிறப்பிக்குமென் றஞ்சியும்; இப்படி ஆதரணீயவிஷயத்திலநாதரத்தையும் அநாதரணீயவிஷயத்திலாதரத்தையும் உபேக்ஷாவிஷயத்தி

---

அநுகூலர்பக்கலநாதரத்தையும் ப்ரதிகூலர்பக்கல்ப்ராவண்யத்தையும் உபேக்ஷிக்குமவர்கள் பக்கலபேக்ஷையையும் பிறப்பிக்குமென்றஞ்சி,

---

ஜீ.—யானவன் "𑌨 𑌕𑌮𑍇𑌯𑌂 𑌕𑌥𑌞𑍍𑌚𑌨" "நகமேயம் கதஞ்சந" என்றிருக்குமதொழிய வொருவிஷயத்திலும் தலைதாழ்க்கவிசையானே, ஆகையாலே அஹங்காரம் மேலிடுமாகில் ஸ்வரூபவர்த்தகராய்க்கொண்டு அநுகூலராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களைக்கண்டால் நம்முடையசேஷிகளென்று துடை நடுங்கி யெழுந்திருந்து ப்ரணாமாதிபூர்வகமாக வநுவர்த்தநங்களைப்பண்ணவொட்டாதே, தன்னையவர்களிலதிகனாகவாதல் அவர்களைத் தன்னோடு ஸமராகவாதல் புத்திபண்ணி யநாதரித்திருக்கும்படி பண்ணுமென்கை; அர்த்தம் ப்ரதிகூலர்பக்கல் ப்ராவண்யத்தைப் பிறப்பிக்கும், அதாவது ஆரையாகிலும் சென்றநுவர்த்தித்து ஒருகாசுபெற்றதாய்விடவேணுமென்னும்படியிறே அர்த்தாகமிருக்கும்படி, ஆகையாலது ஸ்வரூபநாசகத்வேந ப்ரதிகூலரான ஸம்ஸாரிகளைக்கண்டால் வெருவியோடிப்போகவேண்டியிருக்க, ஒருகாசை நச்சி யவர்களோடே யுறவுபண்ணி யவர்களிருந்தவிடங்களிலே பலகாலம்செல்லுவது அவர்களையழைத்து விருந்திடுவது அவர்கள்குணகீர்த்தநம்பண்ணுவதாம்படி அவர்கள் விஷயத்திலே ப்ராவண்யத்தை யுண்டாக்குமென்கை; காமம் உபேக்ஷிக்குமவர்கள் பக்கலபேக்ஷையைப் பிறப்பிக்கும், "𑌕𑌾𑌮𑍍𑌯𑌤 𑌇𑌤𑌿 𑌕𑌾𑌮𑌃" "காம்யத இதிகாமஃ" என்கிறபடியே காமசப்தத்தாலே விஷயஸம்ப்போகஸுகத்தைச் சொல்லுகிறது, அது - "ஈசிபோமின்" இத்யாதிப்படியே தாரித்ர்ய வார்த்தகாதிகளடியாகத்தன்னை முகம்பாராமல்தள்ளிக் கதவடைத்து உபேக்ஷாவாதம்பண்ணும் ஸ்த்ரீகள் பக்கலிலே "ஏழையர் தாமிழிப்பச்செல்வர்" என்கிறபடியே அவர்களுபேக்ஷாவாதம் முதலானவைதன்னையே யுத்தேச்யமாகக்கொண்டு செல்லும்படி விலக்ஷணர் கேட்டால் சிரிக்கும்படியான ஹேயாபேக்ஷையை விளைக்குமென்கை; ஆகவிப்படி அஹங்காராதிகள் மூன்றும் ஸ்வரூபவர்த்தகரை யநாதரிக்கும்படியும் ஸ்வரூபநாசகரை யாதரிக்கும்படியும் ஸ்வரூபநாசகதையோடே யுபேக்ஷகருமாயிருக்கு மவர்களை யபேக்ஷிக்கும்படியும் பண்ணுமென்று அவற்றின்கொடுமைகளை யநுஸந்தித்து என்செய்யத்தேடுகிறதோவென்றஞ்சி;—; (அர்த்தகாமாபிமாநங்கள் மூன்றும்) என்று பாடமானாலும் "𑌗𑌰𑍍𑌵𑍋𑌽𑌭𑌿𑌮𑌾𑌨𑍋𑌽𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌃" "கர்வோऽபிமாநோऽஹங்காரஃ" என்கிறபடியே அபிமாநசப்தத்தாலே அஹங்காரத்தைச் சொல்லுகிற தாகையாலே (அநுகூலர்பக்கல்) இத்யாதியை நிரைநிரையாக்காதே யதா

ஆ.—லபேக்ஷையையும் பிறப்பிக்கு மஹங்காராதிகளின் கொடுமையை நினைத்து குடல்குலைந்து, சமதமாத்யாத்மகுணங்கள் அநாத்மகுண பூர்ணரான நம்மாலு முள்ளவாத்மகுணங்களையும் கெடுத்து இல்லாத வநாத்மகுணங்களையு முண்டாக்கு மநாத்மகுணபூர்ணரான பிறராலும் வருந்தியும் பிறப்பித்துக்கொள்ளவொண்ணாது; ஸகலாத்மகுண ஸம்பூர்ணனான ஸதாசார்யனுடைய நிர்ஹேதுகப்ரஸாதமடியாக இவ்வநாத்மகுணபூர்ணனு யுஜ்ஜீவித்திடுகவென்கிற ஜ்ஞாநாதி குணபூர்ண பகவத்ப்ரஸாதத்தாலே வருத்தமறப்பிறக்குமத்தனையென்று நிச்சலசித்தனாய்த் துணிந்தும்; குளித்துண்டுடுத்து பூசிப்புலர்த்திமதர்த்துத் திரிகையாகிற வஹங்காரவிஷயப்ராவண்ய வர்த்தகையான தேஹயாத்ரையில், ஹேயமான விந்ததேஹத்துக்கு இவையேதுக்கென்று கடைக்கணியாத வுபேக்ஷையும்; ஸத்துக்களுடன்சேர்ந்து ஸதாசார்யஸேவைபண்ணி தத்த்வார்த்தச்ரவணம்பண்ணி தத்ததீயகைங்கர்யதத்பரனாய் ஸம்ஸார நிவ்ருத்திபூர்வக ப்ராப்ய தேசப்ராப்தி லபிப்பதெப்போதோ வென்னுமாத்ம

ஆத்மகுணங்கள் நம்மாலும் பிறராலும் பிறப்பித்துக்கொள்ளவொண்ணாது, சதாசார்ய ப்ரஸாதமடியாகவருகிற பகவத்ப்ரஸாதத்தாலே பிறக்கு மத்தனையென்று துணிந்து, தேஹயாத்ரையி லுபேக்ஷையும் ஆத்மயாத்ரையிலபேக்ஷையும் ப்ராக்ருதவஸ்துக்களில் போக்யதாபுத்தி நிவ்ருத்தியும், தேஹதாரணம் பரமாத்ம ஸமாராதநஸமாப்திப்ரசாத ப்ரதிபத்தியென்கிறபுத்தி

ஜீ.—யோகம்கொண்டு கீழ்ச்சொன்ன ப்ரகாரத்திலே யோசிக்கக்கடவது; (ஆத்மகுணங்கள்) இத்யாதி. சமதமாத்யாத்மகுணங்கள் அநாதிகால மஹங்காராதிகளுக்கு விளைநிலமாய் அநாத்மகுணங்களைக் கூடுபூரித்துக்கொண்டு கர்மபரதந்த்ரராயிருக்கிற நம்முடைய யத்நத்தாலும், ஆத்மகுணோதயவிரோதிகளான வஹங்காராதிகளுக்கு வர்த்தகராய் அநாத்மகுணபரிபூர்ணராய் கர்மவச்யராயிருக்கிற பிறருடைய யத்நத்தாலும் பிறப்பித்துக்கொள்ளவொண்ணாது; ஆத்மகுணங்களுக்கெல்லாம் கொள்கலமாய் அடியிலேதன்னுடைய நிர்ஹேதுகக்ருபையாலே நம்மையங்கீகரித்தருளி நமக்காத்மகுண முண்டாவதெப்போதோவென்று பலகாலும் கரைவது பகவானை யர்த்திப்பதாய்க்கொண்டுபோரும் ஸதாசார்யனுடைய ப்ரஸாதமடியாக வருகிற நம்முடைய வாத்மகுணோதயவிரோதிபாபக்ஷயம் பண்ணி அமலங்களாகவிழிக்கும் பகவானுடைய பரிபூர்ண ப்ரஸாதத்தாலே பிறக்குமத்தனை யென்றத்யவஸித்து; (தேஹயாத்ரையி லுபேக்ஷை) யாவது - தேஹரக்ஷணார்த்தமான வ்யாபாரத்தில் விருப்பமற்றிருக்கை; (ஆத்மயாத்ரையிலபேக்ஷை) யாவது - சேஷத்வமேவடிவான வாத்மாவுக்கு தாரகாதிகளான குணாநுபவகைங்கர்ய ப்ரவ்ருத்தியில் பெற்றவளவால் த்ருப்தனாயிராதே மேன்மேலுமாசைப்படுகை; (ப்ராக்ருதவஸ்துக்களில் போக்யதாபுத்திநிவ்ருத்தி) யாவது - அசநாச்சாதநங்களுக்குறுப்பான ப்ராக்ருத பதார்த்தங்களி லாதரத்துக்கடியான போக்யத்வ புத்திதவிருகை; (தேஹதாரணம்) இத்யாதி. அதாவது - அந்த ப்ராக்ருதவஸ்துக்களில் தேஹம் தரிக்கைக்குத் தக்கவளவுபுஜிக்கை; பரமாத்மாவான ஸர்வேச்வரனுடைய ஸமாராதநத்தின் ஸமாப்திரூபையான ப்ரஸாதப்ரதிபத்தி யென்கிற புத்திவிசேஷமுமென்கை;—அன்றிக்கே (பரமாத்ம ஸமாராதநஸமாப்தி) என்கிற புத்திவிசேஷமும்,

ஆ.—யாத்ரையி லநவரதாபேக்ஷையும்; அங்கபாநீய க்ருதக்ஷீரவஸ்த்ர சந்தநகுஸுமதாம்பூலாதி ப்ராக்ருதவஸ்துக்களில் ராகத்ருஷ்ணைவர்த்தகையான போக்யதாபுத்தியின் ஸவாஸநநிவ்ருத்தியும்; ப்ராக்ருதவஸ்துக்களா லுண்டாம் தேஹதாரணம், "పరమాత్మా చ సర్వేషాం" "பரமாத்மாச ஸர்வேஷாம்" என்றந்தர்யாமியான பரமாத்மாவினுடைய ஸமாராதநத்தின் ஸமாப்தியான ப்ரஸாதப்ரதிபத்தி யென்கிற புத்திவிசேஷமும்; —, அன்றிக்கே தேஹதாரணத்தில் பரமாத்மஸமாராதநப்ரதிபத்தி தத்ஸமாப்திப்ரதிபத்தி ததீயப்ரஸாதப்ரதிபத்தி என்கிற பாகாநுகுண புத்திவிசேஷமும்; முமுக்ஷுவான தனக்கு அர்த்தபுத்ரதாரவியோகாதியானக்லேசம் நினைவறவுண்டானால் இது அநுபவவிநாச்யமான ப்ராரப்தகர்மத்தின்பலம் ஒன்றொன்றாக ப்ராப்திப்ரதிபந்தகம் கழியப்பெறாநின்றோம்; ப்ராப்திகாலமணித்தணித்தாக வாராநின்றதென்றுதல் வருந்திப் பிறக்கும் ப்ரீதியும் ஸ்வரூபநாசகர கர்வஹேதுவான விவற்றைப்போக்கி அஹங்காரத்தைத் தலைசாயப்பண்ணி ஸம்ஸாரத்தை யடியறுத்து ரக்ஷிக்கிற பகவத்க்ருபையின் பலமன்றோவிதென்றுதல் வருத்தமறப்பிறக்கும் ப்ரீதியும்;—,அன்றியே பகவத்ஸமாச்ரயணம் பண்ணின நமக்கு கேடுவருவதே யென்றத்தலையிலே குறையேறிடாதபடி இதுக்கடியாக நடுவேவொருகர்மமுண்டாகப் பெற்றோமேயென்னுமது கர்மபலப்ரீதியென்றும்;

---

விசேஷமும்தனக்கொரு க்லேசமுண்டானால் கர்மபலமென்றுதல் க்ருபாபலமென்றுதல் பிறக்கும் ப்ரீதியும்,

---

ஜீ.—(தத்ப்ரஸாதப்ரதிபத்தியென்கிற புத்திவிசேஷமும்) என்னவுமாம்; (தனக்கு)இத்யாதி. அதாவது முமுக்ஷுவாய் ப்ரபந்நனானாலும் ப்ராரப்தசரீரமிருக்குமளவும் தாபத்ரயம்வருகை தவிராதிறே, ஆகையாலே இச்சரீரத்தோடே யிருக்கிற தனக்கு தாபத்ரயங்களிலேதேனுமொரு க்லேசமுண்டானால் இது அநுபவ விநாச்யமான ப்ராரப்தகர்மபலமன்றோ, ஏவம்பூதகர்மங்களுள்ளவை கழியுமளவன்றோ, இச்சரீரத்தோடு நம்மையெம்பெருமான் வைக்கிறது ப்ராப்திப்ரதிபந்தகங்களிலே யொன்றாகிலும் கழியப்பெற்றோமேயென்கிற வநுஸந்தாநத்தாலே யாதல், துர்வாஸனையாலே யிவ்வுடம்பை விடவிசையாமல் ப்ராக்ருதபதார்த்தங்களையும் ஜீவித்துக்கொண்டு ஸம்ஸாரத்துக்குள்ளே பொருந்தியிருக்கிற நம்மை து:க்கதர்சநத்தைப் பண்ணிவித்து இதில் பற்றறுத்துக்கொண்டுபோக நினைக்கிற ஸர்வேச்வரனுடைய க்ருபையின் பலமன்றோ இதென்கிற வநுஸந்தாநத்தாலே யாதலுண்டாகக்கடவ ப்ரீதியுமென்கை. பூர்வாகம் உத்தராகம் ப்ராரப்தகண்டம் எல்லாங்கழிக்கிறவனுக்கு வர்த்தமான சரீரத்தி லநுபாவ்யகர்மமித்தனையுங் கழிக்கையரிதன்றிறே; கர்மபலமான து:க்கபரம்பரைகளை யநுபவியாநின்றாலு மித்தேஹத்தைவிடவென்றால் விசையாதவிவனை, நிர்து:க்கனாக்கிவைப்போமாகில் இச்சரீரத்தோடே நெடுங்காலமிருக்க விச்சித்தல் இன்னமொருசரீரந்தன்னை யிச்சிக்குதல் செய்யுமாகையா லிச்சரீரத்துக்குள்ளகர்ம மநுபவித்தே யிறுக்கக்கடவனென்றிறே வைக்கிறது; ஆனபின்பு மற்றுண்டான கர்மங்களெல்லாம் கழித்தது ஸம்ஸாரத்தில்நின்று மிவனைக்கடுகத்திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளுகையிலுண்டான க்ருபையாலே யானப்போலே, இத்தனையுங் கழியாமல் வைத்ததும் க்ருபையாலேயிறே; அநாதிகாலம் பரிக்ரஹித்த சரீரந்தோறு மநுபவித்தது:க்கம் பகவந்நிக்ரஹபலம், இதவனநுக்ரஹபலம் "యస్యానుగ్రహమిచ్ఛామి తస్య విత్తం హరామ్యహమ్" "யஸ்யாநுக்ரஹமிச்சாமி

ஆ.—கர்மபலபுத்தியில் சரீராவஸாநத்தளவும் ப்ராரப்த்தகர்ம மநுவர்த்திக்குமென்னும்நினைவு; க்ருபாபலபுத்தியில் பகவத்ஸமாச்ரயணவேளையிலே ஸர்வகர்மமும் நசிக்கும், ததிச்ச்சாஹேதுக சரீரவாஸநாதோஷங்களைச்சமிப்பிக்கும் க்லேசத்தையுண்டாக்குகை க்ருபாபலமென்னும் நினைவு; ப்ரபந்நத்வாநுகுணமான த்வயாநுஸந்த்தாநாதி ஸாத்த்யாந்தர்கத ஸ்வாநுஷ்ட்டாநத்தில் மோக்ஷஸாதநத்வ புத்த்தியின் ஸவாஸந நிவ்ருத்தியும்; வ்யாவ்ருத்தஜ்ஞாநபக்திவைராக்யங்களால் விலக்ஷணரான பூர்வாசார்யதத்ஸத்ருசருடைய நிர்மலசரமஜ்ஞாநாநுஷ்ட்டாநங்களில் நிரந்தரமுண்டாம் நித்யவாஞ்ச்சையும்; ஜங்கமாஜங்கமமான வுகந்தருளின நிலங்களில் பரமபதாதிகளி லதிசயித்த வாதராதிசயமும்; அவ்வுகந்தருளின நிலங்களை விரும்பும் தத்ததீயவிஷயத்தில் ஸௌகுமார்ய நிபந்த்தநமங்களாசாஸநமும்; ததிதரஹேயவிஷயங்களில் தோஷபூயஸ்த்வாப்ராப்ததத்வஹேதுக ஜுகுப்ஸாரூபையான வருசியும்; இதரவிஷய ஸக்திஹேதுவான தேஹஸ்த்திதி அடிச்சூட்டு ப்ராப்யவிளம்பாஸஹத்ருஷ்ணைவிளைந்து துடித்துக்கூப்பிடுகிற வார்த்தியும்; தத்ததீய விஷயத்தில் நீசோக்திவிநயாஞ்சலிகளால் அநுவர்த்திக்கு மநுவர்த்தநத்தை ப்ராக்ருதர்பக்கல்

---

ஸ்வாநுஷ்ட்டாநத்தில் ஸாதநத்வபுத்த்தி நிவ்ருத்தியும்; விலக்ஷணருடைய ஜ்ஞாநாநுஷ்ட்டாநங்களில் வாஞ்ச்சையும் உகந்தருளின நிலங்களி லாதராதிசயமும், மங்களாசாநஸமும், இதரவிஷயங்களிலருசியும், ஆர்த்தியும், அநுவர்த்தநநியதியும்,

---

ஜீ.—தஸ்யவித்தம் ஹராம்யஹம்" என்ருறிறே; ஆகையாலே யித்தை (க்ருபாபலம்) என்கிறது. (ஸ்வாநுஷ்ட்டாநத்தில் ஸாதநத்வபுத்த்தி நிவ்ருத்தி) யாவது - ப்ரபந்நனை தன்னுடைய வதிகாராநுகுணமாக வநுஷ்ட்டித்துக்கொண்டுபோரும் நல்லொழுக்கங்களைப் பேற்றுக்கு ஸாதநமாக நினையாதொழிகை; (விலக்ஷணருடைய ஜ்ஞாநாநுஷ்ட்டாநங்களில் வாஞ்ச்சை) யாவது நாட்டாரோடியல் வொழிந்து நாரணனை நண்ணியிருக்கையாலே, நிர்மலஜ்ஞாநபக்திகராயிருக்கும் விலக்ஷணரான பூர்வர்களுடைய விலக்ஷணமான வந்தஜ்ஞாநமும் அநுஷ்ட்டாநமும் நமக்குண்டாகவேணுமென்னுமாசை; (உகந்தருளினநிலங்களில்ாதராதிசய)மாவது - "தானுகந்த வூர்" என்கிறபடியே ஸர்வேச்வரனுகந்து வர்த்திக்கிற திவ்யதேசங்களென்ருல் "கண்டியூரரங்கம்மெய்யம்கச்சிபேர் மல்லை யென்றுமண்டினூர்"என்கிறபடியே மநஸ்ஸங்கே மண்டிவிழும்படி மேன்மேலும்பெருகுகிற வாதரம்(மங்களாசாஸந)மாவது அவ்வோ திவ்யதேசங்களை விரும்பி வர்த்திக்கிறவனுடைய ஸௌகுமார்யத்தையும் வாசியறிந்து நோக்கும்பரிவரில்லாமையையும், ப்ரதிகூலவர்கங்களினதிசயத்தையும் நினைத்தேங்கி, என் செய்யத்தேடுகிறதென்று வயிறெரிந்து இரவும்பகலும் திருப்பல்லாண்டுபாடுகை; (இதரவிஷயங்களிலருசி)யாவது - பகவத்வ்யதிரிக்தங்களான ஹேயவிஷயங்களில் தோஷதர்சநாதிகளாலே விருப்பமற்றிருக்கை; (ஆர்த்தி) யாவது - இதரவிஷய ப்ராவண்யஹேதுவான விவ்வுடம்போடே இருள்தருமாஞாலத்திலிருக்கிற விதி லடிக்கொதிப்பாலும் ப்ராப்யவைலக்ஷண்யதர்சநத்தால்வந்த ப்ராப்திவிளம்பாஸஹத்வத்தாலும் படுமக்லேசம்;(அநுவர்த்தநநியதி) யாவது - பகவத்ப்பாகவதவிஷயங்களில் ஸ்வசேஷத்வாநுகுணமாக நீசோக்தி நீசவ்ருத்திகளாலே பண்ணுமநுவர்த்தநத்தை

ஆ.—மறந்தும் செய்யாமையாகிற அநுவர்த்தநாஸ்க்கலிதநியதியும்; சிஷ்டகர்ஹிதபிம்பாதி நிஷித்தபதார்த்த நிரீக்ஷணம்பண்ணுதே ப்ராக்ருதஸ்ப்ருஷ்ட த்ருஷ்டங்களை ஸ்பர்சியாதே தத்ததீயப்ரஸாதமல்லது ஸ்வீகரியாதே போருகையாகிற பரிசுத்த்தாஹாரத்தில் அவச்யநியதியும்; ஜ்ஞாநாநுஷ்ட்டாநவர்த்தகத்வேந அநுகூலரானவைஷ்வர்களுடன் அகலில் செய்வதென்னென்றவஸ்த்தைபிறந்து நிரந்தரஸஹவாஸமும்; ஜ்ஞாநாநுஷ்ட்டாந நாசகத்வேந ப்ரதிகூலரான ஸம்ஸாரிகளோடுண்டான துஸ்ஸஹக்ஷண ஸஹவாஸத்தின் ஸவாஸந நிவ்ருத்தியும்; ஜ்ஞாநாநுஷ்ட்டாந பரிபூர்ணனுன ஸதாசார்யனுடைய வப்ரதிஹதநிரந்தரப்ரஸாதத்தாலேக்ஷணந்தோறும் கொழுந்துபட்டுவர்த்திக்கும்படி யாசார்யாநுவர்த்தநம் பண்ணிக்கொண்டு நாள்தோறும் போரக்கடவன்.

ஜநந்யாசார்யர் திருவடிகளேசரணம்.

த்விதீயப்ரகரணம் ஸம்பூர்ணம்

---

ஆஹார நியதியும், அநுகூலஸஹவாஸமும், ப்ரதிகூலஸஹவாஸ நிவ்ருத்தியும், ஸதாசார்யப்ரஸாதத்தாலே வர்த்திக்கும்படி பண்ணிக்கொண்டு போரக்கடவன்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளேசரணம்.

த்விதீயப்ரகரணம் ஸம்பூர்ணம்.

---

ஜீ'—ப்ராக்ருதவிஷயங்களில் மறந்துஞ்செய்யாதொழிகை; (ஆஹாரநியதி)யாவது-ஜாத்யாச்ரய நிமித்தாதுஷ்டங்களாய் ஸர்வேச்வரனுடையவும் ததீயருடையவும் ப்ரஸாதங்களான வஸ்துக்களையே ஆஹாரமாகக் கொள்ளுமதொழிய, ததிதரங்களானவை கொள்ளக்கடவோமல்லோமென்றிருக்கை; (அநுகூலஸஹவாஸ) மாவது - ஸ்வஸம்ஸர்கத்தாலே ஜ்ஞாநாதிகளை வர்த்திப்பியாநிற்கு மநுகூலரானவர்களுடனே க்ஷணகாலமும் பிரியாதே கூடிவர்த்திக்கை. (ப்ரதிகூலஸஹவாஸநிவ்ருத்தி) யாவது-ஸ்வஸம்ஸர்கத்தாலே ஜ்ஞாநாநுஷ்ட்டாநங்களை நசிப்பியா நிற்கும் ப்ரதிகூலரானவர்களுடன் க்ஷணகாலமும் கூடிவர்த்தியாதொழிகை; இங்குச்சொன்ன வநுகூலரும் ப்ரதிகூலரு மின்னாரென்னுமிடம் மேலேதாமே யருளிச்செய்யக்கடவரிறே. (ஸதாசார்யப்ரஸாதத்தாலே வர்த்திக்கும்படி பண்ணிக்கொண்டு போரக்கடவன்) அதாவது கீழ்ச்சொன்ன விவையித்தனையும் ஜ்ஞாநாநுஷ்ட்டாநபரிபூர்ணனுன ஸதாசார்யனுடைய ஸர்வமங்களாவஹமான ப்ரஸாதத்தாலே தன்னடையே மேன்மேலு மபிவ்ருத்தமாம்படி செய்துகொண்டு போரக்கடவனென்றபடி. ஸதாசார்யப்ரஸாதத்தாலே வர்த்திக்கும்படி இவன் பண்ணிக்கொண்டு போருகையாவது - தத்ப்ரஸாதகங்களைச் செய்துகொண்டுபோருகை; தத்ப்ரஸாதகங்களாவன இதினுடைய உபபாதகஸ்த்தலத்தி லருளிச்செய்கிறவை. (போரக்கடவன்) என்று விதிரூபேணவருளிச்செய்தது இதினுடைய அவச்யாநுஷ்ட்டேயத்வம் தோற்றுகைக்காக.

ஜீயர் திருவடிகளேசரணம்.

த்விதீயப்ரகாரணம் ஸம்பூர்ணம்.

ஆ.—கஉடு. ப்ரதமசரமகாரண மின்னதென்கிறார்மேல்; அத்த்யவஸாய ஹேதுவான வுபகாரஸ்ம்ருதிக்குமுதலடி, தன்னை யிவ்வளவாக்கினவாசார்யன்பக்கல் அவன் பகவத்விஷயத்தை ''கையிற்கனியென்னக்காட்டித்தந்த வுபகாரத்தையநுஸந்த்திக்கையாகிற க்ருதஜ்ஞதை; இந்தவுபகாரஸ்ம்ருதிக்குமுடிந்தநிலம் ஆசார்யப்ராப்திஹேதுவான 'வீச்வரன்பக்கல் இவ்வாசார்யவிஷயத்தை யுபகரித்தமையை யநுஸந்த்திக்கையாகிற க்ருதஜ்ஞதையென்கிறார். ப்ரதமோபகாரஸ்ம்ருதி உபகார்யவஸ்துவின் வைலக்ஷண்யத்தைப்பற்றிவரும் சரமோபகாரஸ்ம்ருதி யுபகார்யவஸ்துவின் கௌரவத்தைப்பற்றிவரும்; முந்துறவீச்வரவைலக்ஷண்யம் ஆசார்யைகசேஷமாயிருக்கும், முடிவிலாசார்யகௌரவமும் ததுபகாரேச்வரகௌரவமும் ஈச்வரைகசேஷமாயிருக்கும்.

கஉசு. இவ்வளவாகசிஷ்யனுடையலக்ஷணத்த்யவஸாயவைலக்ஷண்யத்தை யருளிச்செய்து, மேல் (பூர்த்தியாலே ஸ்வரூபம்ஜீவித்த தளவாக) சிஷ்யாசார்யர்களுக்குண்டாம்ஸமவ்ருத்த்யங்யோந்யவ்யாவ்ருத்திகளை யருளிச்செய்கிறார், (சிஷ்யனுமாசார்யனும்) இத்யாதியால். ஸமீசீநலக்ஷணஸம்பந்நராய் ப்ரியஹிதபரரான ஸச்சிஷ்யனும் ஸதாசார்யனும் தம்தாம் நிலைகுலைந்து அந்யோந்யம் ப்ரியஹிதங்களிரண்டையும் காதாசித்கமாக நடத்தக்கடவர்கள்.

---

கஉடு. உபகாரஸ்ம்ருதிக்கு முதலடி ஆசார்யன்பக்கல் க்ருதஜ்ஞதை; முடிந்தநில மீச்வரன்பக்கல் க்ருதஜ்ஞதை.

கஉசு. சிஷ்யனு மாசார்யனு மந்யோந்யம் ப்ரியஹிதங்களை நடத்தக்கடவர்கள்.

---

ஜீ.—கஉடு. இவ்வுபகாரஸ்ம்ருதி ப்ரஸங்கத்திலே அதினுடைய ப்ரதமசரமாவதிகளைத் தர்சிப்பிக்கிறார், (உபகாரஸ்ம்ருதிக்கு) என்றுதுடங்கி. இச்சேதநன் முந்துறவநுஸந்த்திப்பது, அஜ்ஞாதஜ்ஞாபகமுகத்தாலேதனக்ககிலத்தையு மறிவித்து பகவத்விஷயத்தைக் கைப்படுத்தினவாசார்யன் பண்ணினவுபகாரத்தையாகையாலே (உபகாரஸ்ம்ருதிக்குமுதலடி ஆசார்யன்பக்கல் க்ருதஜ்ஞதை) என்கிறது; க்ருதஜ்ஞதையு மூபகாரஸ்ம்ருதியும் பர்யாயம்; ஆசார்யகௌரவம் நெஞ்சில்படப்பட அவ்விஷயத்திலே தன்னைக்கொண்டுவந்துசேர்த்த வீச்வரன் பண்ணினக்ருஷி பரம்பரையைப் பின்னையநுஸந்த்திக்கையாலே(முடிந்தநில மீச்வரன்பக்கல் க்ருதஜ்ஞதை) என்கிறது. இதுவு மீச்வரன்பக்க லுபகாரஸ்ம்ருதியென்றபடி. இத்தால் பகவத்விஷயத்தையுபகரித்த வாசார்யன் பண்ணினவுபகாரத்தை யநுஸந்த்திக்கவிழிந்தால் அவனுடையவைபவம் நெஞ்சிலேயூற்றிருந்தவாறே, இப்படி யிருக்கிறவிஷயத்தைநாம்பெற்றதெம்பெருமானாலேயன்றோவென்று தத்க்ருதோபகாராநுஸந்த்தாநத்திலே சென்று தலைக்கட்டுமென்றதாயிற்று.

கஉசு. இந்த ஸதாசார்ய ஸச்சிஷ்யர்களுடைய பரிமாற்றமிருக்கும்படியை யருளிச்செய்கிறார் மேல், (சிஷ்யனும் ஆசார்யனும்) என்றுதுடங்கி. (அந்யோந்யம் ப்ரியஹிதங்களை நடத்துகை) யாவது - சிஷ்யனாசார்யனுக்கு ப்ரியஹிதங்களிரண்டையும் நடத்துகையும், ஆசார்யன் சிஷ்யனுக்கு ப்ரியஹிதங்களிரண்டையும் நடத்துகையும். (நடத்தக்கடவர்கள்) என்றது - இதினுடைய வவச்யகரணீயத்வம் தோற்றுகைக்காக.

ஆ.—௯உள. அதில்ப்ரியைகபரனான சிஷ்யன்சேஷியானவாசார்யனுக்குநிஷ்களங்கஸ்வஜ்ஞாநாநுஷ்ட்டாநரூபப்ரியத்தையே முடியநடத்தக்கடவன்; ஆசார்யனுக்கு ப்ராமாதிகஜ்ஞாநாதிஸ்க்காலித்யம்விக்ரஹாஸ்வாஸ்த்யமுமுண்டானபோது, எங்களாசார்யன் திருவுள்ளத்தில் திருமேனியில் நலக்கத்தைப்போக்கி யருளவேணுமென்று ஹிதைஷியான வீச்வரனைக்கொண்டு ஹிதத்தைக்காதாசித்கமாக நடத்தக்கடவன். இனி ஹிதைகபரனானவாசார்யன் சிஷ்யனுக்கு ஸ்வரூபஹானிவாராதபடி நியமித்து ஹிதத்தையேமுடிய நடத்தியும், இவனுக்கு ததீயகைங்கர்யோபயோகியாமவை அதிஸங்குசிதமானபோது இவனுக்குசிதகைங்கர்யம் நடக்கும்படி திருவுள்ளம்பற்றியருளவேணுமென்றுஈச்வரனைக்கொண்டுப்ரியத்தைக்காதாசித்கமாகநடத்தியும், இப்படி சிஷ்யனைப்போலன்றியே ப்ரியஹிதங்களை மாறாடிநடத்தக்கடவனென்று.

௯உஅ. இவர்களுக்கு நிலைநின்றவேஷத்தை யருளிச்செய்கிறார்மேல் சேஷபூதனான சிஷ்யன் சேஷியானவாசார்யனுடைய ஸ்வரூபஜ்ஞாநவிபாகமாகிறவுகப்பிலே நிரந்தரம் வேர்விழவூன்றிப்போரும்; ஹிதைஷியான

---

௯உள. சிஷ்யன் தான் ப்ரியத்தைநடத்தக்கடவன், ஈச்வரனைக் கொண்டு ஹிதத்தைநடத்தக்கடவன்; ஆசார்யன் மாறாடி நடத்தக்கடவன்

௯உஅ. சிஷ்யன் உகப்பிலே யூன்றிப்போரும்; ஆசார்யனுஜ்

---

ஜீ.—௯உள. இருவருமிரண்டையும் அந்யோந்யம் நடத்தும் க்ரமமென்னென்ன வருளிச்செய்கிறார், (சிஷ்யன்)என்றுதுடங்கி. அதாவது சிஷ்யனாசார்யனுக்கிரண்டையும் நடத்துமிடத்தில் தன் ஸ்வரூபாநுகுணமாக வாசார்யமுகோல்லாஸமே புருஷார்த்தமென்று நினைத்து தன்னுடைய கிஞ்சித்காராதிகளாலே தானாசார்யனுக்கு ஸர்வகாலமும் ப்ரியத்தை நடத்திப்போரக்கடவன்; மங்களாசாஸநபரனாகையாலே இவ்விபூதிஸ்வபாவத்தால் திருவுள்ளத்திலொருகலக்கம் வாராதொழியவேணுமென்றும், அப்படியேதேனுமொன்றுவந்தகாலத்தில்இத்தைப்போக்கித்தந்தருளவேணுமென்றும் ப்ரார்த்தித்து ஈச்வரனைக்கொண்டு ஹிதத்தை நடத்தக்கடவனென்கை; (ஆசார்யன் மாறாடி நடத்துகை) யாவது - ஹிதைகபரனாகையாலே இவனுக்கு ஸ்வரூபஹாநிவாராதபடி ஹேயோபாதேயங்களினுடைய ஹாநோபாதாநங்களில் ஸ்க்காலித்யம் பிறவாமல் நியமித்து, ஸர்வகாலமும் நல்வழி நடத்திக்கொண்டு போருகையாகிற ஹிதத்தைத் தான் நடத்தி, த்ருஷ்டத்தில் ஸங்கோசத்தாலே இவன் மிகவும் நலங்குமளவில் இருந்தநாளைக்கு இவன் நலங்காமல் இவையுமவனுக்குண்டாம்படி திருவுள்ளம் பற்றியருளவேணு மென்றர்த்தித்து, ஈச்வரனைக்கொண்டு ப்ரியத்தை நடத்தக்கடவனென்கை.

௯உஅ. இப்படி செய்துபோருமிடத்தில் இருவர்க்குமிரண்டும் ஸமப்ரதாநமாயிருக்குமோ வென்கிறசங்கையிலே யருளிச்செய்கிறார், (சிஷ்யனுகப்பிலே) என்றுதுடங்கி. அதாவது சிஷ்யன் சேஷபூதனாகையாலே சேஷியான வாசார்யனுடைய ப்ரீதியிலே யூற்றமாய்ப்போரும்; ஆசார்யன் பரமக்ருபாவானாகையாலே தன்னுடைய சிஷ்யனான விவன் ஸம்ஸார

ஆ.—வாசார்யன் நிர்மலஜ்ஞாநாத்யபிவ்ருத்த்தியாகிற ஸ்வரூபோஜ்ஜீவநத்திலே நிரந்தரம் நிச்சலனு யூன்றிப்போரும்.

ஙஉகூ. இப்படி ஆசார்யப்ரியமே நடத்திப்போருகையாலே ப்ரியபரனுனசிஷ்யன் ஹிதபரனுன வாசார்யனுடைய தன் ஜ்ஞாநாநுஷ்ட்டாநாபிவ்ருத்த்திதர்சநத்தாலே அபிவ்ருத்த்தமாம்ஹர்ஷத்துக்கு நித்யவிஷயமாகையொழிய, அப்ரியகரதர்சநநிமித்த தோஷத்துக்கு காதாசித்கவிஷயமாகைக்கும் கிஞ்சிதவகாசமில்லை யென்கிருர்.

ஙஙO. காதாசித்கமாகவரும் சிக்ஷகாசார்யநிக்ரஹத்துக்கு சிக்ஷணீயனுனவிவன் காதாசித்கமாக பாத்ரமாம்போது, அந்த ஹிதைஷியானவாசார்யநிக்ரஹம் ஸ்வரூபவிருத்த்தங்களைத்துரந்து பேணிவர்த்திக்கும்படி பண்ணி ஸ்வரூபத்தையுஜ்ஜீவிப்பிக்கும் ஹிதரூபமாகையாலே, சிக்ஷகசிக்ஷணீயரானவிருவர்க்கும் ஸ்வஸ்வாநுகுணமான வுபாதேயம்.

---

ஜீவநத்திலே யூன்றிப்போரும்.

ஙஉகூ. ஆகையால் சிஷ்ய னுசார்யனுடைய ஹர்ஷத்துக்கு இலக்காகை யொழிய ரோஷத்துக்கிலக்காகைக் கவகாசமில்லை.

ஙஙO. நிக்ரஹத்துக்கு பாத்ரமாம்போது அதுஹிதரூபமாகையாலே யிருவர்க்கு முபாதேயம்.

---

ஜீ.—துத்தீர்ணனுய் உஜ்ஜீவிக்கையிலே யூற்றமாய்ப்போருமென்கை. ஆகையால் சிஷ்யனுக்கு ப்ரியகரணமும் ஆசார்யனுக்கு ஹிதகரணமுமே ப்ரதாநமென்றுகருத்து.

ஙஉகூ. கீழ்ச்சொன்னவற்ருல் பலிக்குமத்தை யருளிச்செய்கிருர், (ஆகையாலே) என்றுதுடங்கி. அதாவது சிஷ்யனுசார்யனுடைய ப்ரியகரணமும் ஆசார்யன் சிஷ்யனுடைய ஹிதகரணமும் ப்ரதாநமாகநடத்திப்போருகையாலே, சிஷ்யனுனவிவன் ஆசார்யனுடைய ப்ரீதிக்கு விஷயமாய்ப்போருகையொழிய, அசிஷ்டகரணுதிகளாலே நிக்ரஹத்துக்கு விஷயமாகைக்கு இடந்தான் முதலிலேயில்லையென்கை ; (ஆகையாலே) என்று உகப்பிலே யூன்றிப்போருமென்று சொன்னதொன்றையு மநுவதிக்கிறதாகவுமாம்.

ஙஙO. ப்ரக்ருதிஸம்பந்தத்தோடே யிருக்கிறவனுக்கு எப்போதுமொருபடிப்பட்டிருக்குமோ, காலுஷ்யங்களுண்டாகாதோ, அதடியாக நிக்ரஹபாத்ரமாம்போது அந்தநிக்ரஹ மிரண்டுதலைக்கு மெங்ஙனேயாகக் கடவதென்னவருளிச்செய்கிருர், (நிக்ரஹத்துக்கு) என்றுதுடங்கி. அதாவது அசிஷ்டகரணுதிகளடியாக வாசார்யநிக்ரஹத்துக்கு பாத்ரமாம் தசையில், அந்த நிக்ரஹம் சிஷ்யனுனவிவனை யபதேப்ரவ்ருத்தனுகாதபடி நியமித்து நல்வழி நடத்துகைக்குறுப்பாய்க்கொண்டு ஹிதரூபமாயிருப்பதொன்ருகையாலே, இப்படிநம்மை நிக்ரஹிப்பதேயென்று இவன்நெஞ்சுளைதல் இவனை யிப்படி நிக்ரஹிக்கவேண்டுகிறதே என்ருசார்யன் நெஞ்சுளைதல் செய்கையன்றிக்கே, நிக்ரஹவிஷயமான விவனுக்கும் நிக்ரஹாச்ரயமான வாசார்யனுக்கும் அங்கீகார்யமென்கை.

ஆ.—௩௩௧. இப்படி யுபாதேயமாயிருக்கும் நிக்ரஹமென்னு, தத்காரணமு முபாதேயமாயிருக்குமோவென்ன ; ப்ரியாவஹனை சிஷ்யனுக்கு தச்சித்தகாலுஷ்யகர நிக்ரஹகாரணமான ஸ்வரூபவிருத்தவர்த்தநம், ஸவாஸநமாக த்யாஜ்யமென்கிறார்.

௩௩௨. இப்படி நிக்ரஹகாரணம் த்யாஜ்யமென்னு, ஹிதரூபநிக்ரஹம் த்யாஜ்யமாகாதென்கிறார் மேல் ; ஹிதரூபமானநிக்ரஹம் தான் "கொண்டசீற்றமொன்றுண்டு" என்று ப்ராப்யநிஷ்டப்ரியதமமான பகவந்நிக்ரஹம்போலே ப்ரார்த்தநீயமாய்க்கொண்டு அநுக்ரஹவத் ப்ராப்யாந்தர்கதமாய்க்கொண்டுஉபாதேயமாயேயிருக்கும். ஆக ப்ரியபரனை சிஷ்யன் ஹிதபரனை வாசார்யனுடைய ஹர்ஷவர்த்தகனாய்க்கொண்டுநிக்ரஹஹேதுக்களை த்யஜித்தும் ஹிதரூபநிக்ரஹத்துக்குகந்தும் போரக்கடவனென்றபடி.

௩௩௩. இப்படி ஹிதபரனைவாசார்யன் ப்ரியபரனைசிஷ்யனுடைய பரதந்த்ரமான ஸ்வரூபத்தை த்யாஜ்யோபாதேயங்களை ச்ரவிப்பித்து, த்யாகபரிக்ரஹ நிஷ்ட்டையைப்பிறப்பித்து, தத்தீய ப்ராவண்யத்தை விளைப்பித்து, நிஷ்டாநுஷ்ட்டாந விசேஷங்களைப் பிறப்பித்து ப்ராப்தி

---

௩௩௧. சிஷ்யனுக்கு நிக்ரஹகாரணம் த்யாஜ்யம்.

௩௩௨. நிக்ரஹம்தான் பகவந்நிக்ரஹம்போலே ப்ராப்யாந்தர்க்கதம்.

௩௩௩. ஆசார்யன் சிஷ்யனுடைய ஸ்வரூபத்தைப்பேணக்

---

ஜீ.—௩௩௧. நிக்ரஹமுபாதேயமாகில் நிக்ரஹகாரணமுமுபாதேயமாகாதோவென்ன, (சிஷ்யனுக்கு நிக்ரஹகாரணம்த்யாஜ்யம்) என்கிறார். அதாவது - நிக்ரஹமுபாதேயமென்று நினைத்து, மீளவும் தத்காரணத்தைச் செய்யவொண்ணாது ; யாதொருகாரணத்தாலே நீரிலேநெருப்பெழுமாபோலே தன்விஷயத்தில் குளிர்ந்துதெளிந்திருக்கிற வாசார்யஹ்ருதயத்தில் நிக்ரஹமெழுந்திருந்தது, அந்தக்காரணத்தை மறுவலிடாதபடி விடவேணுமென்கை.

௩௩௨. கீழ்ச்சொன்ன வாசார்யநிக்ரஹம் ஹிதரூபமென்று வைதமாக வுபாதேயமாமளவன்றிக்கே இவனுக்குப்ராப்யகோடிகடிதமாயிருக்குமென்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார், (நிக்ரஹம்தான்) என்றுதுடங்கி. அதாவது ஸ்வாசார்யன் ஸ்வவிஷயத்தில் ஹிதரூபேணப் பண்ணுகிற நிக்ரஹம்தான், ஸ்வவிரோதி நிவ்ருத்திக்குறுப்பாகையாலே "கொண்டசீற்றமொன்றுண்டு" "செய்யேற்றீவினை" இத்யாதிகளில் சொல்லுகிற பகவந்நிக்ரஹம்போலே புருஷார்த்தகோடியிலே யந்தர்ப்பூதமென்கை. [ஆசார்யனர்த்த காமங்களிலே நசையற்றவனுகையாலே அவைஹேதுவாகப்பொறுக்கவும் வெறுக்கவும் ப்ராப்தியில்லை ; இனியிவனுடைய ஹிதரூபமாகவெறுத்தானுகில் அதுவும் ப்ராப்யாந்தர்கதமாகக்கடவது] என்றிதுதன்னைமாணிக்யமாலையிலே ஆச்சான்பிள்ளையருளிச்செய்தாரிறே.

௩௩௩. கீழ் இருவர்க்கும்ப்ராதாந்யக்ருத்யங்களாகச்சொன்ன ஹிதகரண ப்ரியகாணங்களின்வேஷத்தை விசதமாகவருளிச்செய்கிறார், (ஆசார்யன்) என்றுதுடங்கி. அதாவது உஜ்ஜீவநபரனை வாசார்யன் உஜ்ஜிஜீவிஷுவாய்வந்து உபஸத்திபண்ணி உகப்பிலேயூன்றிப்போருகிற சிஷ்யனுடைய ஸ்வரூபத்தை, ப்ராமாதிகமாகவு மொருபழுது வாராதபடி ஏகா

ஆ.—பர்யந்தமாகப் பேணக்கடவன்; அஹங்காரவிஷய ப்ராவண்யவர்த்தகதேஹத்தைப் பேணக்கடவனல்லன் சேஷபூதனனசிஷ்யன் சேஷியான வாசார்யனுடையசுபாச்ரயமானதேஹத்தை உசிதகைங்கர்யங்களாலேபரிவுட னவச்யம்கொத்தையறப் பேணக்கடவன். சேஷபூதனை தனக்கு ஸ்வரூபஹாநியாம்படி ஆசார்யன் ஸ்வரூபத்தைதப்பேண்க்கடவனல்லன், ஆகவாசார்யனுக்கு சிஷ்யனுடைய ஸ்வரூபரக்ஷணத்திலொழிய தேஹரக்ஷணத்தில் ப்ராப்தியில்லை; சிஷ்யனுக்காசார்யன் தேஹரக்ஷணத்திலொழிய ஸ்வரூபரக்ஷணத்தில் ப்ராப்தியில்லையென்கை.

ஙஙச. இப்படி யாசார்யன் சிஷ்யஸ்வரூபத்தைதப் பேணுகையும் சிஷ்ய னுசார்யதேஹத்தைதப்பேணுகையுமாகிற விரண்டும், சேஷசேஷிகளாய்க்கொண்டு சிஷ்யாசார்யர்களான விருவர்க்கும் ஸ்வஸ்வாநுரூபஸ்வரூபமுமாய், இவர்களால்பேணப்படும் சிஷ்யஸ்வரூபமும் ஆசார்யவிக்ரஹமும் பகவத்விக்ரஹமாகையாலே பகவத்கைங்கர்யமுமாயிருக்கும். —, அன்றியே சிஷ்யனுடையஸ்வரூபத்தை பகவங்மங்களாசாஸநத்துக்குறுப்பாம்படி பேணுகையும், ஆசார்யவிக்ரஹத்தை பகவத்குணநுஸந்த்தாநாதி சக்தமாம்படி பேணுகையும், தத்கைங்கர்யமென்றுமருளிச்செய்வர்.

ஙஙரு. இப்படி ஸ்வரூபரக்ஷகனை வாசார்யனுக்கு சிஷ்யன்செய்யுமதானஸ்வதேஹரக்ஷணத்தைத்தான்செய்கை, ஸ்வதேஹோபேக்ஷகனை

கடவன்; சிஷ்ய னுசார்யனுடைய தேஹத்தைப் பேணக்கடவன்.

ஙஙச. இரண்டு மிருவர்க்கும் ஸ்வரூபமுமாய், பகவத்கைங்கர்யமுமா யிருக்கும்.

ஙஙரு. ஆசார்யனுக்கு தேஹ ரக்ஷணம் ஸ்வரூபஹாநி;

ஜீ.—க்ரசித்தனய்க்கொண்டு உபதேசாதிகளாலே நோக்கிக்கொண்டு போரக்கடவன். ப்ரியபரனனசிஷ்யன் தன்னுடைய வுஜ்ஜீவநபரனய் தன் ஸ்வரூபரக்ஷணமே பண்ணிக்கொண்டுபோருகிற வர்சார்யனுடையதிருமேனியை, உசிதகைங்கர்யங்களாலே ஸர்வகாலமு மேகாக்ரசித்தனய் நோக்கிக்கொண்டு போரக்கடவனென்கை.

ஙஙச. இப்படி யிருவரு மிரண்டையும் பேணினல் இரண்டுதலைக்கும் பலிக்குமத்தை யருளிச்செய்கிருர், (இரண்டும்) என்றுதுடங்கி. அதாவது ஆசார்யனுல் சிஷ்யனுடைய ஸ்வரூபத்தைப் பேணுகையும், சிஷ்யனு லாசார்யனுடையதேஹத்தைப் பேணுகையும் ஸ்வாஸாதாரணுகாரங்களாகையாலே, இரண்டு மிருவர்க்கும் ஸ்வரூபமுமாய், "அஹமந்நம்" "அஹமந்நம்" என்கிறபடியே அவனுக்குபோக்யமாகைக்கு யோக்யமாய் வைத்து அநாதிகாலமப்படிவிநியோகப்படப்பெறுமற்கிடந்த விவன்ஸ்வரூபம் தாத்ருசவிநியோகார்ஹமாகத்திருந்தும்படி பேணிக்கொண்டு போருகையும், "நன்கென்னுடலங்கைவிடான்" என்கிறபடியே அவனுக்குவிட்டுப்பிடிக்க ஸஹியாதபடி போக்யமாயிருக்கிற வாசார்யவிக்ரஹத்தைப் பேணிக்கொண்டு போருகையும் பகவானுக்குமிகவு முகப்பாகையாலே, இவைதான் வஸ்துகத்யா பகவத்கைங்கர்யமுமா யிருக்குமென்கை.

ஙஙரு. இப்படி வ்யவஸ்த்திதமாகவேணுமோ, ஆசார்யனுக்கு தன்னுடைய தேஹரக்ஷணத்திலும் சிஷ்யனுக்கு தன்னுடையஸ்வரூபலக்ஷணத்திலு மந்வயமுண்டானல் வருமதென்னென்ன வருளிச்செய்கிருர்,

ஆ.—தன்னுடைய விரக்த்தஸ்வரூபஹாநி; விக்ரஹரக்ஷகனை சிஷ்யனுக்கு ஆசார்யன்ரக்ஷிக்குமதான ஸ்வாத்ம ஹிதரூபரக்ஷணம் தான்செய்கை, ஸ்வாத்மாபிமாநமற்றதன் பரதந்த்ரஸ்வரூபஹாநி.

௩௩௬. ஆத்மரக்ஷகனை வாசார்யன் சிஷ்யனுடைய வாத்மாவை ரக்ஷிக்குமிடத்து நான் ரக்ஷிக்கிறேனென்கிற வஹங்காரம் தந்கிரபிமாந ரக்ஷணவிரோதி; தேஹரக்ஷகனை சிஷ்யனுக்கு தச்சேஷமான ஸ்வத்ரவ்யம்கொண்டு ஆசார்யதேஹரக்ஷணம்பண்ணுமிடத்து ஸ்வத்ரவ்யங்கொண்டுபண்ணுகிறேனென்கிற மமகாரம் சேஷத்வாநுகுண ரக்ஷண விரோதி.

௩௩௭. ஸ்வாமியானவாசார்யன் தேஹதாரணப்ரதிபத்யா பண்ணும் மஜ்ஜநாப்யவஹாராதியான தன்னுடையதேஹரக்ஷணம், சிஷ்ய னென்னதென்னும் துரபிமாநமற்று தன்னதான பரதந்த்ரசிஷ்யனுடைய பரி

---

சிஷ்யனுக்கு ஆத்மரக்ஷணம் ஸ்வரூபஹாநி.

௩௩௬. ஆசார்யனுத்மரக்ஷணம் பண்ணுமிடத்தி லஹங்காரம் விரோதி; சிஷ்யன் தேஹரக்ஷணம் பண்ணுமிடத்தில் மமகாரம்விரோதி.

௩௩௭. ஆசார்யன் தன்னுடையதேஹரக்ஷணம் தன் வஸ்துவைக்கொண்டு பண்ணக்கடவன்.

---

ஜீ.—(ஆசார்யனுக்கு) என்றுதுடங்கி அதாவது தன்னுடையதேஹயாத்ரையில்தானுபேக்ஷகனுயிருக்க, சிஷ்யனைவன் இதுவே நமக்குஸ்வரூபமென்று தன்னுடையதேஹத்தைப்பேணிக்கொண்டு போருகையொழிய, தன்னுடையதேஹத்தைத்தான் ரக்ஷிக்கையாகிறவிது ஆசார்யனுக்குஆசார்யத்வமாகிறஸ்வரூபத்துக்குஹாநி; தானுசார்யன்பக்கலிலே ந்யஸ்தபரனை பின்பு தன்ஸ்வரூபத்தை யவன்பேணிக்கொண்டுபோரக்கண்டிருக்கையொழிய, தான் தன் ஆத்மரக்ஷணம் பண்ணுகையாகிறவிது சிஷ்யனுக்கு சிஷ்யத்வமாகிறஸ்வரூபத்துக்கு ஹாநியென்கை. ஆகையால் மறந்தும் சிஷ்யனுக்கு தன்னுடைய ஸ்வரூபரக்ஷணமும் ஆசார்யனுக்கு தன்னுடைய தேஹரக்ஷணமும் கர்த்தவ்யமன்றென்றதாயிற்று.

௩௩௬. இனி ஆசார்யனும் சிஷ்யனும் தந்தாமுக்கு வ்யவஸ்த்திதங்களான வாத்மரக்ஷண தேஹரக்ஷணங்களைப் பண்ணுமிடத்தில் அவச்யம்பரிஹரணீயங்களானவிரோதிகளை யருளிச்செய்கிறார், (ஆசார்யன் ஆத்மரக்ஷணம் பண்ணுமிடத்தில்) என்றுதுடங்கி அதாவது ஹிதபரனை வாசார்யன் ஸ்வோபதேசாதிகளாலே சிஷ்யாத்மரக்ஷணம்பண்ணுமிடத்தில், நான்ரக்ஷித்துக்கொண்டு போருகிறேனென்கிற வஹங்காரம், ஆசார்யபரதந்த்ரமாகிற தன்னதிகாரவிரோதி; ப்ரியபரனை சிஷ்யன் த்ரவ்யாதிகளாலே யாசார்யதேஹரக்ஷணம் பண்ணுமிடத்தில், என்னுடைய த்ரவ்யங்களாலும் கரணங்களாலும் இப்படி ரக்ஷித்துக்கொண்டுபோருகிறேனென்கிற மமகாரம், சரீரார்த்தப்ராணாதிகளெல்லா மாசார்யசேஷமென்றிருக்கக்கடவ தன்னதிகாரவிரோதியென்கை.

௩௩௭. ஆசார்யனுக்கும் சிஷ்யனுக்கும் தந்தாமுடைய தேஹரக்ஷண தசையில் ப்ரதிபத்திவிசேஷங்களை வகுத்தருளிச்செய்கிறார்மேல், (ஆசார்யன் தன்னுடையதேஹரக்ஷணம் தன்வஸ்துவைக்கொண்டு பண்ணக்கடவன்) என்றது- "శరీరమర్థం ప్రాణంచ సద్గురుభ్యో నివేదయేత్" "சரீரமர்த்தம் ப்ராணம்ச ஸத்குருப்ப்யோநிவேதயேத்" என்கிறபடியேசிஷ்யஸர்வஸ்வமும்

ஆ.—சுத்த்தவஸ்துவைக்கொண்டு கூசாமல்பண்ணக்கடவன்;அவனென்ன தென்றபிமானிக்கும் ஹீநவஸ்துவைக்கொண்டு பண்ணக்கடவனல்லன். ஆசார்யனுக்கு ஸ்வம்மானசிஷ்யன் தேஹதாரண ப்ரதீத்யா புண்ணுக்குமருந்துபோலப்பண்ணும் ஸ்வதேஹரக்ஷணம், ஸ்வகீய மாசார்யஸ்வமென்னும் ப்ரதிபத்திமுற்றி மதீயத்வ ப்ரதிபத்திகந்த்தமற்றவாசார்யவஸ்துவான ஸ்வவஸ்துவைக்கொண்டு, அவனுடைமையைப்பாழே யிறைக்கிறோமென்னும் ப்ரதிபத்தியுடன்நிர்வேதித்தேபண்ணக்கடவன்; ஸ்வத்ரவ்யம்கொண்டு ஸ்வதேஹரக்ஷணம் பண்ணுகிறோமென்று ப்ரமிக்கக்கடவனல்லன்.

ஙஙஅ. அஹங்காரமமகாரகந்த்தஸ்பர்சம்பொருதவாசார்யன், ததுபயதூஷிதனாய் நான் என் வஸ்துவைக்கொடுக்கிறேனென்று ப்ரமித்துக்கொடுக்கும் துரபிமாநசிஷ்யனுடைய வஸ்ப்ருச்யமான ஹீநவஸ்துவை மறந்தும்கொள்ளக்கடவனல்லன்; அம்ருதத்தே விஷத்தைக்கலப்பாரைப்போலே, துரபிமாநதூஷிதனானசிஷ்யன், ஸ்வாபிமாநோச்ச்சிஷ்டநீசவஸ்துவை, ஹீநாபிமாநகந்த்தம்பொருத ம்ருதுப்ரக்ருதியான வாசார்யனுக்கு லஜ்ஜாபயமின்றிக்கே கொடுக்கக்கடவனல்லன்.

---

சிஷ்யன் ஸ்வதேஹரக்ஷணம் ஆசார்யன் வஸ்துவைக் கொண்டு பண்ணக்கடவன்.

ஙஙஅ. ஆசார்யன் சிஷ்யன் வஸ்துவைக்கொள்ளக் கடவனல்லன்; சிஷ்யன் தன்வஸ்துவைக்கொடுக்கக் கடவனல்லன்.

---

ஜீ.—அடியிலேஸமர்ப்பிதமாகையாலே, ஸ்வதேஹரக்ஷணத்துக்குறுப்பாக வவன்காலோசிதமாக கிஞ்சித்கரிக்குமிவற்றை அவனதென்னும் நினைவின்றிக்கே தன்னதென்றேவாங்கி விநியோகம்கொள்ளக்கடவனென்கை; (சிஷ்யன் ஸ்வதேஹரக்ஷணமாசார்யன் வஸ்துவைக்கொண்டு பண்ணக்கடவன்) என்றது - தனக்கோருடைமை யின்றிக்கே ஸகலமுமாசார்ய சேஷமாகையாலே, ஸ்வதேஹரக்ஷணத்துக்குறுப்பாக விநியோகம் கொள்ளுமவற்றை ஆசார்யனுடைமையென்று ப்ரதிபத்திபண்ணி விநியோகம் கொள்ளக்கடவனென்கை.

ஙஙஅ. ஆசார்யதேஹரக்ஷணத்தில் வந்தால் சிஷ்யன் தனக்குள்ளதெல்லா மங்குற்றையுடைமையென்னும் நினைவாலே கொடுக்கையும் ஆசார்யனும் தாத்ருசவஸ்துவைவாங்குகையுமொழிய, சிஷ்யனுடைய மமதாதூஷிதமானவஸ்துவை இருவரும் கொள்ளவும் கொடுக்கவும் கடவர்களல்லரென்கிறார், (ஆசார்யன் சிஷ்யன்வஸ்துவை) என்றுதுடங்கி, (சிஷ்யன்வஸ்துவைக்கொள்ளக்கடவனல்லன்) என்றது - இவன் மதீயமென்றபிமானித்திருக்கும் வஸ்துவைமறந்து மங்கீகரிக்கக்கடவனல்லனென்கை, (சிஷ்யன்தன்வஸ்துவைக்கொடுக்கக்கடவனல்லன்) என்றது - ஸ்வகீயமென்றபிமானித்திருக்கும் வஸ்துவை அஹங்காரமமகாரஸ்பர்சமுள்ளவை விஷமென்று வெருவியிருக்கும் ம்ருதுப்ரக்ருதியானவாசார்யனுக்கு விஷத்தையிடுமாபோலே ஸமர்ப்பிக்கக்கடவனல்லனென்கை.

ஆ.—ஙஙகூ. என்னதென்றபிமானிக்கும் சிஷ்யவஸ்துவை யுபேக்ஷியாதே சபலனாய் கூசாமல் கைக்கொள்ளில் உபயவிபூதிமானைப்பற்றின பூர்ணைச்வர்யமுடையதான், அல்பைச்வர்யமுமற்று மிடியனும்; நித்யதரித்ரனானசிஷ்யன், ஸ்வகீயமாகச்சிலவற்றை யபிமானித்து ஸ்வாமியானவாசார்யனுக்கு நிர்ப்பயனாய்க்கொடுக்கில், ப்ரஹ்மஸ்வாபஹாரியான கோயில் கள்ளனும்; ''குருரேவபரம்ப்ரஹ்மா''விறே.

ஙசO. தம்தாம்ஸ்வரூபஹாநிகரமான கொள்கொடையுண்டாகில், சேஷசேஷிகளானசிஷ்யாசார்ய நித்யஸம்பந்தம் மீண்டுபொருந்த வொண்ணாதபடி குலையும்;

ஙசக. ஆசார்யஸ்வம்மானசிஷ்யன் ஸ்வகீயமென்பதொன்றில்லாத பெருமிடிய னாகையாலே, ஸ்வாமியானவாசார்யனுக்கு ஒன்றையும் கொடான்; உபயவிபூத்யைச்வர்யவானான பூர்ணனாகையாலே ஆசார்

---

ஙஙகூ. கொள்ளில் மிடியனும், கொடுக்கில் கள்ளனும்.

ஙசO. கொள்கொடையுண்டானால் ஸம்பந்தம்குலையும்.

ஙசக. இவன் மிடியனாகையாலே கொடான், அவன் பூர்ண

---

ஜீ.—ஙஙகூ. அப்படி கொள்ளுதல் கொடுத்தல் வருவதென்னென்ன வருளிச்செய்கிறார், (கொள்ளில்) என்று துடங்கி. அதாவது - சிஷ்யன் என்னதென்றிருக்கும்வஸ்துவை சாபலத்தாலே ஸ்வீகரிக்கில், ஈச்வரன் அகிலபரநிர்வாஹகனாய்ப்போருகையாலே நமக்கென்னகுறையுண்டென்றிருக்கும் பூர்ணனானதான், தேஹயாத்ரைக்குங்கூட முதலற்ற தரித்திரனாய்விடும், என்னதென்றுபுத்திபண்ணி ஒன்றையாசார்யனுக்குக்கொடுக்கில் ''ஶரீரமர்த்தம்'' ''சரீரமர்த்தம்'' இத்யாதிப்படியே அடியிலேஸமர்ப்பிதமாகையாலே ததீயமாயிருக்கிறவதிலே மதீயத்வபுத்திபண்ணுகையாலே ஆசார்யஸ்வாபஹாரியாய் விடுமென்கை.

ஙசO. இவ்வளவேயன்று ஸம்பந்தஹாநியும் வருமென்கிறார், (கொள்கொடை) என்று துடங்கி. அதாவது சிஷ்யாசார்யத்வமாகிற ஸம்பந்தமுண்டானால், சேஷபூதனானசிஷ்யன் ''ஶரீரமர்த்தம்'' ''சரீரமர்த்தம்'' இத்யாதிப்படியே ஸர்வமுமங்குற்றையதென்னும் நினைவாலே ஸமர்ப்பிக்கையும், அப்படிஸமர்ப்பித்தவற்றை சேஷியானவாசார்யனங்கீகரிக்கையும் முறையாயிருக்க, இவன் தன்னதென்று அபிமானித்தவற்றை ஆசார்யன்ஸ்வீகரிக்கையும், இவனென்னதென்று அபிமானித்ததொன்றை யாசார்யனுக்கு ஸமர்ப்பிக்கையுமாகிற முறைகேடான கொள்கொடையுண்டானபோது, சிஷ்யாசார்யத்வரூபஸம்பந்தம் குலைந்துவிடுமென்கை.

ஙசக. இப்படி* தாரித்ர்யாபஹாரங்கள் வருவதும் ஸம்பந்தம்குலைவதும் கொள்கொடைதானுண்டாகிலிறே, அதுதானவர்கள் செய்யார்களென்னுமிடத்தை ஸஹேதுகமாக வருளிச்செய்கிறார், (இவன்) என்று துடங்கி. அதாவது சிஷ்யனானவிவன் ஸகலமுமாசார்யஸ்வம், நம்மதென்று ஸமர்ப்பிக்கலாவதொன்றுமில்லை, என்றிருக்கும் மிடியனாகையாலே, நாமங்குற்றைதொன்றைக் கொடுக்கிறோமென்றுகொடான்; ஆசார்யனானவன் ஈச்வரன் ஸகலபரநிர்வாஹகனாய் நடத்திக்கொண்டு போருகையாலே நமக்

---

* தாரித்ர்ய த்ரவ்யாபஹாரங்கள் என்று பாடாந்தரம்.

ஆ.—யன் இவன் துரபிமாநதூஷிதமொன்றையும் கைக்கொள்ளான்; இப்படி கொள்கொடையில்லாமை யுபயஸ்வரூபஸித்தம்.

நசஉ. இதுக்கு யோக்யதைதானுண்டாகிலிறே ஸம்பந்தம்குலைவது, என்று ஆதானதானநிவர்த்தக பூர்த்திதாரித்ர்ய பலத்தையருளிச்செய்கிறார் மேல்; ப்ராக்ருதவஸ்துக்களில் நிரபேக்ஷனானவவ்வாசார்யனுக்கு தந்நைரபேக்ஷ்யஹேதுவான பூர்த்தியாலே, ப்ராக்ருதப்ரயோஜநநிஸ்ப்ருஹத்வமே வேஷமான ஸ்வாஸாதாரணஸ்வரூப மபங்குரமாக ஜீவித்தது; ஸ்வகீயவஸ்துஸத்ப்பாவப்ரதிபத்திலேசமற்றவிக்தசிஷ்யனுக்கு ஸ்வகீயபுத்திராஹித்யஹேதுவான ததீயபுத்த்யா வந்த மிடியாலே, ஸ்வகீயயோக்யதாகந்த்தமற்ற ததீயமான ஸ்வரூபம் நசியாமல் ஜீவித்தது.

நசங. ஆக ஹிதப்ரியபரத்வாதிகளான சிஷ்யாசார்ய ஸாதாரணாஸாதாரணவ்ருத்தி விசேஷங்களை யருளிச்செய்து, மேல்சிஷ்யஸாதாரணமான ப்ரவ்ருத்திநிவ்ருத்திவிசேஷங்களை யருளிச்செய்கிறார், (ஆனால் சிஷ்யனாசார்யனுக்கு) இத்யாதியால். இப்படி நித்யதரித்ரனானால் உபகாரஸ்ம்ருதிமானானசிஷ்யன்மஹோபகாரகனானவாசார்யனுக்கு ஸ்வரூபஸித்த்யர்த்தமாகப் பண்ணுமுபகார மேதேனு மொன்றுமில்லையோவென்னில்,

நசச. ஸ்வரூபஜ்ஞனான சிஷ்யன் நினைவாலேயில்லை, க்ருதஜ்ஞனானவாசார்யன் நினைவாலேயுண்டு.

---

னுகையாலே கொள்ளான்.

நசஉ. அவனுக்குப் பூர்த்தியாலே ஸ்வரூபம் ஜீவித்தது. இவனுக்கு மிடியாலே ஸ்வரூபம்ஜீவித்தது.

நசங. ஆனால் சிஷ்யன் ஆசார்யனுக்குப்பண்ணு முபகாரம் ஒன்றுமில்லையோவென்னில்.

நசச. ஆசார்யன் நினைவாலேயுண்டு.

---

ஜீ.—கினி என்னகுறையுண்டென்றிருக்கும் பரிபூர்ணனு யிருக்கையாலே, இவனபிமாந துஷ்டமானவை யொன்றையுமங்கீகரியா னென்கை.

நசஉ. இந்தப் பூர்த்தி தாரித்ர்யங்களா லிருவருக்கும் பலித்தவற்றை யருளிச்செய்கிறார், (அவனுக்கு) என்றுதுடங்கி. அதாவது ஆசார்யனுக்கு இவனபிமாந துஷ்டமானவை யொன்றையும் கொள்ளாமைக்குடலான பூர்த்தியாலே ஆசார்யத்வமாகிற ஸ்வரூபம் ஜீவித்தது; சிஷ்யனானிவனுக்கு ஸ்வகீயத்வபுத்த்யா ஒன்றையும்ஸமர்ப்பிக்கைக்கு யோக்யதையில்லாத ஸகலமும், ததீயத்வ ப்ரதிபத்திஸித்ததாரித்ர்யத்தாலே சிஷ்யத்வமாகிற ஸ்வரூபம் ஜீவித்ததென்கை.

நசங. இனி சிஷ்யனாசார்யனுக்குப் பண்ணுமுபகார மின்னதென்றருளிச்செய்வதாக தத்விஷயப்ரச்நத்தை யநுவதிக்கிறார், (ஆனால் சிஷ்யனாசார்யனுக்குப் பண்ணுமுபகார மொன்றுமில்லையோவென்னில்) என்று அதாவது - இப்படிகொள்கொடைகளுக்கு யோக்யதையில்லை யாகிலும் உபகாரஸ்ம்ருதியுடைய சிஷ்யன் மஹோபகாரகனான வாசார்யனுக்குப் பண்ணு முபகாரமொன்று மில்லையோவென்னிலென்கை.

நசச. அதுக்குத்தரமருளிச்செய்கிறார், (ஆசார்யன்நினைவாலேயுண்டு) என்று. அதாவது ஸ்வரூபஜ்ஞனான சிஷ்யன்நினைவால் ஒருக்காலுமொன்றுமில்லை; ஸ்வக்ருஷிபலஸந்துஷ்டனான வாசார்யன்நினைவாலே யுண்டென்கை.

ஆ.— ஙசரு. அவன் நினைவாலுண்டாமுபகாரமாவது- திருமந்த்ரார்த்தமான ததீயசேஷத்வபர்யந்தஸ்வரூபஜ்ஞாநம், ததநுரூபமாய் ச்லோகார்த்தமான உபாயவ்யவஸாயம், தத்ஸித்தமாய்த்வயார்த்தமான உபேயப்ரேமமும், இந்தவுபேயநிஷ்டராய்மந்த்ரத்ரயார்த்தாநுஸந்தாதாக்களான ச்ரேஷ்ட்ட நிர்மலஸமாசாரமானவிவை, இவன்செய்யுமுபகாரமாக வாசார்யன் நினைத்திருக்குமவை யென்கிறார்.

ஙசசு. இப்படி ப்ரவ்ருத்திரூபமான வுபகாரமேயல்ல, நிவ்ருத்திரூபமான வுபகாரமுமுண்டென்கிறார் மேல், (ஆசார்யப்ரீத்யர்த்தம்) இத்யாதியால். தன்னநுஷ்ட்டாநம் கண்டுகைக்கும்பரமசேஷியானவாசார்யப்ரீத்யர்த்தமாக, தத்ப்ரீதியே புருஷார்த்தமான விந்தசிஷ்யனுக்கு ஸ்வரூபஹாநிபரிஹாரார்த்தமாக வவச்யம் தவிரவேண்டுவது; ப்ரதாநமான பகவத்ரவ்யத்தை நிர்ப்பயனுயபஹரிக்கையும்,பெருமிடறுசெய்து விரும்பியமுது செய்யும் பகவத்போஜநத்தை மிடறுபிடித்துவிலக்குகையும், "గురోరవ జ్ఞయామృత్యుః" "குரோரவஜ்ஞயாம்ருத்யு:", என்று ஸ்வரூபத்தின் மிடற்றையுருக்கும் ம்ருத்யுவானகுருபரிபவமும், "మన్త్రావజ్ఞాదరిద్రతా" "மந்த்ராவஜ்ஞாதரித்ரதா", என்னும் ஜ்ஞாநாதிஸம்பத்தினடியற்ற மிடியையுண்டாக்குமதான மந்த்ரபரிபவமும், "సయాతినరకంఘోరమ్" "ஸயாதிநரகம்கோரம்", என்று கோரநரகபதநஹேதுவானதேவதாபரிபவமுமாகிற விவையாயிற்றென்றுத்தேசித்து;

ஙசஎ. அத்தை விசதீகரிக்கிறார்மேல்; நிஷித்தகோட்யுக்தத்தைப் பற்றவும் கொடிதானபகவத்த்ரவ்யத்தை யபஹரிக்கை யாவது - தத்பரதந்த்ரனுய்வைத்து தத்ஸ்வாதந்த்ர்யத்தை யேறிட்டுக்கொள்ளுகையும், தத

சஙரு. அதாவது ஜ்ஞாந வ்யவஸாயப்ரேம ஸமாசாரங்கள்.

ஙசசு. ஆசார்ய ப்ரீத்யர்த்தமாக இவனுக்குத்தவிரவேண்டுவது பகவத்த்ரவ்யத்தை யபஹரிக்கையும்,பகவத்போஜநத்தை விலக்குகையும், குருமந்த்ரதேவதாபரிபவமும்.

ருசஎ. பகவத்த்ரவ்யாபஹாரமாவது ஸ்வாதந்த்ர்யமும் அந்யசேஷத்வமும்,பகவத்ப்போஜநத்தைவிலக்குகையாவது

ஜீ.—ஙசரு. அதேதென்ன வருளிச்செய்கிறார், (அதாவது) என்று துடங்கி. (ஜ்ஞாநவ்யவஸாய ப்ரேமசமாசாரங்க) ளாவன - ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞாநமும், ததநுரூபங்களான வுபாயாத்யவஸாயமும், உபேயப்ரேமமும், இவைமூன்றுக்கு மநுரூபமான ஸம்யக்அநுஷ்ட்டாநமும். இத்தால் திருமந்த்ரத்தில் பதத்ரயத்தாலும் ப்ரதிபாதிக்கப்படுகிறஸ்வரூபோபாய புருஷார்த்தங்களில் ஜ்ஞாநவ்யவஸாயப்ரேமங்களையும், ததநுரூபாநுஷ்ட்டாநங்களையும் சொல்லுகிறது.

ஙசசு. ஆசார்யனுக் குகப்பாகவிவன்பண்ணும் கைங்கர்யந்தான் ப்ரவ்ருத்திநிவ்ருத்திரூபமா யிருக்கையாலே. ப்ரவ்ருத்திரூபமானவற்றை யருளிச்செய்தவநந்தரம், நிவ்ருத்திரூபமானவற்றை யருளிச்செய்கிறார் மேல் (ஆசார்யப்ரீத்யர்த்தமாகவிவனுக்குத்தவிரவேண்டுவது) என்றுதுடங்கி. (பகவத் த்ரவ்யத்தை)இத்யாதியாலே அவைதன்னை யுத்தேசிக்கிறார்.

ஙசஎ. இப்படி யுத்தேசித்தவற்றின் ப்ரகாரங்களையடைவே விசதீகரிக்கிறார்மேல்,(பகவத்ரவ்யாபஹார)மாவது என்றுதுடங்கி. (பகவத்த்ரவ்யமென்கிறது) "பிறர் நன்பொருள்" என்னும்படி ஸ்ரீ கௌஸ்துபம்போலே ஈச்வரனுக்கு ஸ்ப்ருஹணீயமான வாத்மத்ரவ்யத்தை; (ஸ்வாதந்த்ர்ய)

ஆ.—நந்யார்ஹசேஷபூதனுய்வைத்து ததந்யசேஷமென்று ப்ரமிக்கையுமாகிற ஸ்வாதந்த்ர்யமும் அந்யசேஷத்வமுமென்கிறுர்;

"ஒசுஸ்" "அஹம்" என்றத்தைப்பற்றவுமினிதான பகவத்போஜநத்தைக் கையைப்பிடித்து விலக்குகையாவது-தாத்வர்த்தஸித்தமானவந்த ஸர்வரக்ஷகனுடைய நிருபாதிக ரக்ஷகத்வத்தை, ஸ்வரக்ஷணுந்வய ரூப புறங்கையாலடித்து விலக்குகை; ரக்ஷகனுக்குரக்ஷகத்வமேயிறே ஜீவநம்;

ஙசஅ. ரக்ஷணமேஜீவநமான வந்த ஸர்வரக்ஷகனுடைய ஸர்வவித ரக்ஷணக்ரமம் அந்யர் ரக்ஷகரல்ல எம்பெருமானேரக்ஷகனென்று ப்ரதிபாதிக்கிற ப்ரபந்நபரித்ராண மென்கிற திவ்யப்ரபந்தத்திலே, [ஈச்வரன் மாதாபிதாக்கள் கைவிட்ட வவஸ்த்தையிலும் "பின்னுநின்றடியேனுக்குற்ருனுய் வளர்த்து" என்கிறபடியே தன்னுருக்கெடுத்து வேற்றுருக்கொண்டுதான் முகம்காட்டி இன்சொல்சொல்லியும், என்றுதுடங்கி. இவனெல்லாருக்கும் ரக்ஷகன்] என்கிறதளவாக ஸுஸ்பஷ்டமாகச்சொன்னேம், அங்கே

---

அவனுடையரக்ஷகத்வத்தைவிலக்குகை.

ஙசஅ. அவனுடைய ரக்ஷகத்வக்ரமம் ப்ரபந்நபரித்ராணத்திலேசொன்னேம். குருபரிபவமாவது கேட்டவர்த்தத்தின்படி யநுஷ்ட்டியாதொழிகையும், அநதிகாரிகளுக்குபதேசிக்கையும். மந்த்ரபரிபவமாவது அர்த்தத்தில்

---

ஜீ.—மாவது - சேஷத்வைக நிருபணீயமானவற்றை தனக்குரித்தாக நினைத்திருக்கை; (அந்யசேஷத்வ) மாவது-பகவதேகசேஷமானவற்றை ததிதரசேஷமாக நினைத்திருக்கை; இதுதான் மாதாபித்ராதி தேவதாந்தரபர்யந்தமாயிருக்கும்; இவையிரண்டும் ப்ரதமாக்ஷரத்தில் சதுர்த்தியாலும் மத்த்யமாக்ஷரத்தாலும் கழிக்கப்படுகிறவையிறே, இதுதன்னை "[illegible] [illegible]" "கிந்தேந நக்ருதம்பாபம் சோரேணாத்மாபஹாரிணு" என்று ஸகலபாபமூலமாகச் சொல்லாநின்றதிறே;

(பகவத்போஜநம்) இத்யாதி.—ரக்ஷணத்தை பகவத்போஜநமென்கிறது ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணம் அவனுக்கு பசித்தவனுக்கூண்போலே தாரகமாயிருக்கையாலே; "மண்ணும் விண்ணுமெல்லாமுடனுண்ட" என்கிறவிடத்தில் [ரக்ஷணமவனுக்கு தாரகமாயிருக்கையாலே "உண்ட" என்கிறது, இல்லையாகில் காக்குமென்ன வமையும்] என்றிறே நம்பிள்ளை யருளிச்செய்தது; ஏவம்பூதமானவவனுடைய ரக்ஷகத்வத்தை விலக்குகையாவது - "அவ-ரக்ஷணே" என்கிறதாதுவாலே நிருபாதிக ஸர்வரக்ஷகனுகச்சொல்லப்படுகிற வவனுக்கு ரக்ஷிக்கவிடமறும்படி ஸ்வயத்நத்தாலேயாதல் பிறராலேயாதல் தன்னைரக்ஷிக்கையிலே ப்ரவ்ருத்தனுகை; இதுதான் பகவதேகரக்ஷ்யத்வ ப்ரதிபாதகமானநமஸ்ஸாலே கழிக்கப்படுகிறதிறே.

ஙசஅ. அவன் ரக்ஷித்தருளும் க்ரமம்தானென்னென்ன வருளிச்செய்கிறுர், (அவனுடைய) என்றுதுடங்கி. அதாவது ஸர்வரக்ஷகனானவவனுடைய ரக்ஷகத்வக்ரமம் ப்ரபந்நபரித்ராணமென்கிற ப்ரபந்தத்திலே விசதமாகச்சொன்னேம் அங்கேகண்டுகொள்வதென்கை. அதிலே அவனையொழிந்தாரடங்கலும் ரக்ஷகரல்லரென்னுமத்தை ப்ரதிபாதித்தவநந்தரம் [ஈச்வரன் மாதாபிதாக்கள் கைவிட்டவவஸ்த்தையிலும் "பின்னு நின்றடியேனுக் குற்ருனுய்வளர்த்து" என்கிறபடியே தன்னுருக்கெடுத்து வேற்றுருக்கொண்டு தாய் முகங்காட்டி இன்சொல் சொல்லியும், என்றுதுடங்கி,

ஆ.—கண்டுகொள்வதென்கிறார். "గురురేవపరంబ్రహ్మ" "குருரேவபரம்ப்ரஹ்ம" என்கிற வஜ்ஞாநாந்த்தகாரநிராஸக குருவிஷயத்தில் பண்ணும்பரிபவமாவது - அவனருளிச்செய்யக்கேட்ட தத்வ ரஹஸ்ய தாத்பர்யார்த்தத்தின்படியே ச்ரேஷ்ட்டஸமாசாரத்தை யநுஷ்ட்டியாதொழிகையும், கேட்டும் நாஸ்திகராய் துர்மாநிகளான வநதிகாரிகளுக்குத் தான் கேட்டதாத்பர்யார்த்தங்களைப் பாழியிலேயுகுத்துபதேசிக்கையும்;

ஸதாசார்ய னுபதேசிக்கக்கேட்ட திருமந்த்ரபரிபவமாவது-ஔதார்ய நிபந்த்தநமான வதின்யதார்த்தத்தில் விஸ்ம்ருதியும், துர்மாநித்வ நிபந்த்தநமான தத்விபரீதார்த்த ப்ரதிபத்திபண்ணுகையும்;

திருமந்த்ர ப்ரதிபாத்ய தேவதாபரிபவமாவது - "தூமலர்தூவி" "வாயினால்பாடி மனத்தினால் சிந்திக்க" என்கிற அஞ்சலிஸ்துதிமநந ஸாதநமாய்க்கொண்டுவரும் தத்கைங்கர்யோபகரணமான அந்த கரணத்ரயத்தையும், ததிதரரை "நெஞ்சினால் நினைந்தும் வாயினால் மொழிந்தும் நீதியல்லாதன செய்தும்" இப்படி அப்ராப்த விஷயங்களிலே ப்ரவணமாக்குகையும்; "மால்கொண்டசிந்தையராய் நாத்தழும்பெழ நாரணனென்று

---

விஸ்ம்ருதியும், விபரீதார்த்த ப்ரதிபத்தியும். தேவதாபரிபவமாவது - கரணத்ரயத்தையு மப்ராப்தவிஷயங்களிலே ப்ரவணமாக்குகையும், தத்விஷயத்தில் ப்ரவணமாக்காதொழிகையும்.

---

ஜீ.—இவனேயெல்லார்க்கும் ரக்ஷகன்] என்கிறதளவாக வவனுடையரக்ஷகத்வக்ரமத்தை ஸுவ்யக்தமாக வருளிச்செய்தாரிறே; (குருபரிபவம்) இத்யாதி (கேட்டவர்த்தத்தின்படி யநுஷ்ட்டியாதொழிகை) யாவது-ஸ்வோஜ்ஜீவநார்த்தமாக வவனருளிச்செய்யக்கேட்ட த்யாஜ்யோபாதேயரூபமான வர்த்தவிசேஷங்களுக்குத் தகுதியாயிருந்துள்ள த்யாகஸ்வீகாரரூபமான வநுஷ்ட்டாநத்தைப் பண்ணாதொழிகை; (அநதிகாரிகளுக்குபதேசிக்கை) யாவது - தனக்குத்தஞ்சமாக வவனுபதேசித்த ஸாரார்த்தங்களை நாஸ்திக்யாதிகளாலே இதுக்கநிகாரிக ளல்லாதவர்களுக்குக்க்யாதிலாபாதிகளை நச்சியுபதேசிக்கை;

(மந்த்ரபரிபவம்) இத்யாதி. (அர்த்தத்தில் விஸ்ம்ருதி) யாவது - ஆசார்யன் அந்தமந்த்ரத்துக்கருளிச்செய்த யதார்த்தங்களைப் பலகாலுமநுஸந்த்தித்து நோக்கிக்கொண்டு போருகையன்றிக்கே ஔதாஸீந்யத்தாலே மறந்துவிடுகை; (விபரீதார்த்த ப்ரதிபத்தி) யாவது - ஆசார்யனருளிச்செய்த ப்ரகாரமன்றிக்கே மந்த்ரத்துக்கு விபரீதமாயிருக்குமர்த்தங்களை இதுக்கர்த்தமென்று ப்ராந்தியாலே ப்ரபத்திபண்ணியிருக்கை;

(தேவதாபரிபவம்) இத்யாதி. (கரணத்ரயத்தையு மப்ராப்தவிஷயங்களிலே ப்ரவணமாக்குகை) யாவது - "విచిత్రాదేహసంపత్తిరీశ్వరాయ నివేదితుమ్" "விசித்ராதேஹஸம்பத்திரீச்வராயநிவேதிதும்" "மாயவன்தன்னை வணங்கவைத்த கரணமிவை" என்கிறபடியே பகவத்பரிசர்யார்த்தமாக ஸ்ருஷ்டங்களாய் உன்சின்னமும் திருமூர்த்தியும் சிந்தித்தேத்திக்கைதொழவே" என்கிறபடியே அவனை நினைக்கைக்கும் ஸ்துதிக்கைக்கும் வணங்குகைக்கு முறுப்பான மநோவாக்காயங்களை, ஸ்வரூபப்ராப்த மல்லாத ஹேயவிஷயங்களிலே மேட்டில் நீர் பள்ளத்திலே விழுமாபோலேப்ரவணமாம்படிபண்ணுகை; (தத்விஷயத்தில் ப்ரவணமாக்காதொழிகை)யாவது- "மால்கொண்டசிந்தையராய்" "நாத்தழும்பெழ நாரணனென்றழைத்து

ஆ.—அழைத்து மெய்தழும்பத்தொழுது" இப்படி ஸ்வரூபப்ராப்தமுமாய் நிரதிசயபோக்யமுமான விலக்ஷணதத்விஷயத்தில் மீட்கவொண்ணுதபடி ப்ரவணமாக்காதொழிகையும்.

ங௬சக. ஆக ஸதாசார்யப்ரீத்யர்த்தமாக ஸச்சிஷ்யனுடைய கர்த்தவ்யாகர்த்தவ்யங்களை யருளிச்செய்து, யாவந்மோக்ஷமிவனுக்கு ஆசார்யவிஷயத்தி லுண்டாகவேண்டுவதான வுபகாரஸ்ம்ருதிவிசேஷத்தை யருளிச்செய்கிறுர் மேல், (இவனுக்கு சரீராவஸாநத்தளவும்) இத்யாதியால். ஆசார்யநிஷ்டாநிஷ்டமே தனக்கிஷ்டாநிஷ்டமாம்படி பரிபாகம் பிறந்த விந்த சிஷ்யனுக்கு, ஆசார்யஸமாச்ரயணத்திலே உருமாய்ந்து போக விரோதிஸ்மரண மநுவர்த்திக்கும் சரீராவஸாநத்தளவும், என்னுடைய துஷ்டமானமநஸ்ஸை விநஷ்டமாக்கினுய், அநந்யப்ரயோஜநமாக வநுகூலவ்ருத்தியைப்பண்ணும் நல்லமநஸ்ஸைத்தந்தாய், என்றுசார்யன் செய்த வுபகாரஸ்ம்ருதி யொழியாமல் நடக்கவேணும். அங்குப் போனுல் "గోపజనంస్మరన్నిదం" "கோபஜநம் ஸ்மரந்நிதம்" என்று ஸம்ஸாரஸ்ம்ருதிலேசம் கூடாமையால், "தீமனங்கெடுத்தாய்" என்று விரோதிஸ்மரணஹேதுவான வுபகாரஸ்ம்ருதிகூடாது; "பிரானிருந்தமைகாட்டினீர்" என்று ப்ராப்யாநுபவ ஜநிதோபகாரஸ்ம்ருதியளவிறே யங்குகூடுவது; முமுக்ஷுதசையில் நிவர்த்யவிரோதி ஸ்மரணம் நடக்கும், முக்ததசையில் நிவ்ருத்தஸர்வ விரோதிஸ்மரணம்கூடாது; "மருவித்தொழும் மநமேதந்தாய்" என்கிறமோக்ஷஹேதுவான நெஞ்சின்ஆநுகூல்யாகாரம் ததீயத்வாகாரேணவங்கும் ஸ்ம்ருதிவிஷயமாயிருக்க, அத்தையும் சரீராவஸாநத்தளவிலே யொதுக்கினது அதின் பந்த்தஹேதுவான ப்ராதிகூல்யாகாரப்ரதியோகியான வாநுகூல்யாகாரஸ்மரணம் சரீராவஸாநத்துக்கு மேல் கூடாதென்னுமத்தைப் பற்ற; கேவலததீயத்வாகாரேண வுண்டான வாநுகூல்யாகாரமிறே யங்குப்ராகாசிப்பது.

---

ங௬சக. இவனுக்கு சரீராவஸாநத்தளவும்ஆசார்யவிஷயத்தில் "என்னைத்தீமனம்கெடுத்தாய்" "மருவித்தொழும் மனமேதந்தாய்" என்றுபகாரஸ்ம்ருதி நடக்கவேணும்.

---

ஜீ.—மெய்தழும்பத்தொழு தேத்தி" இத்யாதிகளில் சொல்லுகிறபடியே ஸ்வரூபப்ராப்தமான வவ்விஷயத்தில் மண்டிவிழும்படிபண்ணுவியாதொழிகை. ஆக "మన్త్రేతద్దేవతాయాంచ తథామన్త్రప్రదేగురౌ । త్రిషుభక్తిస్సదాకార్యా" "மந்த்ரேதத்தேவதாயாம்ச ததாமந்த்ரப்ரதேகுரௌ । த்ரிஷுபக்திஸ்ஸதாகார்யா" என்றும், "మన్త్రనాథంగురుంమన్త్రం సమత్వేనానుభావయేత్" "மந்த்ரநாதம்குரும்மந்த்ரம் ஸமத்வேநாநுபாவயேத்" என்றும் பூஜ்யமாகச்சொல்லப்படுகிற விம்மூன்று விஷயத்தையும் பரிபவிக்கையாவதிவையாயிற்று.

ங௬சக. ஆக விப்படி யாசார்யப்ரீத்யர்த்தமாகச் செய்யவேண்டுமவையும் தவிரவேண்டுமவையு மருளிச்செய்தாராய் நின்றுர்கீழ்; இன்னமு மிவனுக்கபேக்ஷிதமா யிருப்பதொன்றை யருளிச்செய்கிறுர் மேல், (இவனுக்கு) என்றுதுடங்கி. அதாவது இவ்வதிகாரிக்குச் சரீரத்தோடிருக்கும் காலமித்தனையும் மஹோபகாரகனுன வாசார்யன்பக்கல் என்னுடைய தீயமநஸ்ஸைப்போக்கினுய், அநந்யப்ரயோஜநமாக வநுகூலவ்ருத்திகளைப்பண்ணும் மநஸ்ஸைத்தந்தாய், என்று உபகாரஸ்ம்ருதி யநுவர்த்திக்கவேணுமென்கை.

ஆ.—ருடு௦. அவன் கெடுத்தமநஸ்ஸின் தீமையைவிவரிக்கிறார்மேல், மநநஸாதநமான மநஸ்ஸுக்கு பகவந்நிவர்த்திதமான தீமையாவது- தனக்குண்டாய்வருகிற சமதமாத்யாத்மகுணத்தையும், தோஷயோக்யதாஸ்பர்சமற்ற பகவத்பாகவத விஷயங்களிலே இல்லாத தோஷங்களையும், அஹங்கார்ராபசாரங்க ளபிவ்ருத்தமாம்படி நினைக்கை.

ருடுக. தத்ததிய மித்யாப்ரதீதிதோஷம் நினையாதொழிகிறதும்; தனக்குள்ளசமதமாதிகுணங்களையில்லையென்று நினைக்குமாபோலே அவர்களுக்குண்டாயிருக்க இல்லையென்று மறைத்துநினையாதொழிகிறதன்று;

---

ருடு௦. மநஸ்ஸுக்குத்தீமையாவது ஸ்வகுணத்தையும், பகவத்ப்பாகவததோஷத்தையும் நினைக்கை.

ருடுக. தோஷம் நினையாதொழிகிறது குணம்போலே

---

ஜீ.—ருடு௦. மநஸ்ஸுக்குத் தீமையாவதேதென்னுமாகாங்க்ஷயிலேயருளிச்செய்கிறார்மேல், (மநஸ்ஸுக்கு)என்றுதுடங்கி. (ஸ்வகுணத்தை நினைக்கை) யாவது - சமதமாத்யாத்மகுணங்கள் தனக்குண்டானாலும் "நிறையொன்றுமிலேன்" "நலந்தானொன்றுமிலேன்" என்கிறபடியே நமக்கோராத்மகுணமுமில்லையென்று தன் வெறுமையை யநுஸந்திக்க வேண்டியிருக்க, இவையெல்லாம் நமக்கிப்போதுண்டென்றுதனக்குண்டான ஸத்குணங்களைப் போரப்பொலியநினைக்கை; பகவானுடையதோஷத்தை நினைக்கையாவது - தனக்கு பரதந்த்ரமான விவ்வாத்மவஸ்துவை தன்னுபேக்ஷயாலே அநாதிகாலம் கர்மத்தை வ்யாஜமாக்கிக் கைவிட்டிருந்தவன், அவ்வளவுமன்றிக்கே நிர்த்தயரைப்போலே யதாகர்மபலதாயியாய் நிரயங்களிலே தள்ளியறுத்தறுத்துத் தீர்த்துமவன் கைக்கொண்டாலும், நிரங்குசஸ்வதந்த்ரனாகையாலே இன்னபோதின்னபடி செய்யுமென்று விச்வஸிக்கவொண்ணாதவன் என்றாற்போலவும், க்ருஷ்ணாவதாரத்தில் ஸ்வைரவிஹாரங்களையிட்டு தர்மஸம்ஸ்த்தாபநம் பண்ணப்பிறந்தவனுக்கு இங்ஙன்செய்கை முறைமையாயிருந்ததில்லையோ என்றாற்போலவும் நினைக்கை; அல்லது ஸமஸ்தகல்யாணகுணாத்மகமான விஷயத்தில் நினைக்கலாவதொரு தோஷமில்லையிறே; இனி (பாகவததோஷத்தை நினைக்கை) யாவது- திருமேனியோடே யிருக்கையாலே மேலெழத்தோற்றுகிற வாகாரங்களையிட்டு ப்ரக்ருதிவச்யர் அஹங்காரக்ரஸ்தரென்றாற்போலே நினைக்கை; ஆகவிது (ஸ்வகுணத்தையும் பகவத்ப்பாகவத தோஷத்தையும் நினைக்கை) யாவது.

ருடுக. ஆனால் தனக்குச்சிலகுணமுண்டாயிருக்கஅதுநினைக்கலாகாதென்கிறாற்போலே, அத்தலைக்கும்சிலதோஷமுண்டாயிருக்க நினைக்கலாகாதென்கிறதோவென்ன வருளிச்செய்கிறார், (தோஷம்நினையாதொழிகிறது) என்றுதுடங்கி. அதாவது பகவத்ப்பாகவதவிஷயங்களில் தோஷம் நினையாதொழிகிறது தனக்கு குணமுண்டாயிருக்க வதுநினையாதொழிகிறாற்போலே, உண்டாயிருக்க நினையாதொழிகிறதன்று; முதலிலே இவ்விஷயங்களில் அதில்லாமையாலேயென்கை. எங்ஙனேயென்னில் ஸர்வமுக்திப்ரஸங்கம் வாராதபடி தானிட்டகட்டளையிலே யங்கீகரிக்கைக்காக "ஒன்றியொன்றியுலகம்படைத்தான்" என்றும், "எதிர்சூழல்புக்கு" என்றும் சொல்லுகிறபடியே ஸகலாத்மாக்களுடைய வுஜ்ஜீவநத்துக்கு ஸ்ருஷ்ட்யவதாராதிகளாலே க்ருஷிபண்ணிக்கொண்டுபோருகையாலே, அநாதிகாலமுபேக்ஷகனாய் கைவிட்டிருந்தானென்னவொண்ணாது; நிர்த்

ஆ.—அவர்கள்பக்கல்தோஷ ஸத்ப்பாவ ஸ்பர்சந்தானில்லாமையாலே இல்லையென்றுநினைக்கிறவித்தனை—, அன்றியே அவர்கள்பக்கல்தோஷம்நினையா தொழிகிறது தனக்குதோஷம் போவதற்குமுன்பு அவர்கள்பக்கலுண்டானகுணங்கள் நினையாதாப்போலே, இப்போதுண்டான தோஷங்களை நினையாதொழிகிறானன்று ; இல்லாமையாலே நினையாதொழிகிறானென்று மருளிச்செய்வர்கள்.—, அவர்களுக்கு தோஷகுணங்க ளிரண்டுமுண்டாய் அதில் தோஷத்தை நினையாதொழிகிறானென்று மருளிச்செய்வர்கள்.

௩௫௨. இப்படி நிர்த்தோஷரானவர்கள் பக்கலிலே இல்லாததோஷமுண்டென்று ப்ரமித்துநினைக்கில், அவர்கள்பக்கல் தோன்றுகிறதோஷம், நிர்த்தோஷதையில் முக்க்யரானவர்கள் தோஷமன்று ; தோஷதர்சநம் பண்ணுகிற ஸ்வதோஷமத்தனை. "పరన్దూరాన్యముఖ్యేషు" "பரம்தூராக்ய முக்க்யேஷு" விறே.

---

யுண்டா யிருக்கவன்று ; இல்லாமையாலே.

௩௫௨. தோஷமுண்டென்று நினைக்கிலது பரதோஷமன்று, ஸ்வதோஷம்.

---

ஜீ.—தயரைப்போலே கர்மாநுகுணமாகத் தண்டிக்கிறதும் மண்தின்னப்ரஜையைநாக்கிலேகுறியிட்டஞ்சப்பண்ணும்மாதாவைப்போலேஹிதபரனுய்ச் செய்கையாலே யுஜ்ஜீவநத்துக்குடலாமித்தனை ; நிரங்குசஸ்வாதந்த்ர்யம் பூர்வம் பந்த்தஹேதுவாய்ப்போந்ததேயாகிலும் க்ருபாபரதந்த்ரனு யங்கீகரித்தபின்பு, நித்யஸம்ஸாரியை நித்யஸூரிகளோடு ஸமாநபோகபாகியாக்குமளவில் நிவாரகரறச்செய்கைக்குறுப்பா மித்தனையாகையாலே ச்லாக்க்யமாமித்தனை. க்ருஷ்ணவதாரத்தில் ஸ்வைரவிஹாரம் "యది మే బ్రహ్మచర్యం స్యాత్" "யதிமேப்ரஹ்மசர்யம்ஸ்யாத்" என்கிறபடியே தனக்கிந்தபோகத்தி லொட்டில்லாமையை வெளியிடுகைக்காகவும், "గోప్యః కామాత్" "கோப்ய꞉காமாத்" என்கிறபடியே அவ்வழியாலே யவர்களைத்தன்பக்கல் ப்ரவணராக்கி யுத்த்தரிப்பிக்கைக்காகவும் செய்ததாகையாலே குணமித்தனையல்லது குற்றமன்று. இனி பாகவதர்களும் "குற்றமின்றிக்குணம்பெருக்கி" என்கிறபடியே நிர்த்தோஷராய் நிரவதிககுணராயிருக்கையாலே உள்ளூறவாராய்ந்துபார்த்தால் அவர்கள் பக்கலிலும் காணலாவதொரு தோஷமில்லையிறே. மற்று மிப்புடைகளிலே பகவத்ப்பாகவதவிஷயங்களில் தோஷங்கள் தோற்றித்தாகில் பரிஹாரங்கள் கண்டுகொள்வது. இவையெல்லாம் திருவுள்ளம்பற்றியாயிற்று (இல்லாமையாலே) என்றிவரருளிச்செய்தது.

௩௫௨. (தோஷமில்லை) என்று ஸ்வபக்ஷத்தாலே ஸாதித்தார்கீழ்; இனி பரபக்ஷத்தாலே தோஷஸத்ப்பாவத்தை யங்கீகரித்துக்கொண்டு தத்பரிஹாரத்தை யருளிச்செய்கிறார் மேல், (தோஷமுண்டு) என்று துடங்கி. அதாவது கீழ்ச்சொன்னபடியன்றிக்கே பகவத்ப்பாகவதவிஷயங்களில் தோஷமுண்டென்று நினைக்கில் அவர்கள்பக்கல் தனக்குத்தோற்றுகிறதோஷம் அவர்கள் தோஷமன்று ; தத்ரஷ்டாவான தன்னுடைய தோஷமென்கை.

ஆ.—ருநு. பரதோஷம் ஸ்வதோஷமானபடி யென்னென்னில் என்று ப்ரச்நம்பண்ணி ;

நருச. அவர்கள்பக்கலில்லாத தோஷங்களைக்காண்கிற ஸ்வசித்த தோஷத்தாலும், அவர்களுக்குண்டானதோஷம் தன்னதாம்படி அவர்களுடன் தனக்குண்டான பந்தவிசேஷத்தாலுமென் றுத்தரமருளிச்செய்கிறார், த்விசந்த்ரதர்சநமூலம் ஸ்வதோஷமானாப்போலவும், மாத்ருதோஷம் புத்ரனதாமாபோலவும், இங்குதத்தோஷதர்சநம் ஸ்வதோஷமாய் விடுமிறே.

நருரு. இவன் த்ருஷ்டிதோஷமற்றபோது சந்த்ரைகத்வமேதோற்றுமாபோலே, தத்தோஷதர்சநமூலமான ஸ்வதோஷமில்லையாகில், ஸ்வநிர்த்தோஷத்வஸூசகையான தத்குணப்ரதிபத்தி, தோஷப்ரதிபத்தி கலசாதபடி 'முடியநடக்கும்'

நருசு. நிர்த்தோஷகுணபூர்ண தத்ததீயர்பக்கல் குணப்ரதிபத்தி நடந்ததில்லையாகில், தத்தோஷக்ரஹண ரூபதோஷஜ்ஞானமே மஹாபாத

---

நருரு, ஸ்வதோஷமானபடி யென்னென்னில்.
நருச, ஸ்வதோஷத்தாலும் பந்தத்தாலும்.
நருரு. ஸ்வதோஷமில்லையாகில் குணப்ரதிபத்திநடக்கும்.
நருசு. நடந்ததில்லையாகில் தோஷஜ்ஞானமே

---

ஜீ.—நருரு. அது ஸ்வதோஷமானபடியை ஸாதிக்கைக்காக தத்விஷயப்ரச்நத்தை யநுவதிக்கிறார், (ஸ்வதோஷமானபடி யென்னென்னில்) என்று. ப்ரக்ருதமாய்த்தோற்றுகிற வது ஸ்வதோஷமானபடி யெங்ஙனே யென்னி லென்றபடி.

நருச. அதுக்குத்தர மருளிச்செய்கிறார், (ஸ்வதோஷத்தாலும்) இத்யாதியாலே. அதாவது காசாதிதுஷ்டத்ருஷ்டிமானுக்கு சந்த்ரத்வித்வாதிகள் தோற்றுமாபோலே, நிர்த்தோஷமான விஷயங்களிலே தோஷம்தோன்றும்படியான துர்வாஸநாதுஷ்டசித்ததையாகிற ஸ்வதோஷத்தாலும், புத்ராதிகள்தோஷம் பித்ராதிகளதாமாபோலே அவர்களுக்குண்டானதோஷம் தன்னதாம்படி அவர்களோடு தனக்குண்டான பந்தவிசேஷத்தாலுமென்கை. (ஸ்வதோஷத்தாலும்) என்கிறவிது அத்தலையில் தோஷாபாவத்தைப்பற்றிச் சொல்லுகிறது ; மற்றையது தோஷவத்தையை யங்கீகரித்துக்கொண்டு சொல்லுகிறது.

நருரு. (ஸ்வதோஷத்தாலே) என்னலாவது தோஷம்தானுண்டானாலன்றோவென்ன வருளிச்செய்கிறார், (தோஷமில்லையாகில்) என்று துடங்கி. அதாவது சந்த்ரத்வித்வதர்சநஹேதுவான சக்ஷுர்தோஷமில்லாதபோது சந்த்ரைகத்வமே தோற்றுமாபோலே, தோஷதர்சநஹேதுவான ஸ்வசித்ததோஷமில்லாதபோது, பகவத்பாகவதவிஷயங்களில் குணப்ரதிபத்தியே நடக்குமென்கை. அது நடவாமையால் தோஷமுண்டென்று கொள்ளவேணுமென்று கருத்து.

நருசு. நடந்ததில்லையாகில் வரும்தோஷமென்னென்ன வருளிச்செய்கிறார், (நடந்ததில்லையாகில்) என்றுதுடங்கி. அதாவது குணப்ரதிபத்தி நடவாதொழிந்தால் தோஷப்ரதிபத்தியிறே நடப்பது ; அந்ததோஷஜ்ஞானம் தானே இவனுக்கு பகவந்நிக்ரஹஹேதுவான தோஷமாம். இதடி

ஆ.—காதிதோஷங்களைப்பற்றவும் மஹாதோஷமாம்; அத்தால் வருமதொருதோஷாந்தரமுண்டென்னவேண்டா.

ஙடுஎ. இத்தோஷதர்சநத்துக்கு விசேஷிப்பதோரவஸரமில்லை.

ஙடுஅ. அதெத்தாலேயென்ன "நீசனேன் நிறையொன்றுமிலேன்" இத்யாதிஸ்வதோஷாநுஸந்த்தாநத்துக்கும், அந்ததோஷமேபச்சையாக "என்னையாள்வாய்" "எம்மையாளும்பரமர்" என்றங்கீகரித்தடிமைகொள்ளுகிற பகவத்பாகவதகுணாநுஸந்த்தாநத்துக்கும் மேலுள்ளகால

---

தோஷமாம்.

ஙடுஎ. இது தனக்கவஸரமில்லை.

ஙடுஅ. ஸ்வதோஷத்துக்கும்.பகவத்பாகவதகுணங்களுக்குமே

---

ஜீ.—யாக வேறொருதோஷமுண்டா மென்னவேண்டாவென்கை. இத்தாலிதவச்யம் பரிஹரணீய மென்னுமிடம் சொல்லிற்றாயிற்று.

ஙடுஎ. இதுதா னெல்லாம் சொல்லவேண்டுவது இது தனக்கவகாசமிவனுக்குண்டானாலிறே யென்கிறார் மேல், (இதுதனக்கவஸரமில்லை) என்று. அதாவது பகவத்பாகவததோஷசிந்தநமாகிறவிது தனக்கு அவஸரந்தா னிவனுக்குமுதலிலே யில்லையென்கை.

ஙடுஅ. அதெத்தாலேயென்ன வருளிச்செய்கிறார், (ஸ்வதோஷத்துக்கும்) என்றுதுடங்கி. அதாவது (நீசனேன்நிறையொன்று மிலேன்) "பொய்ந்நின்றஞாநமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்பு மிந்நின்றநீர்மை" "అమర్యాదఃక్షుద్రః" "విద్వేషమానమదరాగవిలోభమోహాద్యజ్ఞానభూమిః" "అతిక్రామన్నాజ్ఞాన్తవవిధినిషేధేషు భవతేప్యభిద్రుహ్యన్నాగ్ధీకృతిభిరపి భక్తాయసతతమ్ । అజానన్ జానన్నాభవదసహనీయాగసిరతః" "శ్రీరఙ్గేశత్వద్గుణానామివాస్మద్దోషాణాంకః పారదృశ్వాయతోహమ్" "அமர்யாதஃக்ஷுத்ரஃ" "வித்வேஷமாநமதராகவிலோபமோஹாத்யஜ்ஞாநபூமிஃ" "அதிக்ராமந்நாஜ்ஞாந்தவவிதிநிஷேதேஷு பவதேப்யபித்ருஹ்யந்வாக்த்தீக்ருதிபிரபி பக்தாயஸததம் । அஜாநந்ஜாநந்வாபவதஸஹநீயாகஸிரதஃ" "ஸ்ரீரங்கேசத்வத்குணாநாமிவாஸ்மத் தோஷாணுங்கஃ பாரத்ருச்வாயதோஹம்" இத்யாதிகளில் சொல்லுகிறபடியே அநவதிகமானதன்னுடைய தோஷாநுஸந்த்தாநத்துக்கும்; அந்ததோஷத்தைப் பாராம லங்கீகரித்தருளின பகவானுடையவும் "வேதம்வல்லார்களைக்கொண்டு" என்றும் "బోధయన్తఃపరస్పరమ్" "போதயந்தஃபரஸ்பரம்" என்றும் "அவனடியார் சிறுமாமநிசராயென்னையாண்டாரிங்கே திரியநுமா விரைநாண்மலரடிக்கீழ்ப்புகுதல்-உறுமோ" என்றும்சொல்லுகிறபடியே புருஷகாரமுமுசாத்துணையும் ப்ராப்யருமான பாகவதர்களுடையவும், "సమస్తకల్యాణగుణామృతోదధిః" "అసఙ్ఖ్యేయకల్యాణగుణగణౌఘమహార్ణవ" "యథారత్నానిజలధేరసఙ్ఖ్యేయానిపుత్రక । తథాగుణాహ్యనన్తస్య అసఙ్ఖ్యేయామహాత్మనః" "నాహంసమర్థోభగవత్ప్రియాణాం వక్తుంగుణాన్ పద్మభువోప్యగమ్యాన్" "ஸமஸ்தகல்யாண குணாம்ருதோததிஃ" "அஸங்க்க்யேயகல்யாணகுணகணௌகமஹார்ணவ" "யதாரத்நாநிஜலதேரஸங்க்க்யேயாநிபுத்ரக । ததாகுணாஹ்யநந்தஸ்ய அஸங்க்க்யேயாமஹாத்மநஃ" "நாஹம்ஸமர்த்தோபகவத்ப்ரியாணாம் வக்தும்குணாந்பத்மபுவோப்யகம்யாந்" என்றும் சொல்லுகிறபடியே அஸங்க்க்யேயமாயிருந்துள்ளகுணாநுஸந்த்தாநங்களுக்குமேகாலம்போந்து மற்றொன்றுக் கவகாசமில்லாமையாலே யென்கை (இவற்றுக்கேகாலம்

ஆ,—மெல்லாம்போந்து, தோஷதர்சநத்துக்கு சேஷிக்கும் காலகலைக தேசமுமில்லாமையாலே யென்கிறார்.

௩டுகூ. இப்படி தத்ததீயரி லில்லாததோஷங்களையன்றோ நினைக்க லாகாது, ஸம்ஸாரிகளுடைய வுள்ளதோஷங்களை நினைக்கலாமேயென்ன; அநாதிகாலமேபிடித்து நாம்பட்டதுபட்டுத் திரிகிற ஸம்ஸாரிகளுக்குண் டாம் தோஷம், அவர்களைத்துறக்க விரகற்ற நம்முடையதோஷமென்றி ருக்கக்கடவ னென்கிறார்.

௩சூ௦. அதுக்கு ஹேதுவென்னென்ன, தத்தோஷம் ஸ்வதோஷ மென்றிருக்கிறவதுக்கும் ஹேது நாராயணத்வ ப்ரயுக்த ஸம்பந்தஜ்ஞா நம். ஏகசரீரத்தில்பற்றின வேகதேசத்வக்தோஷமவ்வளவுக்கே தோ ஷமாயிராதிறே, "[illegible]" "தாநிஸர்வாணிதத்வபுః" என்று ஸர்வமுமவன் சரீரமிறே.

---

காலம்போருகையாலே.

௩டுகூ. ஸம்ஸாரிகள்தோஷம் ஸ்வதோஷமென்று நினைக்கக் கடவன்.

௩சூ௦. அதுக்குஹேது பந்தஜ்ஞாநம்.

---

ஜீ.—போருகையாலே) என்கையாலே ஸ்வகுணஸ்மரணத்துக்கவகாசமில் லையென்னுமிடமு மர்த்தாத்ஸித்தமிறே.

௩டுகூ. ஆக (மநஸ்ஸுக்குத்தீமையாவது)என்றுதுடங்கி. இவ்வள வும் பகவத்பாகவததோஷஸ்மரணமாகாதென்னுமிடமும், அவர்களு டைய நைர்தோஷ்யமும்,தோஷமுண்டென்றுநினைக்கில்அதுதத்தோஷம ன்றுஸ்வதோஷமென்றும், அது ஸ்வதோஷமாகைக்கு நிதாநங்களும்,ஸ்வ தோஷாபாவசங்கைக்குத்தரமும்,தோஷப்ரதிபத்திநடக்கி லதுதானேயிவ னுக்குமஹாதோஷமென்றும், ஸ்வதோஷபகவத்பாகவதகுணாநுஸந்தா நத்துக்கே காலம்போருகையாலிதுதனக் கிவனுக்கவஸரமில்லையென்றுமரு ளிச்செய்தார்கீழ்; இப்படி தனக்குத்தேச்யமான பகவத்பாகவத விஷ யங்களில் தோஷம் நினையாமலும், நினைத்தானாகிலுமது தன்னுடைய தோஷமாக நினைத்திருக்கவேணுமென் றருளிச்செய்த ப்ரஸங்கத்திலே, ஸம்ஸாரிகள் தோஷவிஷயா நுஸந்தாநமு மின்னபடியாகவேணு மென்கி றார் மேல், (ஸம்ஸாரிகள்) என்றுதுடங்கி. அதாவதுஸம்ஸாரிகளுக்குண் டான பகவத்வைமுக்க்யம் அநாத்மந்யாத்மபுத்தி யஸ்வேஸ்வபுத்திமுத லான தோஷம்கண்டால் அந்ததோஷங்களையிட்டவர்களை யிகழ்ந்து இவ ர்களுக்கும் நமக்கும் பணியென்னென்றிராதே, அவர்களுடையதோஷம் தன்னுடையதோஷமென் றநுஸந்தித்திருக்கக்கடவனென்கை.

௩சூ௦. அதுக்கு ஹேதுவென்னென்ன வருளிச்செய்கிறார், (அதுக் கு ஹேதுபந்தஜ்ஞாநம்) என்று. அதாவது தனக்குசேஷிகளானபகவத்ப் பாகவதர்கள்தோஷம் ஸ்வதோஷமாக வநுஸந்திக்கைக்குஹேது அவர் களோடு தனக்குண்டான ஸம்பந்தஜ்ஞாநமானுப்போலே, ஸம்ஸாரிகள் தோஷத்தை தன்னுடையதோஷமாக வநுஸந்திக்கைக்கு ஹேது, நாராயணத்வ ப்ரயுக்தமான ஸம்ப்ந்தஜ்ஞாநமென்கை. எல்லார்க்கு மீச் வரனோடு ஸம்பந்தமொத்திருக்கையாலே அவ்வழியாலே தனக்குமவர்க ளுக்கும் ஸம்பந்தமுண்டாகையாலே, தனக்கவர்ஜநீயரான ப்ரக்ருதி பந்துக்களுக்குவந்ததோஷம்தனக்குவந்ததாக நினைத்திருக்குமோபாதி, ஸம்ஸாரிகளுக்குண்டானதோஷம் தன்னுடையதோஷமென்றே நினைக் கக்குறையில்லையிறே.

ஆ.—கூகூக. தத்தோஷதர்சநமும் தத்ஸ்வகீயத்வபுத்தியும் காதாசித்கமாக வருமத்தனை யென்கிறார் மேல்; திருக்கடல் மல்லையிலே தங்களைப்பெறவேணுமென்று தரையில்கிடக்கிற ஸுசீலஸுலபவிஷயத்தைப்ராக்ருதவஸ்துக்களோடொக்கவாகிலும் ஒருகால் ஸ்மரியாதே வன்னெஞ்சராய்க்கெட விருக்கிறஸம்ஸாரிகளை, க்ஷணகாலமும் நாமும் நம்முடையஸம்பந்த ஸம்பந்திகளும் ஸ்மரியோமென்று அத்யவஸித்திருக்கையாலே, அந்த ஸம்ஸாரிகள்தோஷம்தா னிவர்களுக்கு முதலிலேதோன்றுது.

கூகூஉ. "சொன்னால்விரோதம்" "ஒருநாயகம்" "கொண்டபெண்டிர்" இத்யாதிகளிலே ஸம்ஸாரிகள் குற்றம்தோற்றினமை யுண்டேயென்ன, அப்படியங்கங்கவர்கள்தோஷம் தோன்றுவது அஸேவ்யஸேவாதிதோஷநிவர்த்தநார்த்தமாக வென்கிறார்.

கூகூஙு. அவர்கள்பண்ணும்தோஷம் நம்மதென்று பொரிபுறந்தடவலாமத்தனையல்லது; தனக்கவர்கள் பண்ணும்குற்றங்களை நினையாதொழியக்கூடாதேயென்ன, அத்தையு மிவ்வதிகாரிநினைக்கக்கடவனல்ல னென்கிறார் மேல், (பிராட்டி) இத்யாதியால். அபிமதாந்தரங்கருடன் பேசிப்

---

கூகூக. "இறைப்பொழுதுமெண்ணோம்" என்கையாலே அதுதான் தோன்றுது.

கூகூஉ. தோன்றுவது நிவர்த்தநார்த்தமாக.

கூகூஙு. பிராட்டி ராக்ஷஸிகள்குற்றம் பெருமாளுக்கும் திருவடிக்கும் அறிவியாதாப்போலே, தனக்கு பிறர்செய்த

---

ஜீ.—கூகூக. இதுதான்வேண்டுவது அவர்கள்தோஷம் தானிவனுக்குத்தோன்றிலிறே, அதுதான் முதலிலே யிவனுக்குத்தோன்றுதென்கிறார் மேல் (இறைப்பொழுதுமெண்ணோம்) என்றுதுடங்கி. அதாவது "கடல்மல்லைத்தலசயநத்துறைவாரை யெண்ணாதேயிருப்பாரை யிறைப்பொழுதுமெண்ணோமே" என்று பரமபதத்திலே நித்யஸூரிகள் பரிந்துபரிசர்யைபண்ணவிருக்கும் பெருமையையுடையனாய்வைத்து, திருக்கடல்மல்லையிலேவந்து தங்களைப்பெறுகைக்காக தரைக்கிடைக்கிடக்கிற நீர்மையையுடையவனை, இதொரு நீர்மையிருக்கும்படி யென்னென்று அந்நீர்மையிலேதோற்று அநவரதாநுஸந்தாநம்பண்ணவேண்டியிருக்க, அவனிடையாட்டம்கொண்டு காரியமற்று, கேவலதேஹபோஷணாதி பரராயிருக்கிறஸம்ஸாரிகளை க்ஷணகாலமும் நினையோமென்கையாலே, ஸம்ஸாரிகள்தோஷம்தான் இவ்வதிகாரிக்குத்தோன்றுதென்கை. திருமங்கையாழ்வாருளிச்செய்தவிது ஸ்ரீவைஷ்ணவர்களெல்லார்க்கு மொக்குமிறே.

கூகூஉ. (தோன்றுது) என்னப்போமோ "சொன்னால் விரோதம்" "ஒருநாயகம்" "கொண்டபெண்டிர்" இத்யாதியிலே ஆழ்வார்க்கு முட்பட ஸம்ஸாரிகள்குற்றம் தோன்றிற்றில்லையோவென்ன வருளிச்செய்கிறார், (தோன்றுவது) என்றுதுடங்கி. அதாவது ஸம்ஸாரிகள் தோஷம்தோன்றுவது அந்ததோஷங்களினின்றும் அவர்களை நிவர்த்திப்பிக்கைக்காகவென்கை. "சொன்னால்விரோதம்" முதலானவற்றால் ஆழ்வாருமதில் திருவுள்ளம்வைத்தது அஸேவ்யஸேவாதிகளினின்று மவர்களைநிவர்த்திப்பிக்கைக்காகவிறே; அதெல்லார்க்குமொக்குமென்று கருத்து.

கூகூஙு. ஆக விவ்வதிகாரி ஸம்ஸாரிகள் தோஷம் கண்டாலநுஸந்திக்கும் ப்ரகாரமும், தத்தோஷந்தா னிவனுக்குத்தோன்றுதென்னுமிடமும், தோன்றுவது இன்னதுக்காகவென்று மருளிச்செய்தார்கீழ்; இப்படிகாதாசித்கமாகத்தோன்றும் ஸம்ஸாரிகள் தோஷங்களை ஸ்வதோஷமாக

ஆ.—பாடாற்றுகிறபிராட்டி, தன்னை தர்ஜந பர்த்ஸநாதிகளைப்பண்ணி விடாமல்நலிந்த க்ரூரராக்ஷஸிகள் குற்றம், விரோதியையுமாற்றாமையையு மறுத்துஉடன்கொண்டெழுந்தருளுகிறபெருமாளுக்கும், விரோதிகளுமாற் றாமையும் நலிகிறதசையிலே யுதவி யாச்வாஸிப்பித்த திருவடிக்கும், நெஞ் சில்கிடந்ததடைய வருளிச்செய்கிறவளவிலும்மறந்துமறிவியாதாப்போலே, குற்றம்காண்கை தூஷணமான தனக்குநிர்நிபந்த்தகமாகப் பிறர் நிரந்தரம் செய்யும் குற்றங்களை "நெஞ்சத்துப்பெயராது நிற்கும்பெருமான்" என்றும் "எம்பெருமான் தாள்தொழுவாரெப்பொழுது மென்மநத்தே யிருக்கின் றாரே" என்றும் "தன்னெஞ்சிடம்கோயில்கொண்ட பகவத்ப்பாகவதவிஷ யங்களில்" "தீக்குறளைச்சென்றோதோம்" என்று மறந்து மறிவிக்கக் கடவனல்லன்.

ஙகூச. அறிவிக்க வுரியவனுமுட்படமறையாநின்று லிவனுக்குச் சொல்லவேண்டாவிறே யென்கிறார் மேல்; "சூழ்ந்தடியார்" இத்யாதி யால் ஸம்ஸாரிகளையடையத் திருத்திக்கொண்டுவரக்கடவனென்று நித்ய ஸூரிகள்நடுவே ப்ரதிஜ்ஞைபண்ணி அநேகாவதாரமாய் நாட்டில் பிற ந்துகாட்டுகிற சீலரூபசரிதங்களுக்கு மொருவருமெட்டுப்படாமல் தரை யைமோதி பரமபதத்திலேசென்று புகிருக்கொள்ள, நித்யஸூரிகளடைய வெதிரேவந்து சுற்றுமுற்றும்சூழ்ந்து ப்ரதிஜ்ஞாநுகுணமாக தேவர்பின் பொருவரும் திருந்திவரக்கண்டிலோம் இதுக்கடி யென்னென்றிரப்புடன் நிர்ப்பந்த்திக்கப்புக்கால், திருந்தினார்கள் திருந்தினார்களில்லை வருகிறார்கள் வருகிறார்களில்லை. என்றிரண்டும் சொல்லமாட்டாமல், மற்றுமறுமாற்றம் காணமல் சுற்றுமுற்றும் பரக்கவிழித்து தெகடாறுகிறதசையிலும், சொல் லுவார்போல் திருவதரம் ஸ்ப்புரிப்பது முறுவல்செய்வது வழியைக்கடைக் கணிப்பது ப்ரதிஜ்ஞையின்வெற்றி நிலைகாட்டுவதாய்க்கொண்டுபெருவாழ்வு வாழ்வர், இப்புறப்பூச்சான பாவனையறிந்து திருந்தாமல்போனகுற்றவாள

குற்றங்களை பகவத்ப்பாகவதவிஷயங்களி லறிவிக்கக் கடவனல்லன்.

ஙகூச. அறிவிக்கவுரியவ னகப்பட வாய்திறவாதே, ஸர்வஜ்ஞ

ஜீ.—நினைத்தும், தன்நிவர்த்தகனும் போருமளவன்றிக்கே, ஸ்வவிஷயத் திலே குற்றங்களைச்செய்தால் இவனிருக்கவடுக்கும்படி யருளிச்செய்கிறார் மேல், (பிராட்டி) என்றுதுடங்கி. அதாவது ஏகாக்ஷீ ஏககர்ணீ முத லான வெழுநூறுராக்ஷஸிகள் ஏகதிவஸம்போலே பத்துமாஸம் தர்ஜந பர்த்ஸநம்பண்ணவிருந்த பிராட்டி, இவர்களப்படிச்செய்த குற்றத்தை, பகவத்விஷயமான பெருமாளுக்கும் பாகவதவிஷயமான திருவடிக்குமறி வியாதாப்போலே, தன்விஷயமாகப்பிறர்செய்த குற்றங்களை, பகவத்விஷய த்திலாதல் பாகவதவிஷயத்திலாதல் மறந்தும் விண்ணப்பம் செய்யக்க டவ னல்லனென்கை.

ஙகூச. இதுகிம்புநர்ந்யாய ஸித்த்தமாம்படி ஈச்வரன்படியை யரு ளிச்செய்கிறார், (அறிவிக்கவுரியவன்) என்றுதுடங்கி. அதாவது "எதிர் சூழல்புக்கு" என்கிறபடியே தன்னுடைய சீலஸௌலப்யாதிகளைக்காட்டி ஸம்ஸாரிசேதநரைத்தப்பாமலகப்படுத்திக்கொள்ளுவதாக வந்தவதரித்து, தமக்கடியார் வேணுமென்றபேக்ஷித்தால் அவர்களப்படி யநுகூலராய்த் தோன்றுதொழிந்தாலும், இவர்கள் செய்தபடி செய்கிறார்கள் நாமிவர்களு க்குறுப்பாகப்பெற்றோமிறேயென்று அதுதானேபோக்யமாகவிருப்பர், அது க்குமேல்அவர்கள் வைமுக்க்யம்பண்ணினார்களென்று அவர்கள்குற்றத்தை

ஆ.—ருண்டோவென்ன, அந்தரங்கர்க்குள்ளது சொல்லவேண்டினபின்னும் குணம் சொல்லத்தேடுவரித்தனையல்லது, குற்றம்சொல்ல நாவெழாமல் ப்ரபுத்வம்கொண்டாடி வாய்திறவாதிருப்பதன்றி பிறர் குற்றம்சொல்லில் பிணங்துவரும் செய்யவாயை ஸர்வசக்தித்வத்தாலும் திறக்கமாட்டாமல் போக்கடியற்று நிற்பர் என்று செய்தார் செய்தகுற்றம் அறிவிக்கவுரிய ஸ்வாமியானவனு முட்படத்தன் வாய்திறக்கமாட்டாதே, உபயவிபூதிமானைதன்னை யுள்ளபடிஸாக்ஷாத்கரித்திருக்கும் ஸர்வஜ்ஞரான நித்யஸூரிகளுக்கு மாயமயக்ருத்திரை விழவிட்டுமறைக்கும் என்று நிஷ்களங்க ஸூக்ஷ்மதர்சி ப்ரமாணம் சொல்லாநின்றதிறே. பிறர்குற்றம் கண்டாலறிவிக்க வுரியவனல்லாத வஜ்ஞனவன் அறிவிக்கக்கடவனல்லானென்னுமிடம் சொல்லவேணுமோ என்றபடி.

௩௬௫. இப்படி தத்ததீயவிஷயங்களுக்குஅறிவிக்கவொண்ணாதவளவேயோ, குற்றவாளரளவில் க்ஷமாதிகளுமுண்டாகவேணு மிவனுக்கென்கிறார்மேல்; அஸஹ்யங்களான பாருஷ்யாதியான வளவற்றகுற்றங்களை தீரக்கழியச்செய்தவர்கள் பக்கல் "சக்தாநாம் பூஷணம் க்ஷமா" "சக்தாநாம் பூஷணம்க்ஷமா" என்று தக்கதுசெய்ய சக்தனாயிருக்கக் காணக்கண்ணிட்டிருக்கையாகிற பொறையும்; இவர்களளவில் எம்பெருமான் திருவுள்ளம் கன்றில்செய்வதென்னென்கிறபரதுஃக்காஸஹிஷ்ணுரூபையானக்ருபையும்; அவர்கள் குற்றத்துக்கிலக்கான சரீரத்தைப்பார்த்து உமக்கித்தனையும் வேணுமென்கிறசிரிப்பும்;—, அன்றியே கடலைமுகக்கொள்ளும் கொசுகுபோலே இத்தலையில்குற்றமெல்லாம் முகக்கொண்டு நீர்சொல்லீரோபின்னையென்று குற்றம்செய்தாரளவி லுண்டாம்க்ஷேமசிரிப்பும்; குற்றம்சொல்லச்சொல்லக்கேட்டு இவை சிலதிருமுன்காணிக்கைபெற்றோமென்று மேல்மேலும் பாசம்செய்கிறவுகப்பும்; நாமிதுக்குமுன்பு அறியாதகுற்றங்களையு மறிவித்துபகரிக்கிற விவர்களுக்கு எத்தைக்கொடுப்பதென்னப்பண்ணு முபகாரஸ்ம்ருதியும், அவர்கள் குற்றம்செய்தபோதெல்லாம் குறையாமல் நடக்கவேணுமென்கிறார். இவை யொன்றிலொன் றதிகமான

---

விஷயங்களுக்கும் மறைக்குமென்ன நின்றதிறே.

௩௬௫. குற்றம்செய்தவர்கள் பக்கல்,

---

ஜீ.—தனியிருப்பிலே பிராட்டிக்கு மருளிச்செய்யாரென்கிற "சூழ்ந்தடியார்" என்கிறபாட்டிலே சேதனர்செய்தகுற்றங்களை தன் திருவுள்ளத்துக்குகந்தவர்களுடன் அறிவிக்கைக்கு ப்ராப்தனானஸர்வேச்வரனு முட்பட தன் திருப்பவளம் திறந்தருளிச்செய்யாதே, தானருளிச்செய்யாதொழிந்தாலும் அறியவல்ல ஸர்வஜ்ஞவிஷயங்களுக்கும் மறைக்குமென்று சொல்லாநின்றதிறேயென்கை. இத்தாலவனுட்பட விப்படிமறையாநின்றாலிவனுக்குப் பின்னைசொல்லவேணுமோ வென்றபடி.

௩௬௫. இப்படி உத்தேச்யவிஷயங்களி லறிவியாதிருக்கும் மாத்ரமும்போராது, குற்றம்செய்தவர்கள் விஷயமாக க்ஷமாதயாதிகளும் நடக்கவேணுமென்கிறார் மேல், (குற்றம்செய்தவர்கள்பக்கல்) என்றுதுடங்கி. (பொறை) யாவது - அவர்கள் செய்தகுற்றத்துக்கு தாமொருப்ரதிக்ரியை பண்ணுதல் நெஞ்சிலேகன்றியிருத்தல் செய்யாமையாகிற வபராதஸஹத்வம்; (க்ருபை) யாவது - நாம்பொறுத்திருந்தோமாகிலு மெம்பெருமானுசிததண்டம் பண்ணவன்றோ புகுகிறான் ஐயோ வினி யிதுக்கென் செய்வோமென்கிறபரதுஃக்கா ஸஹிஷ்ணுத்வம்; (சிரிப்)பாவது - அத்ருஷ்டவிரோதமாக விவர்களால் செய்யலாவதொன்றில்லையிறே, பாருஷ்யாதிமுகத்தாலே க்யாதிலாபாதி த்ருஷ்டவிரோதங்களிறே யிவர்

ஆ.—ஒருவரிருவரன் றிக்கேபத் துப்பேருண்டிறே;''நாகணை மிசைநம்பிரான் சரணேசரண்'' ''உன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே'' ''தனக்கேயாக வெனைக்கொள்ளும்'' ''நின்தீர்த்தவடிமைக் குற்றேவல்செய்து'' என் றித்யாதியாலே ஸ்வதந்த்ர பகவத்விஷயமே யுபாயோபேயமென்றறுதி யிட்டு, ப்ரதமபர்வாபிலாஷிகளான வந்தவாழ்வார்களுடைய சோகஹர்ஷ கலப்பனை பாசுரம்கொண்டன்று அந்தபகவத்விஷயமே யுபாயோபேய மென்றிருக்கும் ஸதாசார்யன்திருவடிகளே ததுபயமுமென்னு மிச்சரமார் த்தம், ஸம்சயவிபர்யயமற வறுதியிடுவது.

௪௦௬. ப்ரதமபர்வத்திலே நின்று சிரிப்பதழுவதாய்க்கொண்டு இள நெஞ்சானவவர்களை, ஹர்ஷைகஹேதுவான வாசார்யவிஷயத்தையே முற் படப்பற்றி ஸுகித்திருக்கமாட்டாதே, சோகஹர்ஷ மிரண்டுக்கும் ஹேது வான ஸ்வதந்த்ரவிஷயத்தையே முற்படப்பற்றி சோகிப்பது ஹர்ஷிப்ப தாய், இவர்கள் படுகிறபாடென்னென்றுசிரித்து ''மேவினேனவன்பொன் னடி'' என்று விச்லேஷகந்தமற ஆழ்வார்திருவடிகளுடன் நிரந்தரஸம் ச்லேஷம்பண்ணி ''நாவினால்நவிற்றின்பமெய்தி வீறடித்திருக்கும் ப்ரஸித் தரான ஸ்ரீமதுரகவியாழ்வா ரொருவருண்டிறே; சரமநிஷ்ட்டராய்ப்போரு மவ்வாழ்வாருடைய'' ''மேவினேனவன்பொன்னடி - தேவுமற்றறியேன்''

---

அவர்கள்பாசுரம்கொண்டன் றிவ்வர்த்தமறுதியிடுவது.

௪௦௬. அவர்களைச் சிரித்திருப்பாரொருவ ருண்டிறே ;

---

ஜீ.—(உண்டபோதொருவார்த்தையும்உண்ணாதபோதொருவார்த்தையுஞ் சொல்லுவார்) என்கிறார். ஆழ்வார்களெல்லாரு மேகப்ரக்ருதிகளாய் ஏககண்ட்டரா யிருக்கையாலே (பத்துப்பேருண்டிறே) என்கிறார். (அவர் கள் பாசுரம்கொண்டன் றிவ்வர்த்தமறுதியிடுவது) என்றது - மயர்வறமதி நலம்பெற்றவர்களாகையாலே ப்ரதமபர்வத்தில் காட்டில் சரமபர்வத்துக் குள்ள தன்னேற்றமடையத்தெளியக்கண்டு பேசினார்களேயாகிலும், சரம பர்வைக நிஷ்ட்டரன்றியே ப்ரதமபர்வத்திலேமண்டி ததநுபவஹ்ருஷ்ட ரானபோ தொன்றைச்சொல்லுவது, ததலாபக்லிஷ்டரானபோ தொன் றைச்சொல்லுவதா யொருபடிப்பாட ரல்லாதவர்கள் பாசுரம்கொண்டன்று ஆசார்யனேயுபாயமென் றிவ்வர்த்த நிச்சயம்பண்ணுவதென்கை.

௪௦௬. பின்னை யார்பாசுரம்கொண் டறுதியிடுவதென்ன வருளிச் செய்கிறார்,(அவர்களை) என்றுதுடங்கி. அதாவது- ''மேவினேனவன்பொ ன்னடி - தேவுமற்றறியேன்'' என்று ஸ்வாசார்யரான வாழ்வார் திருவடி களை ப்ராப்யமும் ப்ராபகமுமாகப் புரையறப்பற்றி அவிதிதாந்யதேவதராய் ''நாவினால் நவிற்றின்பமெய்தினேன்'' என்று தத்ஸங்கீர்த்தநாநந்த நிர்ப் பரராய் ''அடியேன் சதிர்த்தேன்'' என்றுறுவதறிந்து பற்றினசதுரரா யிருக்கையாலே, சரமபர்வத்தி லேற்றமறிந்து பேசா நிற்கச்செய்தே ததேகநிஷ்ட்டரன்றியே ப்ரதமபர்வத்திலேமண்டி தத்வைலக்ஷண்யபரவச ராய் உண்டபோ தொருவார்த்தையு முண்ணாதபோதொரு வார்த்தையுஞ் சொல்லுகிறவாழ்வார்கள்பதின்மரையும்,அடியிலேயோராசார்யன் திருவடி களைப்பற்றி யநவரதஸுகிகளா யிருக்கப்பெறாதே ஸ்வவைலக்ஷண்யத் தாலே பிச்சேற்றும் பகவத்விஷயத்திலே முந்துறமுன்னமிழிந்து ததநுபவ தசையி லொன்றைச்சொல்லுவது ததலாபதசையி லொன்றைச்சொல்லு வதா யிவர்கள் படுகிறபாடென்னென்று பரிஹஸித்திருக்கும் ஸ்ரீமதுரகவி யாழ்வாரொருவருண்டிறே ; சரமபர்வ நிஷ்ட்டராய் ஸதைகரூபவசநரான விவருடையபாசுரமான கண்ணிநுண்சிறுத்தாம்பைக்கொண்டு இவ்வர்த்த

ஆ.—என்று ஆழ்வார் திருவடிகளை யுபாயோபேயமென்று ப்ரதிபாதிக்கிற திருமுகப்பாசுரமான கண்ணிநுண்சிறுத்தாம்புகொண்டே, சரமசேஷியே யுபாயோபேயமென்னும் சரமார்த்தம், ததபிலாஷிகளான நாம் நிஸ்ஸம்சயமாகவுறுதியிட்டு நிஸ்சலசித்தராகக்கடவோமென்கிறார். ஸ்வாமியினுடைய பாதுகையைச்சிரஸாவஹித்து, நான்தரித்தவித்தோடொக்குமோ நீதரித்தரத்நாபிஷேகமென்று ஸ்வாமியைப்பார்த்துச் சிரித்தானென்றால் ஸ்வாமித்ரோஹம்வாராதாப்போலே, ஆசார்யப்ரேமப்ரகர்ஷத்தாலே ஆசார்யனைப்பற்று மித்தோடொக்குமோ தத்விஷயத்தைப்பற்று மிதுவென்னும் சிரிப்பு ஆசார்ய ப்ரீதிவர்த்தகமாய்க்கொண்டு அடிக்கழஞ்சுபெறுமத்தனையல்லது, ஆசார்யாபசாரமாய்த்தலைக்கட்டாதிறே; ஆகையாலாசார்யைகநிஷ்ட்டரான விவர்சிரிப்பு தத்ப்ரேமாதிசயத்துக்குப் போக்குவீடாய், திருவுள்ளத்தில் கொழுந்துபட்டுப் படரும் தத்பக்திவல்லி பூத்தபூவாயேயிவர்க்கு முக்க்யாபரணமுமா யிருக்குமிறே.

சக௦. இப்படி யாசார்யதத்ஸத்ருசருகக்கும்படி சிரித்திருக்குமிவர் சொன்ன "நம்பிக்காளுரியேனாய்" என்கிற வாசார்யைகசேஷமான ஸ்வரூபத்துக்கும், "நம்பிக்காள்புக்க காதலடிமைப்பயனன்றே" என்றாசார்ய கைங்கர்யரூபமான ஸ்வரூபாநுரூப ப்ராப்யத்துக்கும், "மேவினேனவன் பொன்னடி" என்னும்படி விபரீதமாகாதே சேர்ந்திருக்கவேணுமிறே

---

அவர்பாசுரம்கொண் டிவ்வர்த்த மறுதியிடக்கடவோம்.

சக௦. ஸ்வரூபத்துக்கும் ப்ராப்யத்துக்கும்

---

ஜீ.—த்தை ஸம்சயவிபர்யயகந்தமற நிச்சயிக்கக்கடவோமென்கை.—, அதவா (உண்டபோது) இத்யாதிக்கு பகவதநுபவம் பண்ணினபோது "உண்டுகளித்தேற்கும்ப ரென்குறை" "யாவர் நிகரகல்வானத்தே" "மாறுளதோ விம்மண்ணின்மிசை" என்றிப்படி பகவதநுபவ ஜநித ஹர்ஷப்ரகர்ஷ கர்விதமான தொருவார்த்தையும், ததநுபவம்பெறாதபோது "மதியெல்லாமுள்கலங்கி மயங்குமால்" "சாயலொடுமணிமாமை தளர்ந்தேன் நான்" "காணவாராயென்றென்று கண்ணும் வாயும்துவர்ந்து" "தீயோடுடன் சேர்மெழுகாயுலகிற்றிரிவேனே" என்றிப்படி சோகவேகஜநிதமான தொருவார்த்தையும் சொல்லுவா ரொருவ ரிருவரன்றிக்கே பத்துப்பேருண்டிறே; ததீயரேசேஷிகளு முபாயோபேயபூதரு மென்றறிந்திருக்கச்செய்தே, ததநுகுணமாக நிற்கமாட்டாமல் பகவத்விஷய வைலக்ஷண்ய பரவசராய் இப்படி யுண்டபோதொருவார்த்தை சொல்லுகிறவர்களுக்கிகொண்டன்று; ஸ்வாசார்ய சரணயுகளமே யுபாயமென்கிற விப்பரமார்த்த நிர்ணயம்பண்ணுமது அவர்திருவடிகளையே தமக்குத் தஞ்சமாகப்பற்றி "தேவுமற்றறியேன்" என்றிருக்கையாலே ப்ரதமபர்வத்திலே மண்டி ஹர்ஷசோகபரவசராய்ப்பேசுகிறவர்களைப் பரிஹஸித்திருப்பாரொருவருண்டிறே; அப்படி யிருந்துள்ள ஸ்ரீமதுரகவிகள் திவ்யஸூக்தியைக் கொண்டிவ்வர்த்த நிச்சயம்பண்ணக்கடவோ மென்றிங்ஙனே யோஜிக்கவுமாம்.

சக௦. இப்படி ப்ரமாணஸித்தமான வர்த்தத்தை உபபத்தியாலே ஸ்த்திரீகரிக்கிறார் மேல் (ஸ்வரூபத்துக்கும்) என்றுதுடங்கி. ஸ்வரூபோபாய புருஷார்த்தங்களை நிஷ்கர்ஷிக்குமளவில், ப்ரதமம் ஸ்வரூபத்தையுள்ளபடிநிஷ்கர்ஷித்து அநந்தரம்ப்ராப்யத்தை ததநுரூபமாக நிஷ்கர்ஷித்துப்ராபகத்தை ததுபயாநுரூபமாக நிஷ்கர்ஷிக்கவேணுமிறே; வ்யுத்பத்திதசையிலுபேயம்முற்பட்டு உபாயம்பிற்பட்டிருக்கும், அநுஷ்ட்டாநதசையில் மாறாடியிருக்கும்; ஸ்வரூபத்துக்கும்ப்ராப்யத்துக்கும் சேராமையாலேயிறே

ஆ.—ததுபயமத்யஸ்த்தமான ப்ராபகம். ஸ்வரூபம்சரமசேஷிக்குசேஷம் தத்கைங்கர்யமே சரமப்ராப்யமென்று சரமஜ்ஞாநவ்யவஸாயம்பிறந்தால், சரம விஷயமே சரமோபாயமாகாவிடில் சேராச்சேர்த்தியாய் விடுமென்கிறார். ப்ரதமசேஷத்வாதிகள் சரமபர்யந்தமாய் நிலைத்தபின்பு, ப்ரதமசரமங்களிரண்டையும் ப்ராதாந்யேநப்பற்றி நிற்கைசேராதிறே. ப்ரதமநமஸ்ஸிலே ப்ரதமத்ருதீயாக்ஷர சதுர்த்திநமஸ்ஸுக்களாலே சரமஸ்வரூப ப்ராப்ய ப்ராபகங்கள் சரமாதிகாரிக் கநுஸந்த்தேயங்களென் றருளிச்செய்வர்.

௪௧௧. ததுபயவிபரீத ப்ராபகாந்தர பரிக்ரஹம் சரமநிஷ்டர்க் கநபிமதமென்கிறார் மேல்; எம்பெருமானார் திருவடிகளே சரணமென் றிருக்கும் வடுகநம்பி, உடையவர்க்கு பவித்ரமான கூரத்தாழ்வானையும் தண்டமான முதலியாண்டானையும், எம்பெருமானார் திருவடிகளேசரணம் பெரியபெருமாள் திருவடிகளேசரணம் என்றிரண்டையு மநுஸந்த்திக்கை

---

சேர்ந்திருக்கவேணுமிறே ப்ராபகம்.

௪௧௧. வடுகநம்பி யாழ்வானையு மாண்டானையு மிருகரைய ரென்பர்.

---

ஜீ.—உபாயாந்தரத்தைப்பரித்யஜித்தது; ஆகையாலே (ஸ்வரூபத்துக்கும் ப்ராப்யத்துக்கும் சேர்ந்திருக்கவேணுமிறே) என்கிறார். இனிஸ்வரூபம் தன்னை நிரூபித்தால் ஜ்ஞாநாநந்தங்களும் புறவிதழென்னும்படி பகவதநந்யார்ஹசேஷத்வமேவடிவாய், அதினுடைய யாதாத்மியம் தச்சேஷத்வமும் புறவிதழென்னும்படி ததீயசேஷத்வமேவடிவாயிறே யிருப்பது; ஏவம்பூதஸ்வரூபாநுரூபமான ப்ராப்பத்தை நிரூபித்தால், தத்கைங்கர்யம் ப்ரதமாவதியாய் ததீயகைங்கர்யம் சரமாவதியாயிருக்கும்; ஸ்வரூபப்ராப்யவேஷ மிதுவாகையாலே ததுபயாநுகுணமான ப்ராபகம் ததீயரேயாக வேண்டியிறேயிருப்பது; இனி யந்தத்ததீயரில் வைத்துக்கொண்டு முதலடியிலே தன்னை யங்கீகரித்து தத்வஜ்ஞாநப்ரதாநத்தைப்பண்ணின மஹோபகாரகனான ஸ்வாசார்யனுக்கே சேஷமாயிருக்கை ஸமஸ்தபாகவதருடைய வுகப்புமாய் தன் ஸ்வரூபத்தினுடைய வெல்லைநிலமுமாயிருக்கும்; இந்த ஸ்வரூபத்துக்கநுரூபமான ப்ராப்யமும் ஸ்வாசார்யன் திருவடிகளில்பண்ணும் கைங்கர்யமுமாயிருக்கும்; இப்படி ஸ்வரூபப்ராப்யங்களாயற்றால் இவையிரண்டுக்கும் ஸத்ருசமான ப்ராபகம் ஸ்வாசார்ய சரணயுகளமாக வேணுமென்கை. இதுவே ஸ்வரூபப்ராப்யங்களுக்குச்சேர்ந்த வுபாயமென்கையால் ஈச்வரஸ்வாதந்த்ர்ய பீத்யா நிர்ப்பயத்வத்தைப்பற்ற விதில் போந்தவளவல்ல, முக்க்யோபாய மிதுவேயென்னுமிடம்ஸம்ப்ரதிபந்நமிறே.

௪௧௧. இவ்வர்த்தவிஷயமாக வோரைதிஹ்யத்தை யருளிச்செய்கிறார் மேல், (வடுகநம்பி) என்றுதுடங்கி. அதாவது ஆழ்வார்திருவடிகளில் ஸ்ரீமதுரகவிக ளிருந்தாப்போலே, ப்ராப்யப்ராபகங்களிரண்டு மெம்பெருமானார் திருவடிகளிலேயென்று ப்ரதிபத்திபண்ணி "தேவுமற்றறியேன்" என்றிருக்கும் வடுகநம்பி, எம்பெருமானார்க்கு நிழலுமடிதாறும் போலே யவிநாபூதராய் "రామానుజస్యచరణౌ శరణంప్రపద్యే" "రామానుజార్యవశగః పరివర్తిషీయ" "ராமாநுஜஸ்யசரணௌ சரணம்ப்ரபத்யே" "ராமாநுஜார்யவசகः பரிவர்த்திஷீய" என் றுபாயோபேயங்க ளவர்திருவடிகளு மத்திருவடிகளில் பண்ணும் கைங்கர்யமென்றிருக்கும் கூரத்தாழ்வானையும் தாத்ருசரான முதலியாண்டானையும், ஸம்ஸாரத்திலிருப்பி லடிக்கொதிப்பால்வந்த வார்த்தியின் மிகுதியாலேகலங்கி காதாசித்கமாகப் பெருமாள்

ஆ.—யாலே ஒருகரையில் நிலையற்ற விருகரையரென்பர். ஆகையால் ப்ராபக வைபரீத்யம் சரமநிஷ்ட்டர்க் கநிஷ்டமென்றபடி

சகஉ. ஆகில் பகவத்ப்பாகவதாசார்ய விஷயகைங்கர்ய த்ரயமும் ப்ராப்யமாயிருக்க, ஆசார்யகைங்கர்யமே ப்ராப்யமானபடியென்னென்ன, ஸ்வரூபஜ்ஞாநபரிபாக நிபந்தநமாக பர்வக்ரமமாய் வருகையாலேயென்கிறார் மேல், (ப்ராப்யத்துக்கு) இத்யாதியால். ப்ராதமிக பகவச்சேஷத்வாநுகுணமான ப்ராப்யத்துக்கு ப்ரதமாம்சம் ப்ரதமசேஷியான பகவத்கைங்கர்யம் ; மாத்த்யமிகசேஷத்வாநுகுணமான ப்ராப்யத்துக்கு மத்த்யமாம்சம் மத்த்யஸ்த்தசேஷிகளான பாகவதகைங்கர்யம்; சரமசேஷத்வாநுகுணமான ப்ராப்யத்துக்கு சரமாம்சம் சரமசேஷியான வாசார்யகைங்கர்யமென்று மேல் (சரமபர்வம் வரக்கடவது) என்கிறதுக்கும் சேரும்படி இங்கு மாறுடி யந்வயித்தருளிச்செய்வர். பகவத்கைங்கர்யம் பாகவதகைங்கர்யத்திலே மூட்டும், அந்த பாகவதகைங்கர்யம் ஆசார்யகைங்கர்யத்திலே நிலைப்பிக்கும், ஆகையா லாசார்யகைங்கர்யமே சரமபர்வம். பகவத்கைங்கர்யத்திலே பாகவதகைங்கர்யமில்லை, ஸாமாந்யமான பாகவதகைங்கர்யத்தில் விசேஷமானவாசார்யகைங்கர்யமில்லை, ததுபயபாவமுள்ள வாசார்ய கைங்கர்யத்தில் ததுபயகைங்கர்யமுண்டு. பகவத்கைங்கர்யத்தை விடில் ஆசார்யபாகவதர்கள் கைவிடுவார்கள், பாகவதகைங்கர்யத்தை விடில் பகவதாசார்யர்கள் கைவிடுவார்கள், ஆசார்ய கைங்கர்யத்தை விடில் பகவத்ப்பாகவதர்கள் கைவிடுவார்கள். ஆசார்யபாகவத ப்ரீதிவர்த்தகம் பகவத்கைங்கர்யம், பகவதாசார்ய ப்ரீதிவர்த்தகம் பாகவதகைங்கர்யம், பகவத்ப்பாகவத ப்ரீதிவர்த்தகமாசார்யகைங்கர்யம். பகவத்கைங்கர்யமொருபுரி, பாகவதகைங்கர்யமிருபுரி, ஆசார்யகைங்கர்யம் முப்புரியுண்டது. இனி பகவச்சேஷத்வப்ரதாநர் பகவத்கைங்கர்யம் நிருபாதிகம்

---

சகஉ. ப்ராப்யத்துக்கு ப்ரதமபர்வ மாசார்யகைங்கர்யம்; மத்த்யமபர்வம் பகவத்கைங்கர்யம் ;

---

ஜீ.—பக்கலிலும்சென்று பல்காட்டுவது தத்வைலக்ஷண்யம்கண்டவாறே ப்ரவணராய்ப் போருவதா மிவ்வளவைக்கொண்டு, எம்பெருமானார் திருவடிகளே ப்ராப்யமும் ப்ராபகமுமானால் "தேவுமற்றறியேன்" என்றிருக்க வேண்டாவோ, அங்ஙனன்றிக்கே சரமாவதியிலும் ப்ரதமாவதியிலும் கைவைத்து நிற்கிறவர்க ளிருகரையரென்றருளிச்செய்வ ரென்றபடி.

சகஉ. (ஸ்வரூபத்துக்கும் ப்ராப்யத்துக்கும் சேர்ந்திருக்க வேணுமிறே) என்றவிடத்தில் ஸ்வரூபத்தை யொருவழியா லிசைந்து, பகவத்கைங்கர்யமன்றோ ப்ராப்யம், ப்ராப்யத்துக்கு ஸத்ருசமாகவேணுமென்றபடி யெங்ஙனே யென்பாருடைய சங்கையைப்பரிஹரிக்கைக்காக, ப்ரதமம் ப்ராப்யவேஷத்தை யோடவைத்துக்காட்டுகிறார், (ப்ராப்யத்துக்கு) என்றுதுடங்கி. (ப்ராப்ய) மாவது-சேஷத்வைக நிரூபணீயமான வாத்மவஸ்துவுக்கு புருஷார்த்தமானகைங்கர்யம் ; பர்வசப்தமம்சவாசி ; இங்கு ப்ரதமபர்வமாகச்சொல்லுகிற வாசார்யகைங்கர்யமாவது - "திருத்தித்திருமகள் கேள்வனுக்காக்கி" என்கிறபடியே முதலடியிலேதன்னை யங்கீகரித்து பகவத்விஷயத்துக் காளாம்படி திருத்தினவாசார்யனுக் குகப்பாகப் பண்ணும் பகவத்கைங்கர்யம் ; மத்யமபர்வமாகச் சொல்லுகிற பகவத்கைங்கர்யமாவது - "அடியார்க்கென்னை யாட்படுத்தவிமலன்" என்கிறபடியே தானுகந்தாரைத் தன்னடியார்க்கடிமைப்படுத்தும் பகவானுக்குகப்பாகப்பண்ணும்பாகவதகைங்கர்யம்; சரமபர்வமாகச்சொல்லுகிறபாகவத

ஆ.—பாகவதாசார்யகைங்கர்ய மௌபாதிகமென் றிருப்பர்கள், ஆசார்ய சேஷத்வ ப்ரதாநர் ஆசார்யகைங்கர்யம் நிருபாதிகம் பகவத்ப்பாகவத கைங்கர்ய மௌபாதிகமென்றிருப்பர்கள். ப்ரதமசேஷத்வப்ரதாநர்க்கு பகவத்கைங்கர்யத்தில் ஸத்தாநிபந்த்தநத்வ புத்த்தியும் ததீயாசார்ய கைங்கர்யங்களில் ததீயத்வோபதேசிகத்வ நிபந்த்தநபுத்த்தியும் நடக்கும்; சரமசேஷத்வ ப்ரதாநர்க்கு ஆசார்யகைங்கர்யத்தில் ஸத்தாநிபந்த்தந புத்த்தியும் பகவத்ப்பாகவத கைங்கர்யங்களில் ஸ்வசேஷிப்ரீதி நிபந்த்தநபுத்த்தியும் நடக்கும். பகவச்ச்சேஷத்வ ப்ரதாநர்க்கெல்லை பாகவதகைங்கர்யம், ஆசார்யசேஷத்வ ப்ரதாநர்க்கெல்லை பகவத் ப்பாகவத கைங்கர்யம்; ஆக கைங்கர்யத்ரயமு மவர்ஜநீயம். ப்ரதமசேஷத்வ ப்ரதாநர்க்கு சரமாந்வயம் பாகல்காயிட்டுண்டு பால்வார்த்துண்பாரைப்போலே; சரமசேஷத்வ ப்ரதாநர்க்கு ப்ரதமாந்வயம் பாலும் பழமுமாகவுண்டு ஹரீதகி ஸேவிப்பாரைப்போலே யென்றருளிச்செய்வர். ஆக ப்ரதமமத்யம சரமரூப பர்வக்ரமமாக வருளிச்செய்கிறவிது ஜ்ஞாநபரிபாகாநுகுணமாக தத்கைங்கர்யம் ரஸித்துவருமென்றும், ஒன்றிலொன்றுஸாரமாய் ருசிக்குமென்றும், ஸ்வப்ராதாந்யமான வம்சபேதமொழிய ஸ்வப்ராப்யாகாரபேதமான வம்சபேதமில்லையென்றும் திருவுள்ளம்பற்றியிறே பர்வத்தைமாறுடி யருளிச்செய்கைக்கடி ச்ருதஸாபேக்ஷதயைப்பற்ற வென்றருளிச்செய்வர்.—, அன்றியே சரமசேஷத்வ ப்ரதாநர்க்கு ஸத்தாநிபந்த்தந ப்ரதமபர்வம் ஸதாசார்யகைங்கர்யம், மத்த்யமபர்வம் தத்ப்ரதபகவத்கைங்கர்யம், சரமபர்வம் ததுபயப்ராபக பாகவதகைங்கர்ய மென்றிங்ஙனே யதாந்வயமாகவும் யோஜிப்பர்கள்; இது (சரமபர்வம் வரக்கடவது) என்கிற மேலுக்குச் சேராது.

௪௧௯. இந்த வாசார்யகைங்கர்யம் பரமபுருஷார்த்த சரமமாய் வருமென்கிறார்; "పరంజ్యోతిరుపసమ్పద్య స్వేనరూపేణాభినిష్పద్యతే" "பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே" என்று பகவத்ஸாம்யாபத்தியை வேதாந்தசாஸ்த்ரம் பரமபுருஷார்த்தமாகச் சொல்லாநிற்க, பகவத்

---

சரமபர்வம் பாகவதகைங்கர்யம்.

௪௧௯. ஸ்வரூபப்ராப்தியை சாஸ்த்ரம் புருஷார்த்தமாகச் சொல்லாநிற்க,

---

ஜீ.—கைங்கர்யமாவது- ஆசார்யபரனென்றுகக்குமவர்களாய்ஆசார்யவைபவஜ்ஞாபகரா யாசார்யகைங்கர்யத்தி னேற்றமறியு மவர்களானபாகவதர்களெல்லார்க்கு முகப்பாகப்பண்ணு மாசார்யகைங்கர்யம். ஆக வாசார்யப்ரீதிவிஷயமான பகவத்கைங்கர்யத்தை யாசார்யகைங்கர்யமென்றும், பகவத்ப்ரீதிவிஷயமான பாகவதகைங்கர்யத்தை பகவத்கைங்கர்யமென்றும், பாகவதப்ரீதிவிஷயமான வாசார்யகைங்கர்யத்தை பாகவதகைங்கர்யமென்றும் சொல்லிற்றாயிற்று. ஆகையாலாசார்யகைங்கர்யம் ப்ராப்யமென்றுசொன்னவிதில் குறையில்லையென்று கருத்து.

௪௧௯. இப்படி யாசார்யகைங்கர்யமே சரமபர்வம் என்று சாஸ்த்ரம் சொல்லாதிருக்கச்செய்தே இதுவருகிறவழிதா னென்னென்கிற சங்கையிலே யருளிச்செய்கிறார், (ஸ்வரூபப்ராப்தியை) என்றுதுடங்கி. அதாவது- "పరంజ్యోతిరుపసమ్పద్య స్వేనరూపేణాభినిష్పద్యతే" "பரம்ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே" என்று பரப்ராப்தி பூர்விகையா யநாதிகர்ம நிபந்த்தநாசித்ஸம்பந்த்தத்தாலே மலாவகுண்ட்டித மணிப்ரபை

ஆ.—ப்ராப்தி பலமாய்க்கொண்டு "ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந்" "ஏகதாபவதி" "ஸோ உச்நுதேஸர்வாங்காமாங்" "ஏகதாபவதி" இத்யாதிஸித்த பகவதநுபவஜநித ப்ரீதிகாரிதகைங்கர்யம் புருஷார்த்தமாய் வருகிறுப்போலே, ப்ராப்திபலகைங்கர்யமாகிற ஸாத்யத்தினுடைய தத்ப்ரதிஸம்பந்தி ப்ரீதிவர்த்தக வ்ருத்திஹேதுவாய்க்கொண்டு மத்யமபர்வமானபாகவத கைங்கர்யமும், தத்ப்ரீத்யதிசயநிபந்தந விசேஷவ்ருத்திஹேதுவாய்க் கொண்டு சரமபர்வமான வாசார்யகைங்கர்யமும், ராகப்ராப்தமாகத்தன்னடையே வரக்கடவதென்கிறுர்.

சுகச. சரம கைங்கர்யாதிகாரத்தினருமையை யருளிச்செய்கிறுர் மேல்; இந்த சரமபர்வமான வாசார்யகைங்கர்யம் தான், ஏதத்ருசிப்ரதிபந்தக ப்ராபல்யத்தாலே மிகவும்துர்லபம்.

சுகரு. இதின் துர்லபத்வத்தை விவரிக்கிறுர் மேல்; உபதேசாதிகளால் மீட்கவொண்ணுதபடி க்ஷுத்ரவிஷய ப்ரவணனுனவனுக்கு விடில் முடிவனென்னும்படியான வவ்விஷயத்தை, தோஷதுஷ்டமப்ராப்தமென்றுவிட்டு விலக்ஷணமாய் ப்ராப்தமானபூர்ண பகவத்விஷயத்திலேவருந்தி வருகைக்குள்ள வருமைபோலன்று, தன்னிலேகதேசத்திலே சுழியாறுபடுத்து மபரிமிதபோக்யதம ஸ்வரூபாதியையுடைய ப்ரதமபர்வமான பகவத் விஷயதத்கைங்கர்யங்களிலாழங்கால் படுகையைவிட்டு, ததிஷ்டதமமான

---

ப்ராப்திபலமாய்க்கொண்டு கைங்கர்யம் வருகிறுப்போலே, ஸாத்யவிவ்ருத்தியாய்க்கொண்டு சரமபர்வம் வரக்கடவது.

சுகச. இதுதான் துர்லபம்.

சுகரு. விஷயப்ரவணனுக் கத்தைவிட்டு பகவத்விஷயத்திலே வருகைக்குள்ள வருமைபோலன்று, ப்ரதமபர்வத்தை

---

ஜீ.—போலே திரோஹிதமான ஸ்வாஸாதாரணுகாரத்தினுடைய வாவிர்ப்பாவரூபையான ப்ராப்தியே வேதாந்தசாஸ்த்ரம் புருஷார்த்தமாகச் சொல்லாநிற்க, இப்படி யாவிர்ப்பூதமான ஸ்வரூபத்தையுடையவாத்மா, சேஷத்வைக நிரூபணீயதயா சேஷிவிஷய கிஞ்சித்காரத்தாலல்லது செல்லாதபடியாயிருக்கையாலே, அந்த ஸ்வரூபப்ராப்தி பலமாய்க்கொண்டு பகவதநுபவஜநித ப்ரீதிகாரித கைங்கர்யம் வருகிறுப்போலே, சேஷியான பகவானுக்கு ஸ்வவிஷயகிஞ்சித்காரத்திலும் ஸ்வகீயவிஷய கிஞ்சித்கார முகப்பாகையாலே, அந்தபகவத்கைங்கர்யமாகிற ஸாத்யத்தின் வ்ருத்திரூபமாய்க்கொண்டு மத்யமபர்வமான பாகவதகைங்கர்யம் வரக்கடவதாய், அந்த பாகவதரெல்லார்க்கும் ஸ்வவிஷய கிஞ்சித்காரத்திலும் தனக்குபகாரகனுன வாசார்யவிஷயத்தில் கிஞ்சித்காரமே யுகப்பாகையாலே அந்த ஸாத்யத்தினுடைய விசேஷவ்ருத்தியாய்க்கொண்டு சரமபர்வமான வாசார்ய கைங்கர்யம் வரக்கடவதென்கை.

சுகச. இந்த சரமபர்வலாபத்தி னருமையைத்தர்சிப்பிக்கிறுர் மேல், (இதுதான் துர்லபம்) என்று.

சுகரு. இது தன்னை விவரிக்கிறுர் மேல், (விஷயப்ரவணனுக்கு) என்று துடங்கி. அதாவது க்ஷுத்ரவிஷயங்களின் புறப்பூச்சான வைலக்ஷண்யத்திலே யீடுபட்டு மீட்கவொண்ணுதபடி யவற்றிலே ப்ரவணனுய் நின்றவனுக்கு அவற்றைக் கைவிட்டு வகுத்த விஷயமான பகவத் விஷயத்திலே வருகைக்குள்ள வருமைபோலன்று "பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரியான" பகவத்விஷய ப்ரவணனுய் தத்கைங்கர்ய நிரதனுனவனுக்கு ப்ரதம

ஆ.—சரமபர்வமாகிற வாசார்யவிஷயத த்கைங்கர்யங்களிலே, தத்ப்ரீத்யதிசயத்தைப்பின்சென்று பிற்காலியாமல் வருகைக்குள்ளவருமை.

௪௧௬. வாழ்க்கைப்பட்டசிறுபெண் தாய்தமப்பனையும் பிறந்தகத்தையும்விட்டு புரிந்து கடைக்கணிசிப்பது கண்ணநீர் மல்குவதாய்க்கொண்டு பர்த்தாவின்பின் புக்ககத்துக்குப் போகிறவருமையுண்டிறே யிதிலும்; அவ்வருமையை விவரிக்கிருர் மேல்; அந்த க்ஷுத்ரவிஷயங்களில் மாம்ஸாஸ்ருகாதிமயத்வ துர்க்கந்த்தபூயிஷ்ட்டத்வாதி தோஷதர்சநத்தாலேயருவறுத்து அவற்றினின்றும் மெள்ள மீளலாம்; நிரவதிகதேஜோமயத்வ நிரவதிக ஸுகந்த்தத்வாதி திவ்யகுணபூர்ணமாய் த்ருஷ்டிசித்தாபஹாரியான பகவத்விஷயத்தில் சிலதோஷம்கண்டதாய் விடவொண்ணுது. "సఙ్ఖ్యాతుం నైవశక్యన్తే గుణా దోషాశ్చశార్ఙ్గిణః । ఆనన్త్యాత్ప్రథమోరాశి రభావాదేవపశ్చిమః" "ஸங்க்யாதும்நைவசக்யந்தே குணுதோஷாச்சசார்ங்கிண꞉ | ஆநந்த்யாத்ப்ரதமோராசி ரபாவாதேவபச்சிம꞉" என்று தோஷஸத்ப்பாவாபாவஸித்த்த நிர்தோஷத்தாலே தோஷதர்சநம்பண்ண யோக்யதையு மற்றவிஷயமிறேயிது.

௪௧௭. "கடியன்கொடியன்" இத்யாதியால் சொல்லுகிறவாற்ருமையில் தோற்றும் சிலதோஷமுண்டானுலும் "என் நெஞ்சமவனென்றே கிடக்கும்" என்னும்படி மேல்விழப்பண்ணும் குணம்போலே மேல் விழப்பண்ணும் குண முபாதேயமாயிருக்கும்.

---

விட்டு சரமபர்வத்திலே வருகைக்குள்ளவருமை.

௪௧௬. அங்கு தோஷதர்சநத்தாலே மீளலாம்; இங்கதுசெய்யவொண்ணுது.

௪௧௭. தோஷமுண்டானுலும் குணம்போலே யுபாதேயமாயிருக்கும்.

---

ஜீ.—பர்வமானவற்றை விட்டு சரமபர்வமான வாசார்ய கைங்கர்யத்திலே வருகைக்குள்ள வருமையென்றபடி.

௪௧௬. அதெங்ஙனே யென்னு மாகாங்க்ஷையிலே யருளிச்செய்கிருர், (அங்கு) என்று துடங்கி. அதாவது க்ஷுத்ர விஷயங்களில் தேஹதோஷாதிகளுமல்பாஸ்த்திரத்வாதிதோஷங்களுமுண்டாயிருக்கையாலே அவற்றை தர்சிக்கவே யருவறுத்து மீளலாயிருக்கும்; விலக்ஷணவிக்ரஹயுக்தமாய் ஸமஸ்தகல்யாணகுணுத்மகமாய் நித்யமாயபரிச்ச்சேத்யமானவிவ்விஷயத்தில் தோஷகந்த்தமில்லாமையாலே, தோஷதர்சநம்பண்ணி மீளப்போகாதென்கை. "సఙ్ఖ్యాతుం నైవశక్యన్తే గుణా దోషాశ్చశార్ఙ్గిణః । ఆనన్త్యాత్ప్రథమోరాశి రభావాదేవపశ్చిమః" "ஸங்க்யாதும்நைவசக்யந்தே குணுதோஷாச்சசார்ங்கிண꞉ | ஆநந்த்யாத்ப்ரதமோராசி ரபாவாதேவபச்சிம꞉" என்னக்கடவதிறே.

௪௧௭. க்ஷுத்ர விஷயங்களுக்குச் சொல்லுகிற தோஷமொன்றுமிங்குச் சொல்லலாவதில்லையே யாகிலும், ஸ்வவிஷயபக்தி பரவசர்க்கு ஸம்ச்லேஷ ஸுகத்தை யுருவகடத்தாதேவிச்லேஷித்து துக்கத்தைவிளைக்கையாலே "கடியன் கொடியன்" இத்யாதிப்படியே சொல்லலாம்படிதோற்றுவன சிலதோஷமுண்டே, அது தான் மீளுகைக்குடலாமோ வென்ன வருளிச்செய்கிருர், (தோஷமுண்டானுல்) என்று துடங்கி. அதாவது அப்படி யாற்ருமையாலே தோற்றுவன சில தோஷமுண்டானுலும், "கொடியவென்னெஞ்ச மவனென்றே கிடக்கும்" என்று அவை தன்னை விரும்பி மேல் விழும்படி யிருக்கையாலே ஹேயமாயிராது; விஷயத்தை விரும்பி மேல் விழுகைக்குடலான குணம்போலே உபாதேயமாயிருக்குமென்கை.

ஆ.—௪௧அ. குணமுபாதேயமாமத்தனை யல்லது, தோஷமுபாதேயமாமோவென்ன; குணமுபாதேயமாய் தோஷமநுபாதேயமாய் லோகஸ்வபாவம்போலன்றியே, இந்த பகவத்விஷயத்திலே குணதோஷவிபாகமற விரண்டு முபாதேயமாம்படி லோகஸ்வபாவ விபரீதமாய்க்கொண்டு வ்யாவ்ருத்தமாயிறே யிருப்பதென்கிறார்.

௪௧௯. ஆச்ரயணவைலக்ஷண்யம் தோஷகுணவிபாகமறுக்குமென்கிறார் மேல்; விலக்ஷணபகவத்குணம் தத்ப்ரவணர்க் குபாதேயமாகைக்கீடான ப்ராப்தாபிமதசேஷியைப்பற்றி நிற்கையாகிறஹேது, தத்தோஷம் போலத்தோற்றுகிற வற்றுக்குமுண்டிறே; அபிமதவிலக்ஷண விஷயதோஷ மபிமதமாமித்தனையிறே.

௪௨௦. பிறர் தோஷம்சொல்லக்கேட்கவும் பொறுத விஷயஸ்வபாவத்தை யறியும் விசேஷவசநார்த்தத்தைக் காட்டுகிறார் மேல், (நிர்க்க்ருணன்) இத்யாதியால். "எனதவளவண்ணர்தகவுகளே" என்றிங்ஙனே யிருந்தின சுத்தஸ்வபாவருடைய க்ருபைகள், இங்ஙனொத்த க்ருபாளுக்க ளுண்டாகவே பெண்பிறந்தார்க்கினி வாழலாமிறே என்று பெண்பிள்ளை யாற்றாமைகண்டு திருத்தாயார் நிர்க்க்ருணனென்றுசொல்லி வாய்

---

௪௧அ. லோகவிபரீதமாயிறே யிருப்பது.

௪௧௯. குண முபாதேயமாகைக்கீடானஹேது தோஷத்துக்கு முண்டிறே.

௪௨௦. நிர்க்க்ருணனென்ன வாய் மூடுவதற்குமுன்னே க்க்ருணவானென்று சொல்லும்படியாயிருந்ததிறே.

---

ஜீ.—௪௧அ. லோகத்தில் தோஷம் ஹேயமாய் குணமுபாதேயமாயன்றோ யிருப்பது, தோஷம் குணம்போலே யுபாதேயமாமோவென்ன வருளிச்செய்கிறார், (லோகவிபரீதம்) என்று துடங்கி. அதாவது தோஷம் விடுகைக்குடலாய் குணம் பற்றுகைக்குடலாயிருக்கும் லோக ப்ரக்ரியை யன்றியே, தோஷமும் குணம்போலே யுபாதேயமாயிறே யிவ்விஷயத்திலிருப்பதென்கை.

௪௧௯. எல்லாஞ் செய்தாலும் தோஷம் குணம்போலே யுபாதேயமாகக்கூடுமோ வென்னு மாகாங்க்ஷையிலே யருளிச்செய்கிறார், (குணமுபாதேயமாகைக்கு என்றுதுடங்கி. அதாவது பகவத்குணம் தத்ப்ரவணர்க்குபாதேயமாகைக்கீடான ப்ராப்தசேஷிகதத்வமாகிற ஹேது, அவ்விஷயத்தில் தோற்றுகிற தோஷத்துக்கு முண்டிறே யென்கை, இத்தலவன் பக்கலுள்ளதென்னுமத்தாலே குணமுபாதேயமாகிறவோபாதி அவன் பக்கலுள்ளதென்னுமத்தைப்பற்ற தோஷமு முபாதேயமாகக் குறையில்லை யென்றதாயிற்று. இப்படி யாகையால் தோஷமுண்டானாலுமது மீளுகைக்குடலாகாதென்று கருத்து.

௪௨௦. விச்லேஷதசையில் தோற்றும் நைர்க்க்ருண்யாதி தோஷத்தை யங்கீகரித்து, அது தான் குணவதுபாதேயமா யிருக்கும்படியை யருளிச் செய்தார் கீழ்; அந்த நைர்க்க்ருண்யாதி தோஷம் தான் முதலிலே யிவ்விஷயத்திலில்லை யென்னுமிடத்தை அபியுக்த வசநங்களாலே தர்சிப்பிக்கிறார் மேல், அதில் முதலிலே ஆழ்வாருடைய வசநத்தைத் தர்சிப்பிக்கிறார், (೧೭೩೬) (நிர்க்க்ருணன்) என்று துடங்கி. அதாவது "எனதவளவண்ணர் தகவுகளே" என்று எங்ஙனேயிருந்தின சுத்தஸ்வபாவரான வும்முடைய க்ருபைகள், நாட்டிலே யிப்படி ருஜுக்களுமாய் பரதுஃக்காஸ

ஆ.—மூடுவதற்குமுன்னே, "தகவுடையவனேயென்னும்" என்றவள் வாயைப்புதைத்தாப்போலேநித்யக்ருபையை நிரூபகமாகவுடையவனென்று க்க்ருணாவானென்று சொல்லும்படியே நிர்தோஷஸகலகுண ஸம்பூர்ண மாயிறே விஷயமிருப்பது.

௪௨௧. குணஹாநி சொல்லப்புக அத்தைத் தள்ளியிப்படிகுணம்சொல்லப்பண்ணிற்று "தகவுடையவன் க்ருபையாலேசென்று" "பின்னும்மிக விரும்பும்" என்று ஸ்நேஹமும் "பிரானென்னும்" என்றுபகாரஸ்ம்ருதியு முடனே நடந்ததிறே. தோஷச்ரவணவேளையிலே குணக்ரஹணம் பண்ணுவித்தமைக்கு நெஞ்சாறல் படவேண்டினவிஷயமிறே.

௪௨௨. "[Telugu-script śloka] ''" "க்க்யாதஃப்ராஜ்ஞஃக்ருதஜ்ஞச்ச ஸாநுக்ரோசச்ச ராகவஃ | ஸத்வ்ருத்தோ நிரநுக்ரோசஃ சங்கேமத்ப்பாக்ய ஸம்க்ஷயாத்" என்று நாச்சியார் "[Telugu-script]" "நிரநுக்ரோசச்சங்கே" என்று பெருமாளை நிர்க்க்ருணராகச்சங்கித்து நெஞ்சுநிறைந்தது வாய்கொள்ளாமல்சொல்லுமாற்றாமை கரைபுரண்ட வவஸ்த்தையிலும், "[Telugu-script]" "மத்ப்பாக்யஸம்க்ஷயாத்" இப்படி சங்கிக்கைக்கடி யென்பாக்ய ஹாநியென்று சங்காகாரணத்தை குணகஸ்மரணம்பண்ணாத ஸ்வகதமாக விறே சொல்லித்தலைக்கட்டுவது.—"[Telugu-script śloka]" "நமந்த்ராயாநசமாதுரஸ்யா தோஷோநராஜ்ஞோ நசராகவஸ்ய | மத்பாபமேவாத்ரநிமித்தமாஸீத்வநப்ரவேசேரகுநந்தநஸ்ய" என்று நம்மைக்கைவிட்டுப்போன

---

௪௨௧. இப்படி சொல்லும்படிபண்ணிற்று க்ருபையாலே யென்று ஸ்நேஹமு முபகாரஸ்ம்ருதியும் நடந்ததிறே.

௪௨௨. நிர்க்க்ருணனாக சங்கித்துச் சொல்லுமவஸ்த்தையிலும் காரணத்தை ஸ்வகதமாகவிறே சொல்லிற்று.

---

ஜீ.—ஹிஷ்ணுக்களுமா யிருப்பார் சில தார்மிகர் நடையாட அபலைகளுக்கு அழகியதாகக் குடிக்கிடக்கலாயிருந்ததென்று பெண்பிள்ளை யாற்றாமைக்குதவாததுகொண்டு திருத்தாயார் நிர்க்க்ருணனென்னவாய்மூடுவதற்கு முன்னே அவள் வாயைப்பொதைத்தாப்போலே "தகவுடையவனே" என்று கெடுவாய் ஆகரத்தில் தகவு மறுக்குமோ, அது நம் குற்றம்காணென்று க்க்ருணவத்தையைச் சொல்லும்படியா யிருந்ததிறே யென்றபடி.

௪௨௧. இவ்வுக்திதான் தாயார் சொன்ன குணஹாநிக்கு ஒரு பரிஹாரம் பண்ணினமாத்ரமோ ஸஹ்ருதயமாகச் சொன்னதோ வென்கிற சங்கையிலே அதின் ஸஹ்ருதயத்வத்தை மூதலிக்கிறார், (இப்படி) என்று துடங்கி. அதாவது குணஹாநி சொன்னத்தைத் தள்ளி குணம் சொல்லும்படி பண்ணிற்று க்ருபையாலே யென்று "மிக விரும்பும்" என்று ஸ்நேஹமும், "பிரான்" என்றுபகார ஸ்ம்ருதியும் நடந்ததிறே; ஆகையால் "தகவுடையவனே" என்றவிது ஸஹ்ருதயோக்தி யென்கை.

௪௨௨. அநந்தரம் பிராட்டியுடைய வசநத்தைத் தர்சிப்பிக்கிறார், (நிர்க்க்ருணனாக) என்று துடங்கி. அதாவது பிரிவாற்றாமையிலே பெருக்க நலங்கின ஸ்ரீ ஜநகராஜன் திருமகள் பெருமாள் தன்னாற்றாமைக்குதவ வந்து முகம் காட்டப்பெறாத வின்னாப்போலே, "[Telugu-script śloka]" "க்க்யாதஃப்ராஜ்ஞஃக்ருதஜ்ஞச்ச ஸாநுக்ரோசச்ச ராகவஃ | ஸத்வ்ருத்தோநிரநுக்ரோசஃசங்கே" என்று பெருமாளை

ஆ.—நைர்க்க்ருண்யதோஷம் பெருமாளுக்குண்டென்று சங்கித்துச்சொல்லும் தத்விச்லேஷ கலுஷசித்தராகிற வவஸ்த்தையிலும், வநகமநகாரண தோஷத்தை "மத்பாபமேவ" "மத்பாபமேவ"என்று ஸ்வகதமாகவிறே ஸ்ரீபரதாழ்வான் சொல்லுவதென்று மருளிச்செய்வர்.

௪௨௩. ஆக தோஷமுண்டென்று வாய்கூப்புவதற்கு முன்னே தத்பரிஹாரமாக குணமுண்டென்றே சொல்லித்தரிக்க வேண்டும்படியாய், தோஷமுண்டென்று சங்கிக்கைதான் ஸ்வதோஷமாம்படியாய், தோஷமுண்டேயாகிலு மதுதானுபாதேயமாம்படி யிருக்கும் விஷயமாகையாலே, தோஷம்கண்டு மீளலாம் விஷயமல்லவென்று பின்னேசேர்த்தி, ப்ரதம பர்வ விரோதியை யறுக்கும் தத்குணம்போலன்று சரம பர்வ விரோதியான தத்தோஷமென்கிறார் மேல், (குணதோஷம்) (குணதோஷம்) இத்யாதியால். அந்த பகவத்விஷயத்தின் ஸ்வரூப குணமும் ரூப ஸௌந்தர்ய

---

௪௨௩. குணதோஷங்களிரண்டும் க்ஷுத்ர புருஷார்த்தத்தையும்

---

ஜீ.—நிர்க்க்ருணனுகச்சங்கித்துச் சொல்லுகிற வவஸ்த்தையிலும், "மத்பாக்யஸம்க்ஷயாத்" "மத்பாக்யஸம்க்ஷயாத்"என்றிப்படி சங்கிக்கைக்கடியென்னுடைய பாக்யஹாநியென்கையாலே சங்காகாரணத்தை ஸ்வகதமாகவிறே சொல்லிற்றென்கை.

௪௨௩. (ப்ரதம பர்வத்தை விட்டு) என்கிற விடத்தில் அர்த்தாதுக்தமான பகவத் ஸம்ச்லேஷமும், (தோஷமுண்டானாலும்) என்கிற விடத்தில் அர்த்தாதுக்தமான பகவத்விச்லேஷமுமாகிற விவை யிரண்டும் செய்யுமத்தை யருளிச்செய்கிறார், (குணதோஷங்களிரண்டும்) என்று துடங்கி. குணமாவது ஸ்வஸௌந்தர்யாதிகளை யாச்ரிதற்கு முற்றூட்டாக வநுபவிக்கக் கொடுத்துக்கொண்டிருக்கும் கலவி; தோஷமாவது அவ்வநுபவாலாபத்தாலே யவர்கள் கண்ணுஞ்சுழலை யிட்டுத்துடிக்க தான் முகம் காட்டாதிருக்கை யாகிறபிரிவு; (இவை யிரண்டும் க்ஷுத்ர புருஷார்த்தத்தையும் புருஷார்த்தகாஷ்ட்டையையும் குலைக்கையாவது)ஓரொன்றே யிரண்டையும் குலைக்கை; இதில் குணமிரண்டையும் குலைக்கையாவது—"மால் பால் மனஞ்சுழிப்ப மங்கையர் தோள் கைவிட்டு" என்றும் "மனைப்பால் பிறந்தார் பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம் துறந்தார் தொழுதாரத்தோள்" என்றும் தத்விஷய வைலக்ஷண்யத்தாலே க்ஷுத்ரவிஷய வைராக்யத்தைப் பிறப்பிக்கையாலே, க்ஷுத்ர புருஷார்த்தாந்வயத்தைக் குலைக்கையும், பயிலுஞ்சுடரொளியிலே ததீயசேஷத்வத்திலே யூன்றின வாழ்வாரை அந்தத்ததீயருடைய ஸ்வரூப நிரூபகத்வேந ப்ரஸ்துதமான தத்ஸௌந்தர்ய சீலாதிகளாலே ததீயதாஸ்ய ரஸத்தை மறந்து அவனை யநுபவிக்கையி லாசை கரைபுரண்ட வநந்தரம் திருவாய்மொழியிலே தாமும் தம்முடைய கரண க்ராமங்களும் பெருவிடாய்ப் பட்டுக்கூப்பிடும்படி பண்ணினுப்போலே, வேறொன்றுக்காகப் புகுந்தாலும் தன்னை யொழிய புறம்பொன்றுக்காளாகாதபடி பண்ணும் "* த்ருஷ்டிசித்தாபஹாரியானவன் பக்கலிலே சுழியாறுபடுத்தி புருஷார்த்த காஷ்ட்டையானததீயசேஷத்வத்தில் நிலையைக் குலைக்கையும். தோஷ மிரண்டையும் குலைக்கையாவது—அநுபவாலாபக்லேசத்தாலே ஸர்வகாலமும் தன் பக்கலிலே மனஸ்ஸாய் "உண்டறியாளுறக்கம் பேணாள்" "பந்தொடு கழல் மருவாள் பைங்கிளியும் பாலூட்டாள் பாவை பேணாள்" என்கிறபடியே முன்பநுபவித்துப் போந்த ப்ராக்ருத போகங்களாகிற க்ஷுத்ர புருஷார்த்தங்களில் பொருந்

ஆ.—தோஷமுமாகிறவிரண்டிலும் வைத்துக்கொண்டு, குணம் அல்பாஸ்த்திரமானக்ஷுத்ர புருஷார்த்தங்களைக்கவ்விநிற்கிற நிலையைக்குலைத்து தன் பக்கலிலே வர வசீகரிக்கும்; அழகாகிற தோஷம் பகவத்கைங்கர்ய புருஷார்த்த காஷ்ட்டையான வாசார்ய கைங்கர்யத்தைப் பற்றிநிற்கிற நிலையைக் குலைத்து தன் பக்கலிலே சுழித்தழுத்தும்.

௪௨௪. ஸௌந்தர்யத்தின் சரம புருஷார்த்த பஞ்சகத்வத்தை மூதலிக்கிறார் மேல்; "శత్రుఘ్నో నిత్యశత్రుఘ్నః" "சத்ருக்க்நோ நித்யசத்ருக்க்நஃ" என்று பரதாநுவ்ருத்தி விரோதியான ராமஸௌந்தர்யமாகிற நித்யசத்ருவை ஜயித்திருக்கும் ஸ்ரீசத்ருக்க்நாழ்வானென்னும்படி சரமகைங்கர்யநித்ய சத்ருவாயிறே பகவத் ஸௌந்தர்ய மிருப்பதென்கிறார். . "ఏవం రూపభగవద్దోషః" "ஏவம் ரூபபகவத்தோஷம்" சரமத்தில் வரவொட்டாமல் சுழியாறு

---

புருஷார்த்தகாஷ்ட்டையையும் குலைக்கும்.

௪௨௪. நித்யசத்ருவாயிறே யிருப்பது.

---

ஜீ—தாமையை விளக்கையும்; "அவனடியார் சிறுமாமனிசராயென்னையாண்டாரிங்கே திரிய—செந்தாமரைக்கட்டிருக்குறளன்நறுமாவிரை நாண் மலரடிக்கீழ்ப்புகுதல்—உறுமோபாவியேனுக்கு" என்றும் "தனிமாத்தெய்வத்தளிரடிக்கீழ்ப்புகுதலன்றி யவனடியார் நனிமாக்கலவி யின்பமே நாளும் வாய்க்க நங்கட்கே" என்று மிப்படி தத்விஷய ஸம்ச்லேஷ ரஸம்வேண்டாதபடி ததீயவிஷய ஸம்ச்லேஷ ரஸமே யமையுமென்றிருக்குமவர்களையும், அந்தத்ததீயருடனே கூடி யிருந்தாலும் அவர்கள் பக்கல்நெஞ்சற்று, அவனை யநுபவிக்கையிலாசையாலே "காணவாராய்" "காணுமாறருளாய்" என்று கூப்பிடுவது, "வெஞ்சிறைப்புள்" இத்யாதிகளாலே அவர்கள் தங்களோடே வெறுத்து வார்த்தை சொல்லுவதாம்படி பண்ணுகையாலே, புருஷார்த்த காஷ்ட்டையில் நெஞ்சு பற்றாதபடி பண்ணுகையும்.

௪௨௪. இதில் க்ஷுத்ர புருஷார்த்தத்தைக் குலைக்குமென்ற விது தன் பக்கலிலே யகப்பட்டாரைப் புறம்பொரு விஷயமறியாதபடிபண்ணு மிவ்விஷயத்தின் ஸ்வபாவம் சொல்லுகைக்காகக் கூப்பிட்டுக்கொண்ட வித்தனை, புருஷார்த்த காஷ்ட்டையைக் குலைக்குமென்னு மதுவே யிவ்விடத்திலபேக்ஷிதம்; ஆனபின்பு க்ஷுத்ரபுருஷார்த்த பஞ்சகத்வம் ப்ராஸங்கிகமாகையாலே, அத்தைவிட்டு ப்ராகரணிகமான சரம புருஷார்த்தபஞ்சகத்வத்தை மூதலிக்கிறார். (நித்ய சத்ருவாயிறே யிருப்பது) என்று. அதாவது, "శత్రుఘ్నో నిత్యశత్రుఘ్నః" "சத்ருக்க்நோ நித்யசத்ருக்க்நஃ" என்று பெருமாளுக்கு அபிமதவிஷயமான ஸ்ரீபரதாழ்வானையே தமக்குத்தேச்யமாகப் பற்றி அவனையல்லதறியாதே யருக்கும் ஸ்ரீசத்ருக்நாழ்வான் பரதாநுவ்ருத்திக்கு விரோதியான ராமஸௌந்தர்யமாகிற நித்ய சத்ருவை ஜயித்திருக்குமென்கையாலே, ததீயகைங்கர்ய நிஷ்ட்டனுக்கு நித்யசத்ருவாயிறே பகவத்ஸௌந்தர்ய மிருப்பதென்கை. ஆகையாலிப்படி விலக்ஷணமான விஷயத்தில் ஸம்ச்லேஷ விச்லேஷங்களிரண்டும் புருஷார்த்த காஷ்ட்டையைக் குலைக்குமென்னக்குறையில்லை யென்று கருத்து.—அன்றிக்கே கீழ்ச்சொன்ன குணதோஷங்களிரண்டும் செய்யுமத்தை யருளிச்செய்கிறார், (குணதோஷங்களிரண்டும்) என்று துடங்கி. குணமாவது—(இங்கது செய்யவொண்ணாது) என்கிற விடத்தில் சொன்ன "பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரியான ஸௌந்தர்யசீலாதிகள்; தோஷமாவது—குணம்போலே யுபாதேயமாயிருக்கும்) என்கிற விடத்தில் சொன்ன "கடியன் கொடியன்" இத்

ஆ.—படுத்தி தன் பக்கலிலே சுழலப்பண்ணுமதாகையாலே சரமபர்வமான வாசார்ய கைங்கர்யம் துர்லபம்; அதமுக்குண்ணுமை லவ்வளவும் வரப்பெறில் அலப்ய லாபம், இது ப்ரதம பர்வார்வயபல சரம ப்ராப்யமென்று கீழே ஸம்பந்தம்.

௬௨௫. மேலிந்த ப்ராப்யாநுரூபமான ப்ராபக நிர்ணயம் பண்ணுகிறார், (இப்படி ப்ராப்யம்) இத்யாதியால். சரம பர்வ மாசார்ய கைங்கர்யமென்றிப்படி ஸ்வரூபாநுரூபப்ராப்யத்தை தாத்பர்ய சாஸ்த்ர ச்ரவணத்தாலே ஸம்சயமற வறுதி யிட்டால் இந்த சரமப்ராப்யத்துக்கு சரமமாய்க் கொண்டு ஸத்ருசமாக வேணுமிறே தத்ப்ராபகம்.

௬௨௬. ப்ராப்ய ப்ராபக மிரண்டு மேகவிஷயத்தில் கொள்ளாதபோது, சரம ப்ராப்ய ப்ராபகங்களிரண்டுக்கும் ப்ராப்யமே ப்ராபகமான வைக்ய

---

௬௨௫. இப்படி ப்ராப்யத்தை யறுதி யிட்டால், அதுக்கு ஸத்ருசமாக வேணுமிறே ப்ராபகம்.

௬௨௬. அல்லாதபோது ப்ராப்யப்ராபகங்களுக்கைக்யமில்லை.

---

ஜீ.—யாதிகள். (இரண்டும் க்ஷுத்ரபுருஷார்த்தத்தையும் புருஷார்த்த காஷ்ட்டையையும் குலைக்கும்) என்றது—ஓரொன்றே யிரண்டையும் செய்யுமென்றபடி. குணமிரண்டையும் செய்கையாவது“மனைப்பால் பிறந்தார்பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம் துறந்தார் தொழுதாரத்தோள்” இத்யாதிகளில் சொல்லுகிறபடியே க்ஷுத்ர புருஷார்த்தத்தைக் குலைக்கையும், ஸ்வவைலக்ஷண்யத்தாலே ஆழங்கால் படுத்தி புருஷார்த்த காஷ்ட்டையான ததீயசேஷத்வ நிலையைக் குலைக்கையும்; தோஷமிரண்டையும் குலைக்கையாவது—குணம்போலே யுபாதேயமாய் “*அவனென்றே கிடக்கும்படி பண்ணுகையாலே யூணுறக்கம் பந்துகழல் முதலானவற்றில் பொருந்தாமையை விளைத்து க்ஷுத்ர புருஷார்த்தத்தைக் குலைக்கையும், “சிறுமாமனிசராயென்னையாண்டாரிங்கே திரிய—நறுமாவிரை நாண்மலரடிக்கீழ்ப் புகுதல்— உறுமோ”என்னும்படியான புருஷார்த்த காஷ்ட்டையைக் குலைக்கையுமென்றிங்ஙனே யோஜிக்கவுமாம். இந்த யோஜனைக்கு (நித்யசத்ரு) என்கிறது ஸௌந்தர்யாதிகுணவிசிஷ்டவஸ்து விஷயமாகக் கடவது. அங்ஙனுமன்றிக்கே குணம் புருஷார்த்த காஷ்ட்டையைக் குலைக்குமென்னுமதுக்கும் தோஷம் க்ஷுத்ர புருஷார்த்தத்தைக் குலைக்குமென்னுமதுக்கும், பூர்வயோஜனைகளில் சொன்னபடியே பொருளாகக் கடவது. இவ் விஷயஸ்வபாவமிதுவாகையாலே சரம பர்வமான வாசார்ய கைங்கர்யமாகிற விதுதான் துர்லபமென்று ஸிம்ஹாவலோகநந்யாயத்தாலே கீழோடேயக்வயம்.

௬௨௫. (ஸ்வரூபத்துக்கும் ப்ராப்யத்துக்கும் சேர்ந்திருக்க வேணுமிறேப்ராபகம்) என்றவிதில் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யம் சரமபர்வமான வாசார்யகைங்கர்யமென்று நிர்ணயித்தாராய் நின்றார்கீழ்; இந்த ப்ராப்யாநுரூபமான ப்ராபகநிர்ணயம் பண்ணுகிறார் மேல், (இப்படி ப்ராப்யத்தை யறுதியிட்டால்) என்றுதுடங்கி. அதாவது இப்படி யாசார்ய கைங்கர்யமே ப்ராப்யமென்றறுதி யிட்டால் இந்த ப்ராப்யத்துக்குத் தகுதியாக வேணுமிறே யேதத்ப்ராபகமென்கை. இத்தாலாசார்யகைங்கர்யமாகிற சரமப்ராப்யத்துக்கு ஆசார்யனே ப்ராபகனாக வேணுமென்றபடி.

௬௨௬. இப்படி யல்லாதபோதுவரும் ஹாநியேதென்ன வருளிச்செய்கிறார்,(அல்லாதபோது)என்றுதுடங்கி. அதாவது இப்படியிப்ராப்யத்துக்கு

ஆ.—மில்லை; ப்ராப்ய மொன்றும் ப்ராபக மொன்றுமாய் விடும்; புல்லைக் காட்டி யழைத்துப் புல்லையிடுவாரைப் போலே பல ஸாதநங்களிரண்டுக்கும் பேதமில்லாமை சரம பர்வத்துக்கு மொக்குமிறே. இவ்வர்த்தத்தைப் ''பேறொன்று மற்றில்லை'' என்கிற பாட்டிலே அமுதனாரு மருளிச்செய்தார், ''உபாயோபேயபாவேந'' ''உபாயோபேயபாவேந'' என்றித்யாதி சாஸ்த்ர வசநமுமுண்டு.

௩௨௭. கீழே (உபாயம் தன்னைப் பொறுக்கும்) என்றீச்வரனை யுபாய மென்று சொல்லிவைத்து, ஆசார்யனே யுபாயமென்று கொள்ளுகைக்கடி தத்ஸுலபத்வ ஸுத்ருடத்வங்களைப் பற்ற வென்கிறார் மேல், (ஈச்வரனைப் பற்றுகை) இத்யாதியால். நிரங்குச ஸ்வதந்த்ரனான வீச்வரனை ஸுலபோ பாயமாகப் பற்றுகை, ஸ்வதந்த்ரனா யிருப்பானொருவன் கையைப்பிடித்து வேண்டிக்கொண்டு கார்யம் கொள்ளுமோபாதி, அவன் திமிறி யுதறுகை க்குடலாய்விடும்; ஸ்வாசார்ய பரதந்த்ரனுமாய் க்ருபாபரதந்த்ரனுமான ஸ்வாசார்யனை யுபாயமாகப் பற்றுகை, க்ருபாளுவான ஸுலபனுடைய காலைப்பிடித்து வேண்டிக்கொண்டு தன் கார்யம் கொள்ளுமோபாதி, இளநெஞ்சனாய்நின்றபோதே யபேக்ஷிதம் செய்து தலைக்கட்டுகைக்குடலாய்விடும். —,அன்றியே ஈச்வரனென்று ப்ரபத்திவிஷயமாகச் சொன்னவர்ச்சாவதார

௩௨௭. ஈச்வரனைப் பற்றுகை கையைப் பிடித்துக்காரியம் கொள்ளுமோபாதி;

ஜீ.—ஸத்ருசமாம்படி யாசார்யனை ப்ராபகமாகக் கொள்ளாதே ஈச்வரனை ப்ராபகமாகக்கொள்ளும்போது ப்ராப்யத்துக்கும் ப்ராபகத்துக்கும் தன்னிலைக்யமில்லையென்கை. ப்ரதம பர்வத்துக்குண்டான ப்ராப்யப்ராபகைக்யம் சரமபர்வத்துக்கு மொக்குமிறே; ஆகையிறே பிள்ளையமுதனார் ''பேறொன்றுமற்றில்லை நின் சரணன்றி யப்பேறளித்தற்கா றொன்றுமில்லை மற்றச் சரணன்றி'' என்று ப்ராப்ய ப்ராபகங்களிரண்டு மேகவிஷயமேயாக வருளிச்செய்தது.

௩௨௭. இப்ரபந்தத்தி லுபக்ரமமேபிடித்து (ஸ்வதந்த்ரனை) இத்யாதி வாக்யத்தளவும், ஸித்தோபாயதயா ஸகலசாஸ்த்ரஸித்தனானவீச்வரனே பரமோபாயமாகவும், ஆசார்ய னஜ்ஞாத ஜ்ஞாபநமுகேநோபகாரகனாகவுமிறே சொல்லிப்போந்தது; இப்போ தீச்வரனைவிட் டாசார்யனே யுபாயமென்னுமளவில் சாஸ்த்ரவிரோதமும் ஸ்வோக்திவிரோதமும் ஸம்ப்பவியாதோ, ஈச்வரனையுபாயமாகப் பற்றுமதில்காட்டில் ஆசார்யனை யுபாயமாகப்பற்றினால் வருமேற்றந்தா னேதோவென்கி றசங்கையின்மேலே யருளிச்செய்கிறார், (ஈச்வரனைப்பற்றுகை) என்றுதுடங்கி. அதாவது ஈச்வரனைப்பற்றுகை அவன் கையைப்பிடித்துக் காரியம்கொள்ளுமோபாதி; ஆசார்யனைப்பற்றுகை அவன்காலைப்பிடித்துக் காரியம்கொள்ளுமோபாதியென்கை. இங்ங னருளிச்செய்தது ஈச்வரவிஷயத்தோடு ஆசார்ய விஷயத்துக்குண்டான வநந்யத்வமும், அவ்விஷயத்தைப்பற்றுமதில் இவ்விஷயத்தைப் பற்றுமதுக்குண்டான கார்யஸித்தியி லமோகத்வமும் தோற்றுகைக்காக; அதெங்ஙனேயென்னில் சரணத்வோக்தியாலே ததநந்யத்வம் ஸம்ப்ரதிபந்நம். (ஈச்வரனைப்பற்றுகை யவன்கையைப்பிடித்துக்காரியம்கொள்ளுமோபாதி) என்கையாலே மஹாப்ரபுவாயிருப்பானொருவனை வசீகரித்துக்காரியம்கொள்ளுவானொருவன் அவன் கையைப்பிடித்து வேண்டிக்கொண்டு காரியம்கொள்ளப்பார்க்குமளவில் நீர்மையாலே

ஆ.—விக்ரஹமாய் அது கையினுடைய ஸ்த்தாநத்திலேயாய், இந்த வாசார்யவிஷயம் திருவடிகளுடைய ஸ்த்தாநத்திலேயாய் இரண்டுக்கு மவயவிபகவத்ஸ்வரூபமாய், அதில் கரஸ்த்தாநீயமான ஸுலபவிஷயத்தைப் பற்றுமதில் காட்டில் சரணஸ்த்தாநீயமான ஸுலபபகவத்விஷயத்தைப் பற்றுமதே ஸூசகமாய் ஸுத்ருடமுமாயிருக்கு மென்னுமருளிச்செய்வர்.

சஉஅ. இப்படி யாச்ரயண ஸுலபனுமளவேயல்ல ஆசார்யனுபயர்க்கு முபகாரகனு யிருக்குமென்கிறார் மேல், (ஆசார்யன்) இத்யாதியால். இப்படி யாச்ரயணஸுலபனான வாசார்யந்தான் சேஷசேஷி ஸாபேக்ஷரான சேஷி சேஷபூதரிருவர்க்கும் மஹோபகாரகன்.

சஉகூ. அதெங்ஙனே யென்ன ஸ்ருஷ்ட்யவதாரங்களி லொருவஸ்து வு மெட்டுப்படாமல் இழவாளனு யிடம்பார்த்துத் திரிகிற வீச்வரனுக்கு,

---

ஆசார்யனைப் பற்றுகை காலைப்பிடித்துக் காரியம் கொள்ளுமோபாதி.

சஉஅ. ஆசார்ய னிருவர்க்கு முபகாரகன்.

சஉகூ. ஈச்வர னுக்கு சேஷவஸ்துவை யுபகரித்தான் ;

---

ஜீ,—நெஞ்சிளகிக்காரியம் செய்யவுமாய், ஸ்வாதந்த்ர்யத்தாலே யுதறிவிடவுமா யிருக்கையாலே இன்னபடி யென்றறுதியிட வொண்ணுதாபோலே, ஆச்ரிதனுனவிவனுடைய வபேக்ஷிதம் தன்னுடையக்ருபையாலே நெஞ்சிளகிக்காரியம்செய்யில் பலிக்கும்படியாய், ஸ்வாதந்த்ர்யத்தாலே முறுகிச்செய்யாதொழியில் விபலிக்கும்படியா யிருக்கையாலும் ; (ஆசார்யனைப்பற்றுகை யவன்காலைப்பிடித்துக்காரியம்கொள்ளுமோபாதி) என்கையாலே அப்படி ப்ரபுவானவன் தன்னையே காலைப்பிடித்து வேண்டிக்கொண்டு காரியம்கொள்ளுமளவில் தயாபரவசனுய் காரியம்செய்தல்லது நில்லாமையாலே தப்பாமல்காரியம் ஸித்திக்குமாபோலே, ஆச்ரிதனுன விவனுடையவபேக்ஷித மறுதியாகப்பலிக்கும்படி யிருக்கையாலும் அமோகத்வம் ஸம்ப்ரதிபந்நம்.

சஉஅ. ஆக ப்ராப்யநிர்ணயத்தைப்பண்ணி (இதுக்குஸத்ருசமாக வேணுமிறே ப்ராபகம்) என்றவித்தாலே ஆசார்யகைங்கர்யமாகிற சரம ப்ராப்யத்துக்கு ஆசார்யனே ஸத்ருசோபாயமென்னுமத்தை ப்ரதிபாதித்து, அப்படி யன்றிக்கே ஈச்வரனை யுபாயமாகக்கொள்ளுமளவில் வரும் விரோதம்காட்டி, ஆசார்யனுக்கு ப்ராப்யத்வமீச்வரனோடந்வயத்தாலே யாமோபாதி ப்ராபகத்வமும் ததந்வயத்வ நிபந்தநமென்னுமத்தையும், ஈச்வரனைப்பற்றுமதி லிவனைப்பற்றுமதுக்குள்ள வேற்றத்தையு மருளிச்செய்தார்கீழ் ; இனிமேல் பலஹேதுக்களாலு மாசார்யவைபவத்தை ப்ரகாசிப்பிக்கிறார் இவ்விஷயத்தை யுபாயமாகப்பற்றுமவர்களுக்கு ருசிவிச்வாஸங்கள் விளைக்கைக்குறுப்பாக ; அதில்ப்ரதமத்திலே யீச்வரசேதநர்களிருவர்க்கு மிவனுபகாரகனுனமையை யருளிச்செய்கிறார், (ஆசார்யன்) என்றுதுடங்கி. அதாவது இப்படியுபாயமாகக் கீழ்ச்சொல்லப்பட்டவாசார்யன், சேஷிசேஷபூதரான வீச்வரசேதநரிருவர்க்கு மபிமதவஸ்துக்களைக்கொடுத்த வுபகாரகனென்கை.

சஉகூ. இரண்டுதலைக்கு மிவனுபகரித்தவை யிவையென்றருளிச்செய்கிறார், (ஈச்வரனுக்கு) என்றுதுடங்கி. அதாவது மேன்மேலும் ஸ்ருஷ்ட்யவதாராதிகளைப்பண்ணி வசீகரிக்கப் பார்த்தவிடத்திலும் ஓராத்மவஸ்துவு மெட்டுப்படாமையாலே இழவாளனுயிருக்கிற வீச்வரனுக்கு, சேஷ

ஆ.—ஸ்ரீகௌஸ்துபம்போல ஸ்ப்ருஹணீயமாய்சரீரதயாசேஷமான வாத்ம வஸ்துவை "*வன்சேற்றள்ளல் பொய்ந்நிலத்தே கண்டெடுத்துக் கழுவி அவன் திருக்கையிலே யுபகரித்தான்; அநாத்யவித்யையினாலே திரோஹிதஸ்வப்ரகாசனாய் ஸ்வாபாவிக சேஷத்வ முருவழிந்து அஸத்கல்பனான சேதநனுக்கு, ப்ராப்த நிரதிசய போக்ய சேஷியை *கையிற்கனியென்ன யுபகரித்தான். வஸ்து கெடுத்துத் தேடி யுழலுகிற வஸ்துமானுக்கு, அவ்வஸ்துவைக் கொடுத்துபகரித்தான், கண் கெட்டமிடியனுக்கு கண்ணைக்கொடுத்து மஹாநிதியைக்காட்டி யுபகரித்தான், சேஷிக்கு சரீரத்தை யுபகரித்தான். சேஷ பூதனுக்கு ப்ராணனை யுபகரித்தான். ஸாபேக்ஷனுக்கு நிரபேக்ஷவஸ்துவை யுபகரித்தான். நிரபேக்ஷனுக்கு ஸாபேக்ஷவஸ்துவை யுபகரித்தான். ஆக சேஷ சேஷிகளிருவர்க்கும் ஆசார்யோபகார ஸ்ம்ருதி பண்ணிக்கொண்டு அவன் சொல்லுற்றுச் செய்யும் பரதந்த்ரர்.

௨௩௦. இவ்வேற்றத்தைக் கண்ட ஸ்வதந்த்ரனான வீச்வரன் தானும் பரதந்த்ரசேஷித்வமாகிற வாசார்யசேஷித்வத்தை நாக்கு நீரூற வாசைப்பட்டுப் பேகணித்திருக்கும்; நாமுமிப்படி யுபகரிக்கும்படியான குருத்வம் பெற்று வாழப் பெறுவதுகாணென்றிருமாந்திருக்குமாபோலே.

௨௩௧. இப்படி யாசார்யத்வத்தை யாசைப்பட்டிருக்கையாலேயிறே, மறுவற்ற பரதந்த்ரசேஷி நிறையான குருபரம்பரையிலே ஸ்வதந்த்ரசேஷித்வ மிருமாப்பை மறைத்துக்கொண்டு மெள்ள வொரு தலையிலே யந்வயித்ததும்; ஆசார்யக்ருத்யத்தை நாச்சியார் விழித்து விழித்து பாவித்

---

சேதநனுக்கு சேஷியையுபகரித்தான்.

௨௩௦. ஈச்வரன் தானு மாசார்யத்வத்தை யாசைப்பட்டிருக்கும்.

௨௩௧. ஆகையிறே குருபரம்பரையிலே யந்வயித்ததும்

---

ஜீ.—மான வாத்மவஸ்துவை அஜ்ஞாத ஜ்ஞாபநமுகேந திருத்தி இஷ்ட விநியோகார்ஹமாம்படிக் கைப்படுத்தினான்; பகவத் ஜ்ஞாநாபாவத்தாலே அநாதிகால மஸத்கல்பனாய்க் கிடந்தசேதநனுக்கு, பகவத்ஸம்பந்தத்தை யறிவித்து விசேஷியானவவனைக் காட்டிக்கொடுத்தா னென்கை. இத்தா லாசார்யனுடைய சேதநேச்வரர்களிருவர்க்கு முபகாரகனாகையாகிற வைபவம்சொல்லப்பட்டது.

௨௩௦. இன்னமு மொருப்ரகாரத்தாலே யாசார்யவைபவத்தை ப்ரகாசிப்பிக்கிறார் (ஈச்வரன் தானும்) என்றுதுடங்கி. அதாவது இதுக்கிட்டுப்பிறவாதவீச்வரன் தானு மிவ்வாசார்யத்வத்தி னேற்றத்தைப்பற்ற விதிலேமிகவும் ச்ரத்தைபண்ணி யிருக்குமென்கை.

௨௩௧. அதெங்கேகண்டதென்னு மபேக்ஷையிலே யத்தைமுதலிக்கிறார், (ஆகையிறே) என்றுதிடங்கி. அதாவது ஆசார்யத்வத்தை யாசைப்பட்டிருக்கையாலே யிறே, "సదాచార్యవంశో జ్ఞేయః । ఆచార్యాణామసావసావిత్యా భగవత్తః" "ஸதாசார்யவம்சோஜ்ஞேயః । ஆசார்யாணமஸாவஸாவித்யா பகவத்தః" என்னும்படி குருபரம்பரையிலே த்வயோபதேஷ்ட்ருத்வேநாந்வயித்ததும், ஆசார்யக்ருத்யத்தை யேறிட்டுக்கொண்டு அர்ஜுநனுக்கு றித்து தத்வவிவேகாதி சரமோபாய பர்யந்தார்த்த ப்ரதிபாதிகையான

ஆ.—தேறிட்டுக்கொண்டு ஸ்ரீகீதோபநிஷதாசார்யனாய் சரமச்லோகைக ஸாரவதியான ஸ்ரீகீதையையும், வஸிஷ்ட்டசிஷ்யனாய் சரமச்லோகோக்த சரணாகதிப்ரபாவபரமான வபயப்ரதாநத்தையும், அநதிகாரிகளும் கேட்கும்படி ப்ரகாசமாக வருளிச்செய்ததுமென்கிறார்.

௩௩௨. இப்படி ஈச்வரனு மாசைப்படும்படியான தன்னேற்றமுடைய மஹோபகாரகனான வாசார்யனுக்கு, அவனுபகரித்த வுபயவிபூதிக்கும் விபூதிமானுக்கும் ஸத்ருசமாக ப்ரத்யுபகாரம் மிடியனான விவனால் பண்ணலாவது - நித்யவிபூதித்வயமும் லீலாவிபூதித்வயமுமாகிற விபூதிசதுஷ்டயமும், உபய விபூதிமானான வீச்வரத்வித்வமுமாகிற வகடிதமுண்டாகிலென்கிறார் மேல், "యోదద్యాద్భగవద్జ్ఞానమ్ కుర్యాద్ధర్మోపసేవనమ్। కృత్స్నాంవాపృథివీందద్యా న్నతత్తుల్యంకథఞ్చన" "யோதத்யாத்ப் பகவத்ஜ்ஞாநம் குர்யாத்த்தர்மோபஸேவநம் | க்ருத்ஸ்நாம்வா ப்ருதிவீம் தத்யாந் நதத்துல்யம் கதஞ்சந" விறே.

௩௩௩. இப்படி ப்ரத்யுபகாரமற்ற மஹோபகாரகனான வாசார்யனுபகரிக்கும் ஸ்வதந்த்ரனான வீச்வரனோடு சேதநனுக்குண்டான சேஷ சேஷி ஸம்பந்தம், அநாதிஸம்ஸாரஸம்பந்தத்துக்கும் மத்யேவரும் ஸம்ஸார

ஸ்ரீகீதையு மபயப்ரதாநமு மருளிச்செய்ததும்.

௩௩௨. ஆசார்யனுக்கு ஸத்ருசப்ரத்யுபகாரம் பண்ணலாவது விபூதிசதுஷ்டயமு மீச்வரத்வயமு முண்டாகில்.

௩௩௩. ஈச்வரஸம்பந்தம் பந்தமோக்ஷங்க ளிரண்டுக்கும்

ஜீ.—ஸ்ரீகீதையருளிச்செய்ததும், ஸ்ரீவிபீஷணாழ்வான்நிமித்தமாக "సకృదేవ ప్రపన్నాయ తవాస్మీతిచయాచతే। అభయంసర్వభూతేభ్యో దదామ్యేతద్వ్రతంమమ" "ஸக்ருதேவப்ரபந்நாய தவாஸ்மீதிசயாசதே | அபயம்ஸர்வபூதேப்ப்யோ ததாம்யேதத்வ்ரதம்மம" என்றபயப்ரதாந மருளிச்செய்ததுமென்கை. இத்தாலீச்வரனு மாசைப்படும்படியன்றோ வாசார்யத்வத்தின்பெருமையென்றாசார்யவைபவம் சொல்லிற்றாயிற்று.

௩௩௨. இன்னமு மொருவழியாலே யாசார்யவைபவத்தைத்தர்சிப்பிக்கிறார், (ஆசார்யனுக்கு) என்றுதுடங்கி. அதாவது உபயவிபூதியையும் விபூதிமானான வீச்வரனையும் தானிட்டதுவழக்காம்படி பண்ணிக்கொடுத்த வாசார்யன் பண்ணின வுபகாரத்துக்கு ஸத்ருசமாக ப்ரத்யுபகாரம் பண்ணலாவது, இப்படியே யின்னமு மிரண்டுவிபூதியும் விபூதிமானா யிருப்பானொரீச்வரனும் வேறேயுண்டாகிலென்கை. "యోదద్యాద్భగవద్జ్ఞానం కుర్యాద్ధర్మోపసేవనమ్। కృత్స్నాంవాపృథివీందద్యా న్నతత్తుల్యంకథఞ్చన" "யோதத்யாத்ப்பகவத்ஜ்ஞாநம் குர்யாத்த்தர்மோபஸேவநம் | க்ருத்ஸ்நாம்வாப்ருதிவீம்தத்யாந் நதத்துல்யம்கதஞ்சந" என்றாரிறே. இத்தாலாசார்யனுடைய ப்ரத்யுபகாராவகாசரஹித மஹோபகாரகத்வமாகிற வைபவம் சொல்லிற்றாயிற்று.

௩௩௩. இன்னமு மொருமுகத்தாலே யாசார்யவைபவத்தை யருளிச்செய்கிறார், (ஈச்வரஸம்பந்தம்) என்றுதுடங்கி. இவ்விடத்தில் (ஈச்வரஸம்பந்தம்) என்கிறது - (ஈச்வரனைப்பற்றுகை) என்றுகீழ்ச்சொன்ன ததாச்ரய ரூபஸம்பந்தத்தை; அது (பந்தமோக்ஷங்க ளிரண்டுக்கும் பொதுவாகை) யாவது - கர்மாநுகுணமாக ஸம்ஸரிப்பிக்கவும் காருண்யாநுகுணமாக முக்தனுக்கவும் வல்லநிரங்குச ஸ்வதந்த்ரனோடுண்டான

ஆ.—மோக்ஷத்துக்கும் மத்த்யஸ்த்தமாய்க் கொண்டு பொதுவா யநியத மாயிருக்கும்; ஈச்வரனுபகரித்த மஹோபகாரகனுன ஸதாசார்யனேடு ஸச்சிஷ்யனுக்குண்டா மிந்த ஸம்பந்த்தம் விளம்பமற்ற ஸம்ஸார மோக்ஷத்துக்கே ஹேதுவா யபங்குரமா யஹிதம் கலசாதிருக்கும்.

௪௩௪. இப்படி யுபயஸாதாரண ஸ்வதந்த்ரபந்த்துவான பகவானை அயத்நேநலபிக்கை ததபிமதனுன வாசார்யனுலே யுண்டாம்;

௪௩௫. அஸாதாரணபந்த்துவான வாசார்யனேலபிக்கை மஹோபகாரகனுன பகவானுலேயுண்டாம்.

௪௩௬. ஆகி லுபயரு முபகாரகராமிடத்தில் ஸமரோவென்ன, ஈச்வரனே மஹோபகாரகனென்கிருர் மேல், (உபகார்யவஸ்து) இத்யாதியால். ஆசார்யனு மீச்வரனு முபகரித்தவஸ்துக்களைச்சேரத்தூக்கிப்பார்த்தால், ஆசார்யோபகார்யவஸ்துவான பகவத்விஷயத்தைப்பற்ற பகவதுபகார்ய

---

பொதுவாயிருக்கும். ஆசார்யஸம்பந்த்தம் மோக்ஷத்துக்கே ஹேதுவாயிருக்கும்.

௪௩௪. பகவல்லாபமாசார்யனுலே.

௪௩௫. ஆசார்யலாபம் பகவானுலே.

௪௩௬. உபகார்யவஸ்து கௌரவத்தாலே

---

ஜீ.—ஸம்பந்த்தமாகையாலே, உபயஸாதாரணமாயிருக்கை;(ஆசார்யஸம் பந்த்த) மாகிறது - (ஆசார்யனேப்பற்றுகை) என்று கீழ்ச்சொன்ன ததாச்ரயண ரூபஸம்பந்த்தம், அது (மோக்ஷத்துக்குஹேது வாகை) யாவது கர்மாநுகுணமாக ஸம்ஸரிக்கவும் விடும் ஸ்வதந்த்ரனன்றிக்கே ஸர்வப்ரகாரத்தாலும் இவனை யுஜ்ஜீவிப்பித்தேவிடும் நிரநிசயக்ருபாவானேட்டை ஸம்பந்த்தமாகையாலே, ஸம்ஸாரமோக்ஷங்களுக்குப் பொதுவன்றிக்கே ஸம்ஸாரவிமோசநைகஹேதுவா யிருக்கை. இத்தால் மோக்ஷைகஹேதுத்வநிபந்த்தநமானவைபவம் சொல்லப்பட்டது.

௪௩௪. உத்தாரகத்வத்தி லாசார்யனுடையவாதிக்யத்தை யருளிச்செய்தார்கீழ், உபகாரகத்வத்தி லீச்வரனுடைய வாதிக்யத்தை யருளிச்செய்கைக்காக வடிகொண்டெழுந்திருக்கிருர்மேல், (பகவல்லாபம்) என்று துடங்கி. அதாவது நிருபாதிகசேஷியாய் நிரங்குச ஸ்வதந்த்ரனுயிருக்கும் பகவானைலபிக்கை தத்ஸம்ருத்த்யேக ப்ரயோஜநனுய்க்கொண்டு மங்களாசாஸநத்துக் காளாகவேணுமென்று தன்னை யங்கீகரித்து, தத்வ்யாமோஹவிஷயமாக்கின ஸ்வாசார்யனுலேயென்கை.

௪௩௫. ஏவம்பூதனுனவாசார்யன் தன்னைலபிக்கைக்கு ஹேதுவேதென்னு மபேக்ஷையிலே யருளிச்செய்கிருர், (ஆசார்யலாபம்) என்றுதுடங்கி. அதாவது பகவல்லாபஹேதுவாய் பரமப்ராப்யபூதனுன வாசார்யனைலபிக்கை, "ఈశ్వరస్యచ సౌహార్దమ్" "ஈச்வரஸ்யச ஸௌஹார்தம்" இத்யாதிப்படியே நிருபாதிக ஸௌஹ்ருத்தாய் விசேஷகடாக்ஷப்பற்றுசைகளையும் தானேகற்பித்துக்கொண்டு விசேஷகடாக்ஷத்தைப்பண்ணி, அத்வேஷத்தைப்பிறப்பித் தாபிமுக்க்யத்தையுண்டாக்கி ஸாத்விகஸம்ப்பாஷணத்திலேமூட்டி ஸதாசார்ய ப்ராப்தியைப்பண்ணிவிக்கும் நிர்ஹேதுகக்ருபாவானுன பகவானுலேயென்கை.

௪௩௬. ஆனுலிருவரு முபகாரத்தில் ஸமரோவென்ன வருளிச்செய்கிருர், (உபகார்யவஸ்து) என்றுதுடங்கி. அதாவது உபயரு முபகரித்த வஸ்துக்களைச் சீர்தூக்கிப்பார்த்தால், ஆசார்யோபகார்யவஸ்துவான

ஆ.—வஸ்துவான வாசார்யகௌரவத்தாலே, ஈச்வரனையுபகரித்த வாசார்யனைப்பற்ற மிகவும் மஹோபகாரகன் ஆசார்யனை யுபகரித்த வீச்வரனே யென்கிறார். "ఈశ్వరస్యచ సౌహార్దమ్" "ஈச்வரஸ்யச ஸௌஹார்த்தம்" இத்யாதிகளில் ஆசார்யப்ராப்திஹேதுவாகவிறே யுவ னுபகரிப்பது.

௪௩௭. இப்படி மஹோபகாரகனுன வீச்வரனையுபகரிக்கு மாசார்யன் திருவடிகளில் தனக்குண்டான சேஷபூதசிஷ்யத்வஸம்பந்த்தம், தேவதாந்தர மந்த்ராந்தராதி தோஷகந்த்தஸ்பர்சத்தாலே கலங்கிக்குலையாதே ஸத்தையுடன் கிடக்கப்பெற்றால், ஸ்வரூபாலங்காரமான தத்வஜ்ஞாநம் அநந்யபக்தி அந்யவைராக்யங்களில்லாவிடினும், தத்ஸம்பந்த்தத்தாலேமெள்ள வுண்டாக்கிக் கொள்ளலாம், ம்ருதஸஞ்ஜீவநமான வாசார்யஸம்பந்த்தம் நிஷித்தாநுஷ்ட்டாநாந்வயலேசத்தாலே யவன்கைவிடும்படி குலைந்தர்த்தமே விளைந்தால், ஆத்மாலங்காரமான வந்த ஜ்ஞாநாதிகள் அகடிதகடநமாக வுண்டானப்போலே தோற்றித்தாகிலும், அவத்யகரங்களாமத்தனை யல்லது அவற்றால் வரும் ஸ்வபரப்ரயோஜநமில்லை.

---

ஆசார்யனில்காட்டில் மிகவுமுபகாரக னீச்வரன்.

௪௩௭. ஆசார்யஸம்பந்த்தம் குலையாதேகிடந்தால் ஜ்ஞாநபக்தி வைராக்யங்க ளுண்டாக்கிக்கொள்ளலாம். ஆசார்ய ஸம்பந்த்தம் குலைந்தால் அவையுண்டானாலும் ப்ரயோஜநமில்லை.

---

ஜீ.—பந்த்தமோக்ஷோபயஹேதுவாய் ப்ரதமபர்வமுமா யிருக்கிறபகவத்விஷயத்தில் காட்டில் பகவதுபகார்யவஸ்துவான மோக்ஷைகஹேதுவாய் சரமபர்வமுமா யிருக்கிற வாசார்யவிஷயத்தினுடைய கௌரவத்தாலே, ஈச்வரனை யுபகரித்தவாசார்யனில் காட்டில் ஆசார்யனையுபகரித்த வீச்வரன் மஹோபகாரகனென்கை.

௪௩௭. "నమోఽచిన్త్యాద్భుతాక్లిష్ట జ్ఞానవైరాగ్యరాశయే । నాథాయమునయేఽగాధ భగవద్భక్తిసిన్ధవే" "நமோசிந்த்யாத்புதாக்லிஷ்ட ஜ்ஞாநவைராக்யராசயே। நாதாயமுநயேऽகாத பகவத்ப்பக்திஸிந்த்தவே" என்கிறபடியே ஆசார்யன் தனக்கேற்றம் ஜ்ஞாநவைராக்யபக்திகளாலேயிறே; அந்தஜ்ஞாநவைராக்யபக்திகளுண்டானவ னித்த வாசார்யஸம்பந்த்தத்தை நெகிழுகின்றானாகிலும் அவை பகவல்லாபத்துக் குடலாமோவென்ன வருளிச்செய்கிறார்மேல், (ஆசார்யஸம்பந்த்தம் குலையாதே கிடந்தால்) என்றுதுடங்கி. அதாவது- கீழ்ச்சொன்னபடியே யுத்தாரகனுமா யுபகாரகனுமா யிருந்துள்ள ஸ்வாசார்யன் இவனென்னுடையவனென் றபிமானித்திருக்கும்படி அவன் திருவடிகளில் தனக்குண்டானஸம்பந்த்தம், ஸ்வவிப்ரதிபத்தியாலே குலையாதபடி அதைநோக்கிக்கொண்டு கிடந்தால், ஆத்மாலங்காரங்களான தத்வஜ்ஞாந மப்ராப்திவிஷய வைராக்யம் ப்ராப்தவிஷயபக்தியாகிற வாத்மகுணங்களில்லை யாகிலும், அவ்வாசார்ய ப்ரஸாதாதிகளாலே க்ரமேண வுண்டாக்கிக்கொள்ளலாம்; ஸர்வமங்கள ஹேதுவான வந்த வாசார்ய ஸம்பந்த்தம் ஸ்வவிப்ரதிபத்தியாலே குலைந்தால், ஜ்ஞாநாதிகளானவவை பூர்வஸுக்ருதங்களாலே சிறிதுண்டாயிற்றாகிலும் பகவதங்கீகார ஹேதுவாகாமையாலே நிஷ்ப்ரயோஜநமென்கை.

ஆ.—௪௩௮. என்போல வென்னில் “పతివ్రతానిమిత్తంహి వలయాదివిభూషణమ్” “பதிவ்ரதாநிமித்தம்ஹி வலயாதிவிபூஷணம்” என்று பதிவ்ரதைக்கு பதிஸம்பந்தஸூசகமாய் ப்ரதமாலங்காரமான தாலியொன்றும் போகாமல் கிடந்தால் வலயாதிவிபூஷணங்களெல்லா முண்டானபோது பண்ணிக்கூச்சமறப் பூணலாம், அவை பூணாதிருந்தால் வரும் குறையில்லை, அபிரூபைக்குத் தாலியளவே போரும்; அத்தாலி யொன்றும் போனால் அலங்காரமான வலயாதிவிபூஷணம் தானே விதவாலங்காரமாய் பாதிவ்ரத்யத்துக்கவத்யத்தை விளைக்கும். அப்படி யாசார்ய ஸம்பந்தமற்ற ஜ்ஞாநாதிகளும் சிஷ்யனுக்கவத்யமாய்த் தலைக்கட்டு மத்தனை.

௪௩௯. இந்த ஸம்பந்தம்குலையில் பரமபந்துதானே விடப்பார்க்குமென்கிறார்மேல்(தாமரை) இத்யாதியால். “నారాయణో౽పి వికృతిం యాతిగురోః ప్రచ్యుతస్యదుర్బుద్ధేః। కమలంజలాదపేతం శోషయతిరవిర్న తోషయతి” “நாராயணோऽபி விக்ருதிம்யாதிகுரோஃ ப்ரச்யுதஸ்ய துர்புத்தேஃ । கமலம் ஜலாதபேதம் சோஷயதிரவிர்நதோஷயதி” என்றும் ஜலத்தில்பிறந்து ஜலமேதாரகமாய் ஜலத்தைவிடாதே செவ்வி பெற்றுப்போரும் தாமரையைத்தானேயலர்த்தக்கடவபாந்தவமுள்ள வாதித்யன், தாரகமானவன் நீரை அங்யர்பிரிக்கப்

---

௪௩௮. தாலிகிடந்தால் பூஷணங்கள் பண்ணிப்பூணலாம்; தாலிபோனால் பூஷணங்களெல்லா மவத்யத்தைவிளைக்கும்.

௪௩௯. தாமரையை யலர்த்தக்கடவ வாதித்யந்தானே, நீரைப் பிரிந்தா லத்தை யுலர்த்துமாபோலே, ஸ்வரூப விகா

---

ஜீ.—௪௩௮. ப்ரயோஜநமில்லாமையே யன்று அவத்யகரமுமென்கிறார், (தாலிகிடந்தால்) என்றுதுடங்கி. அதாவது பதிவ்ரதையான ஸ்த்ரீக்கு பதிஸம்பந்தஸூசகமான தாலியொன்றும் போகாமல்கிடந்தால், பூஷணங்களில்லையே யாகிலும் முதலுண்டானபோது பண்ணிப்பூண்டு கொள்ளலாயிருக்கும்; இத்தனைபூஷணமுண்டேயென்று நினைத்து தாலியை வாங்கிப்பொகட்டால், விதவாலங்கார கல்பமாகையாலே பூண்டபூஷணங்களெல்லா மவத்யாவஹங்களா யிருக்குமென்கை. இத்தா லாத்மபூஷணங்களான ஜ்ஞாநவைராக்யபக்திக ளில்லையேயாகிலும் ஆசார்யஸம்பந்தமாத்ரம் குலையாமல்கிடந்தால் அவன் ப்ரஸாதத்தாலே யவைகளைக்ரமேண வுண்டாக்கிக்கொள்ளலாம்; ஆசார்யஸம்பந்த மித்தனையும் குலைந்தால் ஆத்மகுணங்களான ஜ்ஞாநவைராக்ய பக்திகளெல்லா முண்டானாலும், அவை ச்லாக்யதாஹேதுவன்றிக்கே அவத்யாவஹமாய் விடுமென்றபடி.

௪௩௯. ஆசார்யஸம்பந்தம் கிடந்தாலும் ஸ்வரூப விகாஸகனீச்வரனன்றோ, அது குலைந்ததாகிலும் இத்தனை யாத்மகுணமுடையவனுக்கு அவன் ஸ்வரூபவிகாஸத்தைப் பண்ணானோவென்கிற சங்கையிலே யருளிச்செய்கிறார், (தாமரையை) என்றுதுடங்கி. அதாவது ஜலஜமென்னும்படி ஜலத்திலேபிறந்து ஜலைகதாரகமாயிருக்கும் தாமரைக்கு “செங்கமலமந்தரம்சேர் வெங்கதிரோற்கல்லாலலராவால்” என்னும்படி நியமேந விகாஸகனாய்ப் போருமாதித்யந்தானே, ஸ்வதாரகமான ஜலத்தைவிச்லேஷித்தால் அந்தத்தாமரையை விகஸிப்பியாத மாத்ரமன்றிக்கே சோஷிப்பிக்குமாபோலே, ஆசார்யாந்வயத்தாலே ஸத்தைபெற்று ஸ்வஸத்தாதாரகமான தத்ஸம்பந்தம்குலையாதே நிற்குமளவில், இவனுடைய ஸ்வரூபத்தை ஜ்ஞாநவிகாஸமுகேந “உள்ளவுலகளவும் யானுமுளனாவன்” என்னும்படி விகஸிப்பிக்கு மீச்வரந்தானே, ஸ்வஸத்தாதாரகமான வாசார்ய

ஆ.—பிரிந்தால் அப்பசையற வுலர்த்துமாபோலே "సహివిద్యాతస్తజ్జనయతి" "ஸஹிவித்யாதஸ்தஞ்ஜநயதி" என்ருசார்யன் திருவடிகளிலே பிறந்து அதுவேதாரகமாய் அவனபிமாநத்திலே யிடாமலொதுங்கிச் செந்தலிக்கும் ஸ்வரூபத்தை மேல்விழுந்து தானே நோக்கி "ஊள்ள வுலகளவும் யானுமுளனுவன்" என்னும்படி தத்ஜ்ஞாநவிகாஸத்தைப் பண்ணும் பரமபந்துவான வீச்வரந்தானே தேவதாந்தராத்யந்யஸ்பர்சத்தாலே ஸத்தாதாரகமான வாசார்ய ஸம்பந்த்தம் குலைந்து பஹிஷ்க்ருதனுனுல், தானுலர்த்தத்தக்க வந்த ஸ்வரூபத்தை சேஷத்வ ரூபஜ்ஞாநப்பசையற கண்ணற்று சீறி நோக்கி யுபயோக யோக்யமல்லாதபடி வாடப்பண்ணும். இந்த வாசார்ய ஸம்பந்த்தம் குலைந்ததாகில் பழையபகவத்ஸம்பந்த்தத்தை யுண்டாக்கிக் கொள்ளுகிறோமென்னவொண்ணுது.

௪௪௦. ஸ்வரூபோஜ்ஜீவநமாய்க் கொண்டு ப்ரதாநமான விந்த வாசார்யஸம்பந்த்தத்தை யொழியில், இதடியாக வுண்டாய் நிலை நிற்கும் ஸ்வரூபோஜ்ஜீவக பகவத்ஸம்பந்த்தம் யாவதாத்மபாவி துர்லபம்; தத்ஸம்பந்த்தம் குலைந்துகிடந்தவளவிலும் ஏதத்ஸம்பந்த்தம் ஸுலபமாம்; இது குலைந்தால் பின்னையொருக்காலும் ஸுலபமாகமாட்டாதென்றபடி.

௪௪௧. ஆனுலிந்த பகவத்ஸம்பந்த்த ஸ்த்தாபகமான வாசார்யஸம்பந்த்தமும், இத்தாலே ஸ்த்தாபிதமான பகவத்ஸம்பந்த்தமும், இவன் ஸ்வரூப முஜ்ஜீவிக்கைக்கமையாதோ, ப்ரதம ரஹஸ்யமத்யமபத ப்ரதி

---

ஸத்தைப்பண்ணு மீச்வரந்தானே, ஆசார்யஸம்பந்த்தம் குலைந்தா லத்தைவாடப்பண்ணும்.

௪௪௦. இத்தையொழிய பகவத்ஸம்பந்த்தம் துர்லபம்.

௪௪௧. இரண்டுமமையாதோ, நடுவில்

---

ஜீ.—ஸம்பந்த்தத்தை ஸ்வவிப்ரதிபத்தியாலே இவன்குலைத்துக்கொண்ட காலத்தில் தான் விகஸிப்பிக்கக் கடவவந்த ஸ்வரூபத்தை விகஸிப்பியாதமாத்ர மன்றிக்கே நாளுக்கு நாளும் நஷ்டப்ரஜ்ஞமாய் ஸங்கோசித்துப் போம்படி பண்ணுமென்கை. "నారాయణోపివికృతిం యాతిగురోః ప్రచ్యుతస్యదుర్బుద్ధేః । కమలంజలాదపేతం శోషయతిరవిర్నతోషయతి" "நாராயணேபிவிக்ருதிம் யாதிகுரோः ப்ரச்யுதஸ்யதுர்புத்தேः । கமலம்ஜலாதபேதம் சோஷயதிரவிர்நதோஷயதி" என்னக்கடவதிறே.

௪௪௦. இங்ஙன் சொல்லுகிறதென் இவ்வாசார்யஸம்பந்த்தம் குலைந்ததாகிலும் "ஒழிக்கவொழியாது" என்கிறபகவத்ஸம்பந்த்த முஜ்ஜீவநத்துக் குடலாகாதோவென்ன வருளிச்செய்கிறார், (இத்தையொழிய) என்றுதுடங்கி. அதாவது அநாதிஸித்த்தமாயிருக்கச் செய்தேயும், ஆசார்யனுணர்த்துவதற்கு முன்பு அஸத்கல்பமாய் அவனுணர்த்தின பின்பு இவனுக்கு கார்யகரமாகக்கடவதா யிருக்குமது, இவ்வாசார்யஸம்பந்த்தம் குலைந்தபோது இதடியாகவந்ததானும் குலைந்துபோமாகையாலே, இவ்வாசார்ய ஸம்பந்த்தத்தை யொழிய பகவத்ஸம்பந்த்த மிவனுக்குக் கிடையாதென்கை. ஆகையா லிதுபோயிற்றுகிலும் அதுநமக் குஜ்ஜீவநத்துக்குடலென்றிருக்க விரகில்லையென்றுகருத்து.

௪௪௧. இப்படி யாசார்யஸம்பந்த்தத்தை யொழிய பகவத்ஸம்பந்த்தம் லபியாமையாலே ஆத்மோஜ்ஜீவநத்துக் கிரண்டும் வேணுமென்னுமத்தை தர்சிப்பித்தவநந்தரம், பாகவதவிஷயஸம்பந்த்தமு மவ்வோபாதி யிவனுக் கவச்யாபேக்ஷிதமென்னுமத்தை தர்சிப்பிக்கைக்காக தத்விஷய ப்ரச்

